உ

சிவமயம்.

# ஆயிரத்தெட்டு
# சிவக்ஷேத்திரமாலை,

இஃது

மதுரைஜில்லா இராமநாதபுரம் சமஸ்தானம்
பள்ளிமடந்தாலூகா திருச்சுழிகைபிற்கா கல்லூரணிடிவிஷன்
குல்லம்பட்டியென்ற துளசிநகரத்தில்
வசிக்காநின்ற
விஸ்வப்ராஹ்மண குலதிலகராகிய சுவர்னரிஷிகோத்திரம்
ஷை கிராமம் நோட்டமிராஸ் மகா-௱-௱-ஸ்ரீ
சோலைமலை யாச்சாரியா ரவர்கள் குமாரர்

## திருப்பதி வெங்கடாசலபதியாச்சாரி

அவர்களா லியற்றியதை

குண்டலக்குத்தூர் ஆ. திருவெங்கடக் கவிராயர்
அவர்களால் பரிசோதிக்கப்பெற்று

மேற்படி

## திருப்பதி வெங்கடாசலபதியாச்சாரி

அவர்களால்

மதுரைப் புதுமண்டபம் புத்தகஷாப்
இ. ராம.
குருசாமிக்கோனார் அவர்களது
மதுரை வடக்குமாசிவீதி
ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

விலை ரூ. 1911. 1—4—0.

Registered Copy Right.

PRESENTED BY:
V. PR. PL. M.
KASIVISWANATHAN CHETTIAR
PAGANERI.





சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.



ஏழாயிரம்பண்ணை சமஸ்தான வித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ

## சுந்தரமகாலிங்கக்கவிராயரவர்கள்.

இயற்றிய

## ஆசிரியப்பா.



சீரார்தாமரை செறிபுனற்றழுவுங்
காரார் கொடுமுடிக்கனக நன்னிறச்
சிமைய மோங்கிய விமையமால்வரை
யமை பொருந்தோளி யுமையவடன்னை
கடிமணங் கொள்ளக் கருதியகாலை
மிடிதுயரில்லா விண்ணவர் முனிவர்
படிமிசை வாழுனர் பலரொருங்கீண்ட
வடதிசை தாழக் குடமுனி தன்னைத்.
தென்றிசையிருந்து சீர்பெறச் செய்தி
யென்றிறை யியம்ப நன்றென வேத்தி
யன்றருள் முனிவந்தரு ளொடுமிருந்தவித்
தென்றிசை தன்னிற் றெய்வீகம் பெறு
மிராமநாத புரத் திறை யாட்சியிற்
பராவுஞ் சோலை பற்பலகெழுமி
வளம் பெறுந்துளசி மாநகர் தன்னிற்
றுளக்கமில் விஸ்வ குலத்திற் றோன்றுஞ்
சோலைமலை சுதன் றொழில் புகழான்
வேலையிலுதித்து விளங்குங் கதிரோன்
கருப்பு வில்லேந்துங் காளைமதனன்
பொருப்பென வோங்கிப் பூரித்துளபுயன்
சந்திரவதனன் றன தனை நிகர்வோ
னிந்திர நருக்கு ளிவற் காய்ப்பயந்து

வான்மிசை யொளிக்க மழை யெனக்கனக
தானமெப்போதுந் தயவுடன்றருவோன்
கல்விக்கடலைக் கடைந்து குடித்த
சொல்விற்பனனுந் தோகையர் மோகன்
கம்பனென் றெவருங் கருதியே யேத்தச்
செம்பொருளிலக் கணந் தெளி தரவுணர்ந்தோன்
விசையனே நிகராய் வீரரில்வீரன்
திசையெலாம் புரக்குந் தீரரிற்றீரன்
எங்குமெய்ச் சொல்லே யியம்புந்திருப்பதி
வெங்கடாசலபதி யெனும் பெயர்மேலோன்
பாலொடுகனியும் பாகுகற் கண்டுங்
கோலொடு தேனுங் கொண்டவானமுதுங்
கைத்திடும்வண்ணங் கண்ணுதற் பெருமா
னெத்திசை யோர்க்கு மின்பமேயருள
தேவியோடெழுந்த சிவாலயம் பலவினும்
மேவியேதோன்றி விளங்குந் தலங்களுள்
அங்கணன் சேத்திர மாயிரத்தெட்டையும்
பொங்கமாய்த்திரட்டிப் புகழ்பெறுஞ் சிவனூர்
சேத்திரமாலை யெனப்பெயர் சேர்த்தி
நேர்த்தியாயிந்த நீணிலம் புகழு
மன்னதை யன்பா யாராய்ந் தெடுத்துப்
பன்னரு மதுரைப் பதிமிசையுலவு
வடக்குமாசியாய் மன்னும் வீதியில்
மடக்கொடி மோகன் மதியிற்சுமதி
சொன்மொழிமருத தூயவைங்கணை மதன்
மீன்மணிக்குருசா மிப் பெயர்மேலோன்
றனதாம் ராமச்சந்திரவிலாச
மினிதாய் விளங்கு மெந்திரசாலையில்
அச்சிலியற்றி யருமையா யீந்தா
னிச்செகத்தோர் புகழ்ந்தேத்திடத் தானே



கொடைக்கானல் மகா-ள-ள-ஸ்ரீ

## எம் தெய்வநாயகம்பிள்ளையவர்கள்.

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருப்புவனந் தனிற்பரமன் வரப்பிரசா தந்தரத்தன்
சித்தத் துள்ளே
விருப்புடன்வீற் றிருந்ததல மாயிரத்தெட் டினையவள
வின வெண்பாவாய்த்
தருப்பொலியுந் துளசிநகர்ச் சோலைமலை வேள்புரிந்த
தவத்திற் றோன்றுந்
திருப்பதிவேங் கடாசலப திக்கவிஞ
னமுதமெனச் செப்பினனால்.

மதுரை மேலமாசிவீதி மகா-ள-ள-ஸ்ரீ

## மு. திருமலைமுத்துப்பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தேனார்பூம் பொழில்வளையுந் துளசிநகர் விசுவகுல
திலகன் மோக
மானார்கண் மடலெழுது வடிவழக ஞஞ்சோலை
மலையென் றோதுங்
கோனார்நற் றவக்குமரன் வேங்கடா சலபதிசு
குணவான் றேர்ந்து
மானார்செங் கரமுறுசங் கரனுமையோ டெழுந்தருளி
வழங்கு கின்ற.

### வெண்பா.

சகத்திரத் தெட்டுத் தலங்கட்கு மொவ்வோர்
மிகத்திரவெண் பாக்கள் விளம்பி—யிகத்தில்
சிவச்சேத்ர மாலையெனச் சீர்நாம மிட்டான்
பவச்சேதம் போகப் பரிந்து.

கஞ்சமாநகரம் மகாவித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ
வெங்கடாசலம்பிள்ளையவர்கள் மாணுக்கருளொருவரும்
வைத்தியம் சோதிடவித்வானுமாகிய
ஆத்திபட்டி பெரியசாமிமூப்பனாரவர்கள்.
இயற்றிய
கட்டளைக் கலித்துறை.



மிகத்தனஞ் சேர்குல்லை யம்பதியிற்றிகழ் மேதகுசீர்
மகத்துவங்கொண்ட தவத்துயர்விஸ்வ மரபில் வந்தோன்
செகத்தினிற்சோலை மலையருள் சீலன் திருப்பதிவேள்
சகஸ்த்திரதெட்டின் சிவாலய மாலையைச் சாற்றினனே



சாத்தூர்தாலூகா நாலாட்டின் புத்தூர் சங்கீதசாய்த்ய.
அரிபத்திவிசைய கதாப்பிரசங்கவித்வானும் மகா-ா-ா-ஸ்ரீ
கவி வீரநல்லானவர்கள் மாணுக்கருளொருவருமாகிய
கோ. வெங்கடாசல மாச்சாரியாரவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.



தாதளைந்து விளரிவண்டு கண்படுக்கும் பூங்குழலார்
சக்குங் கன்னல்
மாதுநகைக் கொண்டமதன் மலரம்பி னிகலலது
வழுத்த வுண்டோ
நீதிவளங் கொண்டகுல்லைப் பதியில்விஸ்வ குலதீபன்
நீண்ட நேமி
மீதுதிருப் பதிவேளா யிரத்தெட்டு சிவாலயத்தார்
வேய்ந்தான் மன்னே.



இராமநாதபுரஞ்ஜில்லா சாத்தூர்தாலூகா
குண்டலகுத்தூரில் வசிக்காநின்ற மகா-ா-ா-ஸ்ரீ
ஆலங்குடியாச்சாரியாரவர்கள் குமாரர்
திருவேங்கடக்கவிராயரவர்கள்.
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.



சீரிருக்குஞ் செழுங்கமலத் திருவிருக்கும் புயத்தோனம்
புயத்தோன் செய்யக்
கூரிருக்கும் வெண்டரள கோடிருக்கு மேனமனக்
கோலங் கொண்டு
பாரிருக்கும் லவ்வானிற் படிந்திருக்கு மடிமுடியைப்
பார்த்தர்க் கெட்டா
வாரிருக்குஞ் சடையனிட மகிழ்ந்திருக்கு மங்கையற்கண்
வழுதி நாட்டில்.

திருமதுரை ஜில்லாரா மநாதபுரஞ் சீமைபள்ளி
மடந் தாலூகா
பெருமதுரை மொழிமடவார் மகிழ்சுழிகை பிற்காவிற்
பிறங்குந் தூய
வருமதுரை தமிழ்ப்புலவர் புகழ்கல்லூ ரணிடிவிஷ
னதற்கு மேல்பால்
தருமதுரைக் கிளையவனுக் கிளையவனத் தன்பதிபோல்
தகுசீர் சாலும்.

தடமதனி லுறும்வாளை மீன்பூக மடல்கிறித்
தாவி மேகத்
திடமதனி லாடிவரும் பணைசூழுந் துளசிநகர்க்
கிறைவ னந்தக்
குடமதனி லண்மகவுக் குதவுவனும் புகலரியக்
குடையால் மிக்கோன்
இடமதனில் வனமதனன் சோலைமலை யெனும்பூமன்
செய் தவத்தால்.

ஆதிவிசு வப்பிரம மரபின்வழு வாதுவரு
மழகன் றாய
சோதியி சானியப்பிர வரையினுன் றௌப்பியா
சூத்தி ரத்தான்
சாதிமுதல் சுவர்னரிசி கோத்திரத்தான் பிரணவவே
தத்தி யானன்
மாதிலகுந் திருப்புயத்தில் பொற்பூணு லணிந்துநிதம்
வயங்கு மேலோன்.

துலங்குதிரு மணிமகர குண்டலத்தோன் பொற்பிரம்புந்
தோன்றுஞ் செங்கை
யிலங்குமஞ்சட் குடையுடையோ னூர்த்தபுண்ட ரமுதலி
லிசையும் வாகன்
பலங்குலவி வருமனுமக் கொடியுயர்த்தோன் திருமாலின்
பதம் பராவி
நலங்குலவி வருசுகுண திடபுருட ரத்தினமாம்
நளின பூமன்.

செயவனச மலரிலகு கடல்புடைசூ ழுலகிலுயர்
தினமு முய்ய
நயவசன முடனருள்செய் விசுவகுல திலகமென
நவில வந்தோன்
புயவரைய தெனவிலகுஞ் சமரதிட மிகுமதனன்
புனித நேமன்
வியவரத சுகுணதிருப் பதிவெங்க டாசலபூ
பதிவே தத்தன்.

தலமதனி லிலகுசிவா லயங்களா யிரத்தெட்டுந்
தமிழ்வெண் பாவாற்
புலமதனாற் சிவக்ஷேத்திர மாலையெனப் பெயர்கொடுத்து
புனைந்தா னம்பால்
நிலமதனி லுறுபுலவ ரகுதுணர்ந்தே வமுதமென
நிகழ்த்து மாறு
குலமதனுக் கொருகதிர்போல் விளங்கவச்சி லிட்டதனைக்
கொடுத்தான் மன்றே.

## இந்த ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரமாலையை அச்சிட்டுக் கொடுக்கும்படி

# கேட்டுக்கொண்ட கனவான்கள்.

---

| | |
|---|---|
| குல்லம்பட்டிக்கிராமம் | பெ-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | பெ-அ திருமலையாச்சாரியவர்கள் |
| ,, | பெ-அ சோலைமலையாச்சாரியவர்கள் |
| ,, | பெ-அ வெங்கடாசலமாச்சாரியவர்கள் |
| ,, | இந்நூலியற்றியவர் குமாரர் சோ-லை-தி சோலைமலையாச்சாரியவர்கள் |
| ,, | செ-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | செ-அ ஸ்ரீநிவாசகமாச்சாரியவர்கள் |
| ,, | க-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | வெ சோலைமலையாச்சாரியவர்கள் |
| ,, | வெ அழகிரியாச்சாரியவர்கள் |
| ,, | தி-பூ சோலைமலையாச்சாரியவர்கள் |
| ,, | ஆ-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | உபாத்தியாயர் கோ-சி-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | கோ-அ அழகிரிசாமியாச்சாரியவர்கள் |
| ,, | கோ-அ சுப்பராயலுஆச்சாரியவர்கள் |
| ,, | கோ-அ சோலைமலையாச்சாரியவர்கள் |
| ,, | கோ-அ சின்னச்சாமியாச்சாரியவர்கள் |
| ,, | ம-வெ வையனாச்சாரியவர்கள் |
| ,, | ம-வெ வெங்கடப்பனாச்சாரியவர்கள் |
| ,, | ம-வெ வெங்கடசுப்பனாச்சாரியவர்கள் |
| ,, | ம-வெ ஸ்ரீநிவாசகமாச்சாரியவர்கள் |
| ,, | ம-வெ சங்கரநாராயணஆச்சாரியவர்கள் |
| பந்தலகுடிஉள்க்கிடை | வெள்ளையாபுரம் வை சித்தனாச்சாரியவர்கள் |
| | இந்நூலியற்றியவர் சிநேகிதர் பாம்பாட்டி தானப்பமுதலியாரவர்கள். |
| ஆத்திபட்டி | நோ-ச சுப்பிரமணியனாச்சாரியவர்கள் |
| ,, | வ-யி பாண்டியம்பிள்ளையவர்கள் |
| பாலவனத்தம் | வ ராமசாமியாச்சாரியவர்கள் |
| கோவில்பட்டி. | சோ முத்தழகிரியாச்சாரியவர்கள் |

சாத்தூர்தாலுகா மேட்டுப்பட்டி சாமியார், ச வெங்கடசாமியாச் [சாரியவர்கள்

| | |
|---|---|
| கொழும்பு | செட்டித்தெரு வேந்தன்பட்டி, |
| ,, | வெ-சி கருத்தாஞ்செட்டியாரவர்கள் |
| ,, | வெ-சி முத்துராமஞ்செட்டியாரவர்கள் |
| கண்டி ராஜவீதி | மீராஞூச்சாரியவர்கள் |
| நாவலப்பட்டி | சைவ முத்துக்குமாருசேருவைகாரரவர்கள் |
| தெய்வபட்டிகடை | நா-க முத்தையாசெட்டியாரவர்கள் |
| ,, | கணக்குமுத்துகருப்பஞ்செட்டியாரவர்கள் |
| ,, | வீதி சணவேலி காளிமுத்துபிள்ளையவர்கள் |
| டிக்கோயாகடை | வெ-சு-சு சுப்பிரமணியஞ்செட்டியாரவர்கள் |
| ,, | கடைவீதிகடை சா-க-ரு முத்தையாசெட் [டியாரவர்கள் |
| எமலாதோட்டம் | ஏட் சோலைமலைக்கங்காணியவர்கள் |
| சாமிமலைஅரிசிதோட்டம் | ஏட் மூக்கபிள்ளை யென்ற ஆனைக்குட்டி [யாபிள்ளையவர்கள் |
| ரூபாகொல்லை | வ-க-மா அயிலாண்டம்பிள்ளையவர்கள் |
| பெரியஅறத்தோட்டம் | ஏட் சடையன்கங்காணியவர்கள் |
| ,, | கணக்கு ராமசாமிதேவரவர்கள் |
| ,, | கடை கார்செ-அ செங்காயபிள்ளையவர்கள் |
| ,, | கடைகணக்கு பொ பிச்சைக்கண்ணுநாடா [ரவர்கள் |
| லெட்சுமி தோட்டம் | கடை வை மருதைபிள்ளையவர்கள் |
| ,, | கடை கணக்கு வை-தி செல்லய்யாபிள்ளை [யவர்கள் |
| ,, | கடைவீதி காவனூர் இ-ரா-ம முனியாண் [டி ஆச்சாரியவர்கள் |
| மல்லியப்பூத்தோட்டம் | ஏட் பெருமாள்ரெட்டியாரவர்கள் |
| ,, | கணக்கு செல்லப்பரெட்டியாரவர்கள் |
| சின்னஅறத் தோட்டம் | ஏட் ச. பழனியாண்டிகங்காணியவர்கள் |
| ,, | குப்புசாமிகங்காணியவர்கள் |
| ,, | கணக்கு பெருமாள்க்கவுண்டரவர்கள் |
| ,, | கதிரேசன்கோவில் அர்ச்சகர் முத்துக்கரு [ப்ப பண்டாரமவர்கள் |
| செல்வக்கந்தைதோட்டம் | கடை உ. மா. ரா. ம. சு. ராமசாமிசெட் [டியாரவர்கள் |

,, கடை உண்ணாமலைசெட்டியாரவர்கள்

கொட்டியாகொல்லை கடைத்தெரு சொக்கலிங்கமாச்சாரியவர்கள்

கல்புடவுதோட்டம் ஏட் உப்புலியக்குண்டு வீ. பெரியசாமிகங்
[காணியவர்கள்

,, ஏட் பெ. செல்லன்கங்காணியவர்கள்

,, நல்லதம்பிகணக்கபிள்ளையவர்கள்

,, பிடாரன்கணக்கபிள்ளையவர்கள்

,, கடை உ, மா. ரா. ம. சு. அரிகரபுத்திரன்
[செட்டியாரவர்கள்

,, கடை ,, குமாரர் வாலகுருவஞ்செட்டி
[யாரவர்கள்

,, கடைவீதி க. முத்துநாடாரவர்கள்

,, கடைவீதி வெ. வீ. பெருமாள்கவுண்டரவ
[ர்கள்

,, கடைவீதி வீரனாச்சாரியவர்கள்

,, குமார் வீ சுப்பய்யாச்சாரியவர்கள்

,, அரிசி சாப்பு இ. அருணாசலம்பிள்ளையவர்
[கள்

புகவத்தை தோட்டம் பணியகணக்கு ஏட் வடமலைபட்டி,
வை. செல்லமுத்துக்கணக்கபிள்ளையவர்கள்

தங்கபூந்தோட்டம் ஏட் வேலுக்கங்காணியவர்கள்

பத்தனைக்கடைத்தெரு குமராண்டியாச்சாரியவர்கள்

,, வீரக்குட்டியாபிள்ளையவர்கள்

மாடந்தோட்டம் ஏட் அருணாசலம்கங்காணியவர்கள்

பணியச்சக்கரை வத்தைத் தோட்டம் ஏட் தி. சுப்பராயலுகங்கா
[ணியவர்கள்

# அச்சிட்டுக்கொடுக்க கேட்டுக்கொண்ட கனவான்கள்.

கேம்பிரிதோட்டம் ஏட் மாதேவிநல்லுக்கங்காணியவர்கள்

கிசுப்பனைத்தோட்டம் மு. பெரியண்ணன்கணக்கபிள்ளையவர்கள்

ஸ்டேஷன் வட்டக்கொடை பணியகணக்கு ஏட் முத்தையாகங்கா [ணியவர்கள்

நோனுத்தோட்டம் நாராயணஆச்சாரியவர்கள்

ஆக்கருணைக்கடை மெ. முத்துராமஞ்செட்டியாரவர்கள்

நடுக்கணக்குதோட்டம் ஏட் களப்பன்கங்காணியவர்கள்

,, லெட்சுமணன்கணக்கபிள்ளையவர்கள்

நாகட்டைதோட்டம் ஏட் ராமசாமிகங்காணியவர்கள்

,, அழகுகணக்கபிள்ளையவர்கள்

பதுளைக்கடை சு. ப. ஆவுடையப்பசேருவைகாரரவ [ர்கள்

,, தெரு பெ. ரி. அடைக்கப்பசெட்டியாரவர் [கள்

கதிர்காமம் நகரத்தார் சத்திரம் மானேஜர் வீரப்பஞ் [செட்டியாரவர்கள்

,, சுவாமிகோவில் அர்ச்சகர் சூர்சபுரிபாவா அவர்கள்



| | ரூ | அ | ப |
|---|---|---|---|
| நூற்றெட்டு திருப்பதிமாலைத்திரட்டும் | 0 | 4 | 0 |
| அறுபத்திநாலு சுப்பிரமணிய க்ஷேத்திரமாலைத்திரட்டும் | 0 | 4 | 0 |
| பாண்டி விநாயகமாலை சிவக்ஷேத்திரக்காதல் திரட்டும் | 1 | 0 | 0 |
| காவடிச்சிந்து | 0 | 8 | 0 |
| திவ்யரஞ்சித கீர்த்தனை | 0 | 8 | 0 |
| நவரச கீர்த்தனை | 0 | 8 | 0 |
| சந்திரவன்னன் அம்மானை | 1 | 0 | 0 |
| சந்திரவன்னன்கதை நடை | 2 | 0 | 0 |
| சந்திரவன்னன் புராணம் மூலம் | 2 | 0 | 0 |
| சந்திரவன்னநாடகம் டிராமாமெட்டு | 2 | 0 | 0 |
| டிராமாமெட்டு. அரிச்சந்திரநாடகம் | 1 | 0 | 0 |
| ,, வள்ளியம்மை நாடகம் | 1 | 0 | 0 |
| ,, சிவிச்சக்ரவர்த்தி நாடம் | 0 | 12 | 0 |
| ,, விசித்திரகலை நாடகம் | 0 | 12 | 0 |
| ,, நாலுமந்திரி நாடகம் | 0 | 12 | 0 |
| ,, மதனகாம நாடகம் | 1 | 0 | 0 |
| ,, மதிசூர நாடகம் | 1 | 0 | 0 |
| ,, மதிசிங்க நாடகம் | 1 | 0 | 0 |
| ,, மதனகேசரி நாடகம் | 0 | 12 | 0 |
| ,, ஜெகதலப்பிரதாப நாடகம் | 1 | 0 | 0 |
| ,, சூரசென நாடகம் | 1 | 0 | 0 |
| ,, மாணிக்கவல்லி நாடகம் | 1 | 0 | 0 |
| ,, சூதநாடகம் | 0 | 12 | 0 |
| ,, மதனவதி நாடகம் | 1 | 0 | 0 |
| ,, அமிர்தவல்லி நாடகம் | 1 | 0 | 0 |
| ,, காலிங்க நாடகம் | 0 | 12 | 0 |
| ,, சவுரிய நாடகம் | 1 | 0 | 0 |
| ஏகாதசிஅம்மானை | 0 | 8 | 0 |
| பாரத அம்மானை | 1 | 0 | 0 |
| தருமர் அசுவமேதம்மானை | 0 | 12 | 0 |
| சோழனம்மானை | 1 | 0 | 0 |
| ஆுமையாரம்மானை | 0 | 12 | 0 |

| | | | |
|---|---|---|---|
| சக்தகுருசங்கராச்சாரி சுவாமிகளருளிச்செய்த சாதககவி, ௰௨௲ ௭-ம்காண்டமும் ௯-ம்காண்டமும் பதிப்பிக்கப்போகிறபடியால் ௲-கவியுள்ள புத்தகம் 1-க்கு | 1 | 12 | 0 |
| ஷை சங்கராச்சாரி சுவாமிகளருளிச்செய்தபொது காண்டம் கவி ௰௨-௲ கோசாரம் திசாபுத்தியந்திரப்பலன் பெண்கள் சாதகம் அடங்கியது ௲-கவி புஸ்தகம் | 1 | 0 | 0 |
| சுதர்மணம்மானை | 0 | 8 | 0 |
| மண்டலமாணிக்கம் சங்கரநாராயண ஆச்சாரியியற்றிய தாதுவருடத்து கும்மி. | 0 | 4 | 0 |
| கோவில்பட்டி சி. அழகர்சாமியாச்சாரியாரியற்றியசெந்திலந்தாதி | 0 | 2 | 0 |
| தருமர் அஸ்தமேதபுராணம் | 1 | 8 | 0 |
| புரூரவச்சக்ரவர்த்தி நாடகம் | 1 | 0 | 0 |
| நளச்சக்ரவர்த்தி நாடகம் | 1 | 0 | 0 |
| சகஸ்த்திராதி பசக்ரவர்த்தி நாடகம் | 1 | 0 | 0 |
| குசலவ நாடகம் | 1 | 0 | 0 |
| வச்சிரபாகு நாடகம் | 1 | 0 | 0 |
| செண்பகவல்லி நாடகம் | 1 | 0 | 0 |
| சூர்மை நாடகம் | 1 | 0 | 0 |
| காந்தருவனம்மானை | 0 | 8 | 0 |
| ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்தலப்புராணம் | 2 | 0 | 0 |
| திருநல்லூர் ஸ்தலப்புராணம் | 1 | 0 | 0 |
| திருச்சுருளிமலை ஸ்தலப்புராணம் | 1 | 8 | 0 |
| திருச்சதுரகிரி ஸ்தலப்புராணம் | 2 | 0 | 0 |
| ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரமான்மியம் | 2 | 0 | 0 |
| அறுபத்திநாலு சுப்பிரமணிய க்ஷேத்திரமான்மியம் | 0 | 2 | 0 |
| நூற்றெட்டு திருப்பதி க்ஷேத்திரமான்மியம் | 0 | 4 | 0 |
| திருப்பதி வெங்கடாசலபதியாச்சாரி தெரிசித்த சிவஸ்தலங்கள் விபரம் | 1 | 0 | 0 |
| திருப்பதி வெங்கடாசலபதியாச்சாரி தெரிசித்த சுப்பிரமணிய ஸ்தலங்கள் விபரம் | 1 | 0 | 0 |
| திருப்பதி வெங்கடாசலபதியாச்சரி தெரிசித்த விஷ்ணு ஸ்தலங்கள் விபரம் | 1 | 0 | 0 |
| திருப்பதி வெங்கடாசலபதியாச்சாரியவர்கள்வம்ஸமணிதீபம் | 3 | 0 | 0 |



உ

சிவமயம்.







## ஆயிரத்தெட்டுத் தலங்களுள்ள நாட டினை

## மோத்தக் கவி.



மலைநாட்டி லெண்ணான்கு தலமாம் பாண்டி
வளநாட்டி லிருநூற்றிப் பதினொன் றாகும்
நிலையான துளுவமிரு பத்தி நாலு
நிகழ்த்து கொங்கு நாடுமுப்பத் தாறுமிக்க
தலைமைநடு நாடுநூற் றன்பத் தாறு
தருவடநா டதனிலோ ரைம்பத் தொன்று
மலைவிலாச் சோழமுன்னூ றுடனாய் யெட்டு
வருதொண்ட நூற்றன் பத்தீழமெட் டே.



உ

சிவமயம்.

# ஆயிரத்தெட்டுச் சிவக்ஷேத்திரமாலை.

## காப்பு.

சீர்கொண்ட பூவுலகிற் சேர்ந்தசிவ க்ஷேத்திரங்க
ளேர்கொண்ட வாயிரத்தெட் டின்மீது—பேர்கொண்ட
பாமாலை சொல்லும் படியருள்வி நாயகர்க்குப்
பூமாலை யைப்புனைந்து போற்று.

## பாண்டியநாடு.

### திருஆலவாய்-மதுரை-கூடல்.

மஞ்சான னத்தான் வளர்மாலுங் காணாத
அஞ்சான னத்தானே யாண்டருள்வாய்—மிஞ்சுதவத்
தூயதிருக் கூடல்வளர் தோன்றலே யென்றனையா
ணையதிருத் தாளருள்வாய் நீ. (1)

### திருபழய ஆலவாய் மதுரை-கூடல்.

அக்கலிங்க மோடுபுவி யைம்பத்தா றம்பணியுஞ்
சொக்கலிங்க மானசெய சுந்தரனே—மிக்கதிருக்
கூடலிலே வந்து குலவுமறு பானன்கா
மாடல் புரிந்தவனே யாள். (2)

### திருமதுரை நன்மை தருவார் பூதலூர்.

செல்வமிகு மேலான செந்தமி ழுண்டாகும்
பல்வளஞ்சேர் வாழ்வு பலிதமாம்—சொல்லுசந்து
வஞ்சகமில் லாதுவளர் பூத லூராசே
நெஞ்சகமே யென்று நினை. (3)

## திருவண்டியூர் மதுரை-சந்திரேசுரம்.

அத்த முடையானே யம்பி லுடையானே
நித்த முடையானே நீயெனையாள்—சுத்தமிகு
மாசந்தி ரேசுரம்வாழ் வள்ளலே யென்னுளத்தில்
வாசந்தி ரேசுரதே வா. (4)

## திருப்பரங்கிரி.

நீடும் பெருஞ்செல்வ நித்தமுமென் மேலோங்கி
நாடும் பெருவாழ்வு நண்ணுமே—கூடுதிருச்
செம்மானை யேந்துகரத் தீசர் பரங்கிரிவா
ழெம்மானை யேதுதிப்பா யே. (5)

## திருப்பரங்குன்றம் மாருதேசுரம்.

வல்லவினை செய்ய வருமிடியைத் தானகற்றிப்
புல்லனெனை யாண்டருள்செய் புண்ணியனே—நல்லதவத்
தன்பர்துதித் தென்பரங்குன் றுதிபனை மெய்திகழும்
நன்பருள மேவுசுகு ணா. (6)

## திருவாப்பனூர்.

காலா னமனையடர் கங்கா தரப்பொருளே
யாலால முண்டபர மானந்தா—ஞாலமிசை
யந்தி மதிசூடி யாப்பனூர் வாழ்பரமே
நந்தியின்மேல் வந்துவர நல்கு. (7)

## திருவேடகம்.

சித்திமுக மான செயலே செழுஞ்சுடரே
யத்திமுக னைப்பயின்ற வண்ணலே—நித்தனித்த
மேடகத்தில் வாழு மிறையே யெனதுகொடும்
பாடகற்றிச் செல்வமுறப் பண். (8)

## திருவண்கொடுங்குன்றம் பிரான்மலை.

மால்கொடுக்கு மின்னூர் மயறவிர்த்து மெஞ்ஞானப்
பால்கொடுத்துக் காப்பாய் பரஞ்சுடரே—தோல்தரித்த
கோல மிகுதிருவண் கோடுகுன் றத்திலென்றுஞ்
சீலமிகு யோகச் சிவா. (9)

## திருச்சோழபுரம்.

என்னவினை செய்தாலு மேதுகுறை செய்தாலு
மன்னவினை யெல்லா மடக்கியருண்—மின்னுதிருச்
சோழபுர மானதிருத் தொன்னகரை யாளரசே
வாழபுர மென்னுளமா வா. (10)

## திருக்கட்டூர் சத்தியேசுரம்.

சித்தகத்த ஞான சிவமே சிவக்கொழுந்தே
மத்தகத்த னேப்பயந்த வள்ளலே—நித்தந்
திருச்சத்தி யேசுரம்வாழ் தேவனே யெற்குத்
திருச்சத்தி யேறவருள் செய். (11)

## திருப்பெரிய கோட்டை.

எக்கா லமுமுனையே யேத்தி யடிபணிந்தே
னிக்கால மென்னை யிரக்ஷித்தாள்—மிக்கானே
தேசா திபர்கடுதி செய்பெரிய கோட்டையில்வா
ழீசா திகாந்தவர சே. (12)

## திருச்சதுர்வேத மங்கலம்.

வாசி யடக்கும் வகையறியே னுனையுந்
தேசிகனாய் வந்தருணீ செய்குவாய்—பூசிதஞ்சேர்
வாசா சதுர்வேத மங்கலத்துக் கோர்முதலே
யீசா சரசகுண னே. (13)

## திருச்சிவகங்கை.

பைந்தமிழைப் பாவிகண்மேற் பாடி யனுதினமு
நைந்தலைந்து வாடாது நல்வரந்தா—சந்ததமுந்
துய்யசிவ கங்கையில்வாழ் சுந்தரமேகோ லாகலனே
செய்யசிவ முத்தியர சே. (14)

## திருப்புத்தூர்.

பொன்றிகழ மேவும் புராதன குமாரியுடன்
மன்றினட மாடவந்த வள்ளலே—துன்று
திருப்புத்தூர் மேவுஞ் சிவமே யெனையா
டிருப்புத்தூர் நாதவர சே. (15)

## திருநார்த்தாமலை.

சென்றனையே போற்றித் தினமும் பணியாதா
ரென்று பதம்பெறுவ தெவ்வாறு—மின்றுதிரு
நாரத்த மாமலைவாழ் நாதவெ னையருட்கண்
பாரத்த மேயுதவிப் பண். (16)

## திருமயம்.

செங்கரக பாலிகுரு தேசிக சிவானந்த
சங்கரகோ லாகல தயாபரனே—யிங்கெனையாள்
சித்தனே தூய திருமயமாஞ் க்ஷேத்திரம்வா
ழத்தனே நேயவர தா. (17)

## திருச்சுனை.

ஆதியே வேதத் தரும்பொருளே யானசெக
சோதியே நிட்கள சொரூபியே—வோதுந்
திருச்சுனை க்ஷேத்திரம்வாழ் தேவா வரதந்
தருச்சுனனை யாண்டதுபோ லாள். (18)

## திருவிராலிமலை.

வட்டநெடும் பூவுலகில் வாய்ந்தபல நூல்கவெலா
மிட்டமுடன் பார்த்ததினு லென்னபயன்—திட்டமுடன்
பார்க்கடிகை வீசமெனும் பன்னும் விராலிமலை
யார்க்கடிமை யாகாத வர். (19)

## திருவிதீச்சுரம் பிள்ளையாலயம்.

முத்தனே ஞான முதலே முதற்கொழுந்தே
நித்தனே போத நிராமயமே—பத்தர்முன்
னிந்நாளில் வந்தருள்வி தீச்சுரத்தாய் நின்னருடா
வெந்நாளுஞ் செல்வமுற வே. (20)

## திருத்தென்கரை சோழவந்தன.

மின்கலிகா லத்துனையே வேண்டுகின்ற மெய்யடியேன்
வன்கலியா லுள்ளம் வருந்தாது—நன்கு
திருத்தென் கரைநகர்வாழ் தேவனே வேறு
கருத்தென் கரையேற்றிக் கா. (21)

## திருப்புனவாசல்.

பற்றிப் பணிந்து பரவார் திரிபுரத்தை
நெற்றிக்கண் ணாலெரித்த நின்மலனே—முற்றுமுயர்
தேசார்ந் திலகுந் திருப்புனவா யற்கரசே
யீசா வெனையாள்வா யே. (22)

## திருவடகரைசோழவந்தான்.

தீயும் பயிர்க்குமழை தேடிவந்து பெய்வதுபோ
லாயு மெனக்குன் னருள்பொழிந்தே—தோயுமனத்
திர மலையானே தென்வட கரைப்பதிவா
ழாரமலை யானே யருள். (23)

## திருத்திண்டீசுரம் திண்டுக்கல்.

ஆரணனுங் கஞ்சத் தணங்கவரை மார்பில்வைத்த
நாரணனுந் தேடுகரு ணாகரனே—பூரண்மாத்
திண்டே சுரப்பதியாம் க்ஷேத்திரத்துக் கோர்திலகா
தண்டே சுரப்பரநீ தா. (24)

## திருச்சைலமலை திண்டுக்கல்.

வள்ளைநிக ருங்குழையாள் வள்ளாளன் றேவியற்குப்
பிள்ளையென் வந்துதித்த பெம்மானே—வெள்ளைவிடை
மன்னு திருச்சைல மாமலையில் வாழ்தேவா
வுன்னுதிருச் செல்வமரு ளும். (25)

## திருப்பழனி சிவகிரி.

வாட்ட முனக்கேன் வருந்துகிறாய் நெஞ்சமே
பூட்டகமா யொன்று புகலுகிறேன்—நாட்ட
திருப்பழனி யானையுயர் செந்தமிழா லோதி
யிருப்ப ணிகழ்வினைநீர்த் தே. (26)

## திருவாவினங்குடி கந்தமலைப்பழனி

சுந்தரனே வேதச் சுடரே சுடர்க்கொழுந்தே
கந்தரமே யான்கரு ணாகரனே—சந்ததமுங்
கந்தமலை மேவுங் கருணைப் பெருங்கடலே
வந்தமலை நீர்த்தருளு வாய். (27)

## திருவாடானை.

மாமேரு வில்லாக மாதவனை யேவாகக்
கூமேவு தேராகக் கொண்டசெயா—பூமேவு
மாடானை வாழு மரனே யரும்பொருளே (28)
வாடாத செல்வமருள் வாய்

## திரு நாட்டரசன் கோட்டை.

எங்கெங் கடியா ரிருதயத்தி லுன்னவெதி
ரங்கங்கே வந்தருளு மாதிபா—பொங்குசெய
நாட்டரசன் கோட்டையில்வாழ் நாதாவெனக்கினிய
தேட்டரச வாழ்வையருள் செய். (29)

## திருவேகம்பம்.

கள்ளமே யில்லாதோர் காரியபா கந்தெரியா
வுள்ளமே யானுனெ ஞுரைப்பக்கேள்—மெள்ளத்
துதிப்பாய்வே கம்பத்தூர்த் தோன்றன்மேற்பாடல்
விதிப்பாய்நிற் குண்டோ வினை (30)

## திருக்கோட்டூர்.

தந்தமலை தோலுரித்த தற்பர சிவானந்த
கந்தமலை மேலிருக்குங் கர்த்தனே—சந்ததமுங்
கோட்டூ ரெனும்பதிவாழ் கோவே கலியதனைத்
தேட்டூர வோட்டியருள் செய். (31)

## திருக்கோட்டியூர்.

பொற்பரசு பாணி புனிதகிரு பாகரசீர்
நற்பரசு கானந்த நாதனே—கற்பத்
திருக்கோட்டி யூர்க்கரசே தேவாவென் னுள்ளத்
திருக்கோட்டி வாழ்வருளிச் செய். (32)

## திருமானுமதுரை சோமேசுரம்.

முன்ன முனக்குமதி முக்கோடி சொல்லியு
மன்னதுபோ னில்லாத தலைகின்று—யென்னநெஞ்சே
பூதேவன் வந்துநிதம் போற்றுஞ்சோ மேசுரத்து
மாதே வனைத்துதித்து வா. (33)

## திருக்கானப்பேரூர் காட்டுக்காளையார்கோயில்.

வானவனே மெய்ஞ்ஞான வள்ளலே யானையுரித்
தானவனே செல்வத் தயாபரனே—மோனர்வாழ்
கானப்பே ரூரில்வளர் கங்கா தரக்கடவுள்
ஞானப்பே ரூறவரு ணல்கு. (34)

## திருஅத்தமயனமலை அக்கிராரம்.

விண்டங் கரியானே வேதங் குரியானே
கண்டங் கரியானே காரணனே—கொண்டதிரு
வத்த மயனமலையி லன்பாக வந்திருந்த
கத்தனே வந்தெனைநீ கா. (35)

## திருமேலமங்கலம் வாலீசுரம்.

சுந்தரர்முன் சொற்கவிக்குச் சொன்னங் கொடுத்தருள்செய்
சுந்தரனே யென்கவிக்குச் சொன்னமருள்—சந்ததமு
மேலமங்க லத்தில்வளர் வித்தகனே மிக்கவனு
கூலமங்க லக்கவியாய்க் கொண்டு. (36)

## திருதுமேசுரம் பெரியகுளம்.

தேவிற் புகழ்சேருஞ் சிற்பரமல் லாதுளதோ
பூவிற் புகழ்சேர் புலவீர்காள்—நாவினின்மெய்
தானத்து மேசுரம்வாழ் தற்பரனைப் போற்றினால்
வானத்து மேசுரனு வான். (37)

## திருமகதேசுரம் வடகரை பெரியகுளம்.

மோனவருந் தானவரு முத்தருஞ் சித்தரும்
வானவரும் வந்துபணி வள்ளலே—ஞான
மகதே சுரதேவா வாழ்த்துமெனக் கின்பஞ்
சகதே சுரதேவா தா. (38)

## திருவயித்தியேசுரம்.

அங்கப்புலவ் வமர்ந்தசடைச் சங்கரனே
சங்கப் புலவர் தனிமுதலே—துங்கமிகு
மிந்தரனே மால்வயித்தி யேசுரமாஞ் க்ஷேத்திரத்தில்
வந்தரனே யென்றனையாள் வாய். (39)

### திருசோமகேசுரம் கயிலாயமலை.

தேவர்களு மாதவருஞ் செய்தவருங் கைதவரும்
யாவர்களும் போற்று மரும்பொருளே—பூவிற்
றிருச்சோம கேசுரம்வாழ் தேவாநீ யாள
வருச்சோம கேசுரனே மா. (40)

### திருவிரா மேச்சுரம்.

செய்யமழு மானுந் திரிசூல மும்பிடித்த
துய்யசிவ சங்கர சுகாதிபனே—வையத்
திருவிரா மேசுரம்வாழ் செல்வாமற் றோர்தாய்
கருவிலடை யாதெனையே கா. (41)

### திருக்கூட லூர் குருவீசுரம்.

துங்கரா வோங்குமதி சூடியொளிர் வேணியனே
சங்கரா சோணு சலதேவா—விங்கு
திருக்கூட லூரரசே சின்மயா னந்தா
விருக்கூட தானபொரு ளே. (42)

### திருக்கம்பம் கண்ணேசுரம்.

பஞ்சம் பழவினைநோய் பாவம் பகைசெய்யும்
வஞ்சங் கொலைகளவை மாற்றுவாய்—நெஞ்சே
திருக்கம்பத் தானைமுகத் தேவனையே நந்தத்
திருக்கம்பத் தானைநினைந் தே. (43)

### திருச்சுருளிமலை மலையேசுரம்.

என்னையன் றின் பாயருள்செ யீசனே யென்மனத்துள்
ளுன்னையன்றி வேறொன்று முன்னேனே—மின்னச்
சுருளி மலையானே சுந்தரனே செல்வ
மருளிமலை யாதெனைவந் தாள். (44)

### திருகாளத்திநகரம் உத்தமபாளையம்.

சேமத் திலகுவரை செல்வியுமை யாளையொரு
வாமத்தில் வைத்தருள்செய் வள்ளலே—நேமத்திற்
காளத்தி மாநகர்வாழ் கர்த்தனே யென்னையருள்
நீளத்தி மாலையணி நீ. (45)

## திருகலசேசுரம் பூலாந்தகம் சின்னமனூர்.

வாரணத்துத் தோலுரித்த வள்ள லெருக்குழுக
லாரணத்துக் குட்பொருட தா னாகியவா—பூரணமா
நீதகல சேசுரம்வாழ் நிர்த்தனே யான்செய்யுந்
தீதகல வேகிருபை செய். (46)

## திருச்சுழிகை.

பால்வர்க்க மென்னுமொழி பன்னுசன காதிபர்க
ணால்வர்க் குபதேச நல்கியவா—வால்வளைசூழ்
செய்யார் திருச்சுழிகை க்ஷேத்திரத்துக் கோரரசே
யையாநீ யென்றனைவந் தாள். (47)

## திருப்பிரளய விடங்கம் திருச்சுழிகை.

எவ்வெவ் விடங்களினி யெய்திடினு முன்னாக
வவ்வவ் விடங்களில்வந் தாதரிக்கு—மொவ்விநெஞ்சே
போற்றுவாய் நற்சுழிகைப் புண்ணியனை நற்கவியாற்
சாற்றுவாய் செல்வந் தரும். (48)

## திருக்காளையார்கோயில் பள்ளிமடை.

மண்ணுமா யக்கினியாய் வாயுவாய்த் தண்ணீராய்
விண்ணுமாய் நின்ற விளக்கொளியே—நண்ணுமறை
கத்தனே முக்யதிருக் காளையார் கோவில்வள
ரத்தனே யென்னையுகந் தாள். (49)

## திருமூதூர்.

சங்கங் குழையா தனிப்பொருளே மெய்யடியே
னங்கங் குழையா தருள்புரிவாய்—துங்கதவ
மிக்கதிரு மூதூர்வாழ் வித்தகனே யுத்தமனே
தக்கதிரு மேவவரா தா. (50)

## திருமாணிக்கம்.

திரிபுரியைப் பார்த்தெரித்த சிற்பரதே வாமுன்
கரியுரியைப் போர்த்தவருட் கண்ணா—வுரிய
திருமாணிக் கத்தில்வளர் சின்மயமே யெற்கு
யிருமாணிக் கந்தருவா யே. (51)

## திருமல்லிக்கார்ச்சுனம் பேரையூர்.

நஞ்சுலவுங் கண்ட நடேசனே வானிலகு
மஞ்சுலவுஞ் சோலை வளர்ந்திகழ—விஞ்சுந்
திருமல்லி கார்ச்சுனம்வாழ் தேவனே யாள்வாய்
திருமல்லி கார்ச்சனைசெய் தேன். (52)

## திருக்குற்றாலம் கூடாசலம்.

அக்கரவு கொன்றை யறுகுதும்பை வில்வமொடு
மிக்கரவு மாமதிதோய் வேணியனே—தக்கபுகழ்
நல்லதிருக் குற்றால நன்னகர்வா ழும்முதலே
வல்லதிருச் செல்வமருள் வாய். (53)

## திருவீரவநல்லூர்.

நாளுமுனை யேநினைந்து நற்றமிழைப் பாடநிதி
நீளும் பெருவாழ்வு நீயருளிக்—கோளகலும்
வீரவநல் லூரில்வளர் வித்தகனே யென்னிடத்திற்
காரவனில் லாதென்னைக் கா. (54)

## திருக்கல்லடக்குறிச்சி.

உன்னையல்லால் வேறொ ருதவியெனக் கிங்குண்டோ
தன்னைநிக ரில்லாத தற்பரனே—யன்னையாங்
கல்லடக்கு றிச்சியில்வாழ் கத்தனே காப்பதற்கு
வல்லடக்குங் கொங்கைபங்கா வா. (55)

## திருப்பொதிகைமலை.

வில்லாருஞ் செம்பொன் விளைநிலங்க ணஞ்சைபுஞ்சை
யெல்லாஞ்செல் வங்களும்வந் தெய்துமே—நல்லாப்
பொதிகைமலை யானையெதிர் போய்நின்று கண்டு
துதிகைமலை யாமனமே சொல். (56)

## திருவீரராகவபுரம்.

தீதுமொழி கேட்டுளமே செய்வஞ் சனைமிகுந்த
மாதர் வலைக்குள்ளேகி வாடாதே—நீதயவாய்
ராப்பகலாய் நீள்வீர ராகவ புரத்தரனை
வாப்பகலா தேதுதிசெய் வாய். (57)

## திருவல்நாடு.

சைவப் புவியினிடைத் தார்கமலத் தோனெனத்தேர்
தெய்வப் புலமையவை செப்புதல்போல்—மெய்வளங்கு
துன்னுதிரு வல்நாட்டுத் தோன்றறதனை யேதுதித்து
மன்னு திருத்தமிழால் வாழ்த்து. (58)

## திருநெல்வேலி-

அலையரவிந் தம்பொருவு மைமுகனே மிக்க
தலையரவிந் தம்புனையுந் தாமா—மலைவகற்றி
யெந்தைதிரு நெல்வேலி யேந்தலே யென்றனையாள்
விந்தைதிருச் செலவமுற வே. (59)

## திருவள்ளியூர்.

பந்தான மான பவுசும் பலநிதியுஞ்
சந்தான செல்வந் தழைத்தோங்க—முந்தாக
காவாதார் தன்னைக் கருதேல்மெய் வள்ளியூர்த்
தேவாதா வென்றுதுதி செய். (60)

## திருவாசுதேவநல் லூர்.

பூவளமுஞ் செய்ய புகழ்வளமு மிக்க பசுங்
காவளமும் பண்ணை களின்வளமு—மாவளஞ்சேர்
செய்ய திருவாசு தேவனல்லூ ருக்கரசே
துய்யதிரு வாழ்வருள்வந் து. (61)

## திருஆழ்வார்குறிச்சி.

போற்றுமடி யார்க்குப் புத்திவித்தை சித்திமுத்தி
சாற்றுநிதி யுங்கொடுத்தா ற்பரனே—யேற்றுந்
திருவாழு வார்குறிச்சித் தேவனருட் செல்வந்
தருவானு வானைநிகர் தான். (62)

## திருத்தலைவன்கோட்டை.

லோபத் துடனீயா லுத்தர்களைப் பாடிநிதந்
தாபத் துடனலையுந் தண்டமிழீர்—தீபத்
திருத்தலைவன் கோட்டையில்வாழ் சிற்பரத்தை வாழ்த்திக்
கருத்தலைவு றுதிருப்பீர் காண். (63)

## திருத்தச்சநல்லூர்.

தண்டலைநே ரானகுழற் றையலர்கள் மேன்மோகங்
கொண்டலையா தென்னையென்றுட் கொள்வாயோ—மண்டு
திருத்தச்ச நல்லூர்வாழ் தேவாநீ வந்து
கருத்தச்சங் கொள்ளாது கா. (64)

## திருப்பூவணம்.

நற்புலவ ருக்குகந்து நண்ணுதிருச் சங்கத்திற்
பொற்பலகை தந்தமனப் பூரணனே—சொற்பரவு
கந்திருப் பூவணம்வாழ் கண்ணுதலே யென்னுளத்திற்
சந்ததமு நின்றுவரந் தா. (65)

## திருவீரபத்திரேசுரம் மாவூத்து.

நதியறுகு கொன்றைதும்பை நன்குறுவெள் ளென்பு
மதியரவஞ் சூடுசடை வாழ்வே—நிதியருள்வான்
வீரபத்தி ரேசுரம்வாழ் மெய்ப்பொருளை யேநினைந்து
தீரபத்தி யோடுதுதி செய். (66)

## திருச்சதுராசலம்.

அக்கறுகு பூண்டிலகு மையனே மன்னுசுடர்
செக்கதிர்விண் டோயுஞ் சிகரநிறை—மிக்க
சதுரா சலத்திலமர் தற்பரனே யின்ப
மதுரா சலமகற்று வா. (67)

## திருநீலமலை மகாலிங்கமலை.

தீன தயாபரனே சின்மயா னந்தவன்பர்
மானதபூ சைக்கருள்செய் வள்ளலே—ஞானதிரு
நீலமலை மேவுதிரு நிட்களா னந்தனே
சாலமலை யாதருணீ தா. (68)

## திருப்புற்குடி அம்பிகேசுரம்.

சேமமதி யைச்சூடுஞ் செஞ்சடையா மாதுமையை
வாமமதில் வைத்த மணிமிடற்றோய்—நேமமிகும்
பொன்னு திருவோங்கும் புற்குடிவா ழுந்தேவா
மன்னுதிருச் செல்வமருள் வாய். (69)

## திருபாவாலிகங்கேசுரம்.

மத்தரைக் கல்லா மடையரை யியாத
வுத்தரைப் பாடி னுனக்கென்னும்—பித்தநெஞ்சே
பாவாலி யென்னும் பதியரனை யேபோற்றி
நாவா லினித்தமிழை நாட்டு. (70)

## திருவிருதூர்பட்டி.

பொன்னும் பணியும் புகழும் பெருஞ்செல்வ
மின்னு மணியும் விளங்கியே—துன்னுந்
திருவிருது பட்டியெனுஞ் க்ஷேத்திரத்துத் தேவா
குருவிருது நீளவருள் கூர். (71)

## திருபாலவனத்தம் பாலைவனம்.

ஆலத்தை யுண்டவனே யந்தமறை யோனுயர்க
பாலத்தைக் கொண்டகிரு பாகரனே—சீலமிகு
பாலவ னத்தமுறு பண்ணவ னின்னேசஞ்
சால வனத்தமெனத் தா. (72)

## திருமங்கலம்.

அக்காலத் துன்பரை யாலங்கொண் டாதரித்தா
யிக்காலத் தென்மிடிதீர்த் தென்றனையா—வொக்கானுஞ்
செய்யதிரு மங்கலமாஞ் க்ஷேத்திரத்துக் கோரரசே
துய்யதிரு நீறணிசு கா. (73)

## திருகருடேசுரம்.

சொல்லாரும் பாண்டியன்றன் சோதனைக்கா கச்சிறந்தக்
கல்லானைக் கன்று கரும்பருத்த—வல்லாக்
கருடே சுரப்பதிவாழ் கத்தனே யெற்கு
னருடே சுரப்புரிந்தே யாள். (74)

## திருநல்லூர்.

மின்னாற் குழையானே மேனாளக் கூடலிலே
யன்னக் குழியழைத்த வற்புதனே—பன்னுமறை
மேவுதிரு நல்லூர்வாழ் வித்தகனே மிக்கபுகழ்
தாவுதிரு நல்வாழ்வு தா. (75)

## திருவெட்டிச்சுரம் நல்லூர்.

அம்புயத்தா னுங்கமலை யம்புயத்தா னுங்காணு
நம்புயத்தா னேயுனையே நம்பினே—னும்பர்தா
மோதுவெட் டீச்சுரநல் லூரரசே வீணர்செய்
வாதுவேட் டீச்சுரதே வா. (76)

## திருத்தண்டீசுரம் சுந்தரேசம்.

அத்துவித சாஸ்த்திரத்து ளாயபொரு ளாய்நிறைந்த
சத்துவமாய் நின்றரு டயாபரனே—வித்துவமே
தங்குநிய மம்பெருகுந் தண்டீச் சுரத்தானே
யிங்குநிதி யோங்கவரு ளே. (77)

## திருவானந்தம் கோவில் பத்திச்சுரம்.

அத்தனே வேதத் தரும்பொருளே யாரமுதே
முத்தனே ஞான முதற்கொழுந்தே—சுத்தனே
முத்திபத் தீச்சுரம்வாழ் மூர்த்தியே நாயேற்குச்
சித்திபத்தி சுத்தியருள் செய். (78)

## திருத் தண்கால்.

சிந்தனைக டீர்த்துச் சிவசிவா வென்றுதினம்
வந்தனைகள் செய்ய மனமதனைத்—தந்தத்
திருத்தண்கா லாதிபனே தேவாநின் பாலில்
வருத்தங்க லாநெறியை மாற்று. (79)

## திருச்சிவகாசி வாமகேசுரம்.

மாலான வூழ்வினையின் வாட்டந் தனையகற்றி
மேலான செல்வமுற வேண்டுமென்றால்—ஞாலத்
திருச்சிவ காசியில்வாழ் தேவனையே நெஞ்சே
யருச்சி வனமலரி னால். (80)

## திருமடவார் விலாசம்.

பாவம் புரியார் பரத்தையரை யேநாடார்
கோவம் புரியார் கொலைபுரி யார்—தேவ
மடவார் விலாசமறை வள்ளனெறியன்றி
நடவார் விலாசநண் பர். (81)

## திருச்சாத்தூ ரீச்சுரம்.

தூண்டிபனுக் கானசுதத் தோன்றலென வந்துதித்த
காண்டிபனுக் கானதருள் கர்த்தனே—நீண்டிலகு
சாத்தூராய் மிக்கசிவ தற்பரனே யென்னுளத்தைப்
பூத்தூராய் தங்குதிருப் பு. (82)

## திருப்புவனேசுரம் முத்துலாபுரம்.

எறும்புகடை யானைமுத லெவ்வுயிருந் தானாய்
நறும்புனித தீர்த்தமணி நாதா—விரும்புந்
திருப்பவ னேசுரம்வாழ் தேவனே யென்னுள்
ளிருப்பவனே செல்வமரு ளே. (83)

## திரு அம்பி கேசுரம்.

சந்தான செல்வந் தழைக்கத் தமிழ்ச்சொல்லின்
பந்தான மாகவருள் பாலிப்பாய்—கந்தத்
திருவம்பி கேசுரம்வாழ் தேவனே சீர்த்திமிக்க
மருவம் பிகைமணந்த வா. (84)

## திருஇளசை பரவீசுரம்.

சுந்தரரு மப்பருஞ் சொல்வாத வூரரும்
வந்தன்பிற் போற்றி மகிழ்வடைந்த—துந்தெரிந்தாய்
தாழ்த்திங் கிராமநெஞ்சே சாரிளசைத் தற்பரனை
வாழ்த்துமுனக் கெல்லாம் வரும். (85)

## திருமங்கைபுரம் கோவில்பட்டி.

வானவருந் தானவரு மாதவரும் போதவரும்
மானவருங் கானவரும் வந்துதுதி—ஞானகுண
* மாலாந் திருசசிவ மங்லைநகர்த் தேவேதா
மேலாந் திருச்செல்வ மே. (86)

## திருமந்திர நகர்.

நல்லசித்தெ லாங்காட்டி நாட்டோர் மகிழ்ந்தெல்லாம்
வல்லசித்த ரென்றுபெயர் வைத்தவா—சொல்லத்
திருமந் திரநகர்வாழ் தேவனே யெற்கிங்
கொருமந் திரஞ்சொ லுவந்து. (87)

* மால்-பெருமை.

## திருகுலசேகரபுரம்.

ஏதில்லா மெய்ப்பொருளே யென்று மிறைஞ்சுகின்றேன்
வாதில்லா தென்னையினி வந்தாழ்வாய்—மேபாது
குலசே கரபுரத்துக் கோவேநற் றெண்டர்
குலசே கரமாக்கிக் கொள். (88)

## திருப்பெருங்குளம்.

பார்துதிக்கை யானவரப் பண்ணவனே மெய்க்கருணை
யோர்துதிக்கை யானையரு ளுத்தமனே—சார்தும்
பெருங்குளத்தி லெயிருக்கும் பெம்மானே யெம்பால்
நெருங்குளத் திலேயிருவா நீ. (89)

## திருக்கங்கைகொண்டான்.

மாறிவினையாடும் வள்ளலருள் வாய்மை நெஞ்சே
கூறித் துதிக்கநம்மாற் கூடுமோ—மீறுந்
திருக்கங்கை கொண்டானுஞ் க்ஷேத்திரத்தைச் சேரித்
திருக்கங்கே யோதலரி தே. (90)

## திருமூதனூர் கயிலாயபுரம்சிந்துபூந்துறை.

தீதவனில் லாதபர தேவாநின் மேன்மயலாள்
மாதவன்மெய் வாடி வருந்தமுற்றாள்—யோது*மறை
மாமதலைக் கண்ணியவா வான்மூத னூர்க்கரசே
தேமதலைக் கண்ணியருள் செய். (91)

## திருமூறனூர் இராமேசநல்லூர்.

நம்பு மடியார் நவையகற்றிக் காத்தருள
வம்புவி யிலுன்னையன்றி யாவருளர்—சம்புவெனுஞ்
சோதியே மூறனூர்த் தோன்றலே சத்தியொரு
பாதியே யென்றனைக்கண் பார். (92)

## திருமணவைமாநகரம் கந்துருவன்கோட்டை.

இப்படியி னின்பதத்தை யேதிப் பணியாதார்க்
கெப்படித் தானே யிடரகலுஞ்—செப்பமுடன்
கந்துருவன் கோட்டையில்வாழ் கர்த்தனே யென்றனிடம்
வந்துருவங் காட்டியருள் வாய். (93)

* மறைமாமதலை-திருஞானசம்பந்தசுவாமி.

## திருச்செப்பறை.

மஞ்செ யனையகுழல் வஞ்சியர்மால் கொண்டலையும்
நெஞ்சேவே றென்று நினையாதே—விஞ்சுதிருச்
செப்பறை யாண்டானைச் செந்தமிழ்ப்பா வாற்றுதிசெய்
தப்பரையாண் டானைநினைப் பாய். (94)

## திருமயிலம் மருதூர்.

வாழ்வினையே நம்பியுனை வாழ்த்தாதார் முன்செய்த
ஆழ்வினையை யெவ்வா றொழித்திடுவார்—தாழ்மதுவார்
பூவுலவு வாவிதிகழ் பொன்மயிலை யம்பதிவாழ்
தேவனே யன்பாற் றினம். (95)

## திருக்கயத்தார் சிலேசுரம்.

கந்தனைமுன் றந்த கருணா கரக்கடலே
வந்தனைசெய் தேனுனையே மாநிதிதா—வந்து
கயத்தா றெனும்பதிவாழ் கர்த்தனே கொன்றை
நயத்தா ரணிந்தசுகு ணா. (96)

## திருசீவிலிப்புரி.

மும்மையிலே செய்த முழுவினையெ லாம்போக்கி
யிம்மையிலே செம்மையிலே யெய்தவைப்பா—யம்மயில்சேர்
தேகாபொற் காவுலவுஞ் சீவலப்பே ரிக்கரசே
வாகா வெனக்குரிய வா. (97)

## திருக்குரும்பூர்.

அன்னத்த னுங்கரத்தி லங்நத்த னுந்தேடும்
சொன்னத் தனிநிறத்துத் தூயவனை—மன்னுந்
திருக்குரும்பூரானை நெஞ்சே சிந்தையில் வைத்தேத்து
தருக்குறும்பே ராசை தவிர். (98)

## திருஆத்தூர் சோமேசம்.

வேலையிலே வந்த விடத்தையமு தாயருந்துங்
காலையிலே நின்ற கருமிடற்றோய்—சோலைதிக
ழாற்றூராப் பாதேவா வன்பர்க் கருமருந்தே
கூற்றூர்க்கே காதாண்டு கொள். (99)

## திருபூதேசுரம் முறப்பநாடு.

மஞ்சேய் குழலுமையாள் வாமனையே யல்லாது
நெஞ்சேவே றொன்று நினையாம—லுஞ்சார்ந்து
பூதே சுரத்தில்வளர் புண்ணியனை யேதுதித்து
மாதேசுரத் தமிழால் வாழ்த்து. (100)

## திருகயிலாயபுரம் ஸ்ரீவைகுண்டம்.

நன்றைக் கடவாமல் நாமிடிக்குட் போகாம
லென்றைக்குங் காப்பானென் றெண்ணுநெஞ்செ--கொன்றை
யணிகையி லாயபுர மாஞ்சீ வைகுண்டம்
பணிகையி லாய பரன். (101)

## திருக்காந்தீசுரம்.

அண்டர் மறையோரரிய தவயோகர்
தொண்டர் மறையாற் றுதித்தேத்துந்—தண்டலைசூழ்
காந்தீசுர நகர்வாழ் கர்த்தனைப் போற்றினல்
வேந்தீ சுரமும் விடும். (102)

## திருவிசையேசுரம் நவலிங்கபுரம்.

நின்னையனை யென்று நிகழ்த்தாத லோபிகளை
யன்னையனை யாயாரோ வாதரிப்டார்—பொன்னூர்
விசையே சுரத்தில்வாழ் வித்தகனே யன்பர்
யிசையேய் சுரதேவ னே. (103)

## திருஆனையப்பபிள்ளைசத்திரம் பிரமேசுரம்

நாடுமழை யில்லாம ஞளுஞ் செழிப்பின்றி
வாடும் பயிர்போல வாடுநெஞ்சே—கூடுதுதி
பேணுவா யானையப்ப பிள்ளைசத்தி ரத்தரனைக்
காணுவாய் நிற்கருள்வான் கை. (104)

## திருச்சேர்ந்தமங்கலம்.

நித்தா மறைமுதலாய் நிற்கு மரும்பொருளே
சித்தா கருணைச் செழுங்கடலே—பித்தான்கூர்
சேர்ந்தமங்க லத்தோய் சிவக்ஷேத்திர மாலையைக்
கூர்ந்தமங்க லக்கவியாக் கொள். (105)

## திருக்குலசேகரன் பட்டினம்.

நீதரிப்பா ரிந்தச் செகத்திலெவர் தீயேனை
யாதரிப்பா ரென்கவியை யன்புறுவாய்—சீதமிகு
கோலமதி யூர்நாக் குலசே கரப்பதிவாழ்
*சீலமதி யாய சிவா. (106)

## திருவிஜயமாநகரம் பிரப்புரி நாராயணபுரி.

தென்பரவி யோங்கித் திகழுமெய்ஞ் ஞானமதி
யன்பருளத் தென்று மகலாதோ—யின்பமுட
ஞூடுந் திருவிசைய நாரா யணபுரத்தோய்
தேடும் பொருளையருள் செய். (107)

## திருத்தேவதானம் இராதாபுரி.

காவலனே செய்ய கருணையனே சங்கத்தோர்
பாவலனே ஞானப் பரவெளியே—பூவில்
திருத்தேவ தானமாற் க்ஷேத்திரத்தோய் மாலே
¶ வருத்தேவ தானவர தா. (108)

## திருப்பணகுடி.

என்ன புலவீர்கா ளீயாத லோபிகள்மேற்
சொன்னபல நூலாற் சுகமுண்டோ—யன்னதில்லை
யானாலும் பண்குடிவா ழுத்தனைப்பா டாதவித
மேனாளிற் செய்த வினை. (109)

## திருச்சொக்கேசுரம் திருக்குறுங்குடி.

அருணையர னேபரத்வ மாய்நிறைந்த ஞான
கருணையா னந்தக் கடலே—யொருமுதலே
சொக்கே சுரத்திலமர் சுந்தரவ ரோதயனே
¶ யக்கே யரையாய்வந் தாள். (110)

## திருநான்குநெறி.

எத்தொழிலைச் செய்தாலு மெவ்விடத்திற் சென்றாலு
மத்தொழிற்கு முன்வருவோ னத்தனன்றே—பித்தநெஞ்சே
யேறுதிரு நான்குநெறி யீசனை யேதுதித்துக்
கூறுதிரு நான்கு நெறிக்கும். (111)

---

* மதியாய்-அறிவுருவாகிய.

¶ ஏவதான - பாணமாண. ¶ அக்கு - சங்குமணி.

## திருக்களக்காடு.

திருத்தடியேன் ஞானத் தெளிவிலேன் மூடன்
பெருத்தடியேன் செய்யும் பிழைகள்—திருத்து
களக்காட்டுக் கோரரசே கர்த்தனேதுன்பச்
சளக்காட்டுக் குண்ணுளையா தாள். (112)

## திருமூவலூர் மந்திரேசுரம்.

நித்த முனுத்தர்மே னீடு கவிபாடி
மெத்தமெத்த வாடுவதை விட்டுவிட்டே—யத்தமிழால்
யாண்டுதிருமூவ லூர்க்காதிப னுகும்பரனை
வேண்டுதிருச் செல்வம் வருமே. (113)

## திருமேலூர் உரோமேசுரம்.

அங்கு மலைக ளடவிகளெல் லாந்தவத்தீ
ரெங்குமலைந் தென்னபல னெய்தினீ—ரங்கயற்கண்
பங்கினர் மேலூர்ப் பதியதனி லோரிரவு
தங்கினர் செய்தார் தவம். (114)

## திருச்சேரன்மாதேவி.

தேறும் புகழுஞ் செயலுந் திகழுலகோர்
கூறுபல செல்வமுங்கை கூடுமே—மீறுலகில்
வன்பி லமர்சேர மாதேவி வாழ்பரனை
யன்பி லகலாது துதித் தால். (115)

## திருப்பணமருதூர் திருப்புடார்ச்சுனம்.

சுக்கிரன் கேதுசனி சூரியனி ராகுபுத
னெக்கிரக மாகினுநன் கெய்துமே—மிக்குபர்ந்த
சித்தன் பணமருதூர்த் தேவ னடியரையா
ளத்த னருளிருந்தக் கால். (116)

## திருஉளப்க்காடு கோட்டீச்சுரம்.

உத்தமர்கள் போற்று முரவோனே யீங்கடியேன்
சித்தமதி னின்றிர க்ஷித்தாள்வாய்—நித்தனித்தம்
பன்னிதிய மோங்கிப் பரவுமுப்க் காட்டரசே
நன்னிதியை யுன்னதமா நல்கு. (117)

## திருஅம்பா சமுத்திரம் காசிபேச்சுரம்.

இந்நிலத்து லோபர்பா லேற்கு மடநெஞ்சே
நன்னிலையொன் றுன்றனக்கு நாட்டுதல்கேள்—மன்னுதிரு
வம்பா சமுத்திரம்வா ழுத்தரை யேதுதிசெய்
வம்பான கோளணுகா மல். (118)

## திருமூலநகர்மணிகேசுரம் மேலப்பாளையம்.

வில்லாண்மை யாளுஞ்செய் மெய்முத் தொழிலாளும்
வல்லாண்மை காட்டு மகாதேவா—நல்லாய்
மனுதின கரன்போல் மணிகே சுரத்தோ
யனுதினமு மென்றனைவந் தாள். (119)

## திருப்பாபநாசம்.

காவலவர் போற்றுமுடி காவலவர் போற்றுதமிட்
பாவலவர் போற்றும் பரஞ்சுடரே—பூவிற்
றிருப்பா பவிநாசக் ஷேத்திரத்தோ யென்பா
லிருப்பா யருள்புரிதற் கே. (120)

## திருத்தென்காசி.

செய்ய மதிசூடுஞ் சிற்பரத யாநிதியே
வைய மதிலெனையாள் வாவாவா—துய்ய
திருத்தென்கா சிப்பதிவாழ் தேவாதி தேவா
கருத்தென்மேல் வைக்குமழ கா. (121)

## திருச்சங்கரநயினார்கோயில் ராசபுரி.

அன்னநடை யாளுமைசே ரத்தனே நன்னகையால்
முன்னம் புரமெரித்த முக்கணனே—துன்னுமலர்ச்
காவார் திருச்சங் கரநயினார் கோவில்வளர்
தேவாவந் தெற்கருணை செய். (122)

## திருக்கரிவலம்வந்த நல்லூர் கருவைநல்லூர்.

வல்லார்க்கும் பொல்லார்க்கு மல்லார்க்குங் கல்லார்க்கு
மெல்லார்க்கு முண்டென் றிருந்தாராஞ்—சொல்லார்
கரிவலம் வந்தநல்லூர் கர்த்தரைச் சுற்றித்
திரிவலம் வந் தார்க்குண்டு சீர். (123)

## திருமருதூர் கண்ணைப்பதி.

அம்புயத்த னுங்கமலை யம்புயத்த னுங்காணு
வம்புயத்த னேயெனையா ளற்புதனே—கும்ப
கடகரியை வென்றதிருக் கண்மருதூர் தன்னி
னடனமிடு ஞானசுகு ணு. (124)

## திருச்செந்தூர்.

பூவுலகுந் தேவுலகும் பூநாகர் தம்முலகும்
யாவும் புரப்பத வரன்றோ—மேவுநெஞ்சே
நீள்வளஞ்சேர்ந் தோங்குசெந்தூர் நிர்த்தனு ரென்னையுவந்
தாள்வதுதா னென்னபெரி தா. (125)

## திருவல்லம் துருவாசநல்லூர்.

கள்ளமே யில்லை கருதுகிறே னீகேளாய்
யுள்ளமே யெங்கெங்கு மோடாதே—மெள்ளநீ
தண்டார்கள் சூழுந் தனிவல்லத் தூரானைக்
கண்டார்கள் கொண்டார் கதி. (126)

## திருக்கடப்பூர் பாடலீசுரம்.

அன்று பதினறி யந்தமார்க் கண்டனுக்கே
யென்றும் பதினறி யீச்சுரனு—ரின்றெனக்குச்
சிந்தா குலந்தீர்த்துச் செல்வ மருள்கடம்பூர்
வந்தார் குலதெய்வ மா. (127)

## திருக்குருமலை.

சிந்தோதை யென்னத் திகழு மறைமுழங்கத்
தந்தோ மெனநடித்த சங்கரனே—யிந்தார்
குருமலையூர்க் காண்டவனே கோவரசே யென்பால்
வருமலை தீர்த் தாண்டருளு வாய். (128)

## திருக்கழுகுமலை.

தங்க மலையானே தற்பரனே யோர்பாகந்
தங்க மலையானே சங்கரனே—துங்கக்
கழுகுமலை தன்னிலமர் கர்த்தாவென் னுள்ளத்
தொழுகுமலை தீர்த்தரு ளுவந்து. (129)

## திருப்பசுவந்தனை.

இக்கியலை நேருமொழி யேந்திழையார் கண்வலைக்குட்
சிக்கியலை யாதருள்செய் சிற்பரனே—மிக்க
பசுவந் தனைக்குழகா பன்னு மடியேன்
சிசுவந் தனைக்குண் மகிழ்ந் தே. (130)

## திருவேடுவர்நத்தம் சுரேசுரம்.

நீதவித்த காவெனையா ணிர்மலனே யென்றுதுதி
மாதவித்த பிட்டுண்ட வள்ளலே—போதருறும்
தேவா சுரமான க்ஷேத்திரத்தாய் செல்வமெற்குத்
தாவா சுரேசருளத் தாய். (131)

## திருச்சிவதலம்.

இங்கட் குடையானைச் சித்தசனைச் செங்கனல்சேர்
தங்கட் குடையச்செய் சங்கரரைத்—துங்கத்
திருச்சிவத லம்மென்னுஞ் க்ஷேத்துரத்துத் தேவை
யுருச்சி வசியமெல்லா மாம், (132)

## திருத்தென்மலை.

முன்னாக நாணாக்கி முப்புரத்தைச் சுட்டெரித்துப்
பின்னாகம் பூணச்கும் பெம்மானே—யென்நாளுந்
தென்மலையூ ருக்கரசே சிற்பர தயாநிதியே
யென்பிழைதீர்த் தாண்டருள்வா யே. (133)

## திருக்கட்டாரிமங்கலம்.

கோவிகளை லோபக் குலாமரைப் பஞ்சமா
பாவிகளைப் பட்டழுந்தப் பண்ணுவார்—மேவுதிருக்
கட்டாரி மங்கலத்துக் கர்த்தனா ராதிமறைக்
கெட்டா ரமங்கலத்தி லே. (134)

## திருக்கருவேலங்குளம்.

அன்பான தேவா வடியே னிடத்திருக்குந்
துன்பான தெல்லாந் துடைத்தருள்வாய்—நன்பாரி
லாய திருக்கருவே லங்குளத்தில் வாழ்பரனே
தூயகரு வேலந்தந்து. (135)

## திருக்கரிசூழ்ந்தமங்கலம்.

முந்தமிரு கண்ட முனிபுதவு மார்க்கண்ட
னந்தகனை வென்ற தறியாயோ—தந்தக்
கரிசூழ்ந்த மங்கலத்துக் கர்த்தனைக் கண்டார்க்
> கரிசூழந்த பூவிலெதிர் யார். (136)

## திருவாராப்பூர்தன்மலை.

மைய லுறும்பொழில்சூழ் மாலிமைய மீன்றதிருத்
தையலுமை யோர்பாகந் தன்னில்வைத்த—மெய்யனே
வாராப்பூர் வாழும் வரதகிரு பாகரனே
தீராப்பூர்வவ் வினையைத் தீர். (137)

## திருவூற்றுமலைவீரகேரளம்புதூர்.

ஈசனையே கூறென் றிலகுதமி ழவ்வைசொன்ன
வாசகத்தைக் கேட்டு மலைப்பென்ன—பேசுநெஞ்சே
கேளு திருவீர கேரளம்பு தூரானை
நாளுந் திருவேற நாட்டு. (138)

## திருச்சேற்றூர் விகடேசுரம்.

வந்தியமன் வாட்டாமன் மாற்றி யருளியெனை
யந்தியகா லந்தனில்வந் தாதரிப்பாய்—சந்ததமும்
பொங்கரா வேணிப் புகழ்ச்சேற்றூ ராளவந்த
சங்கரா சோணா சலா. (139)

## திருவீரமண்டலம்வீரசோஷன்.

வாசமிகு ஞானமதை வாற்குரு விக்குப
தேசம் புரிந்தகுரு தேசிகனே—நேசமுடன்
வீரமண்ட லத்திலமர் வித்தகனே நாயேன்பால்
வாரமண்ட லஞ்செய்தாள் வாய். (140)

## திருக்கமலைநபந்தீசுரம்.

நஞ்சடையத் தானருந்தி நாகர்க் கமுதருத்துஞ்
செஞ்சடையா ஞானச் செழுஞ்சுடரே—மஞ்சனையாள்
நீதா விரதமிகு நீள்கபந் தீச்சுரத்து
நாதா வரதசுகு ணா. (141)

> அரி-கடல்.

## திருத்தரக்குடிதரணீசுரம்.

வல்ல வினைபோக்கி மாநிதிய முங்கொடுத்துப்
புல்லனெனை யாளவந்த புண்ணியனே—மல்லமருந்
தாலம் புகழுந் தரணீச் சுரத்தானே
சீலம் பெருகுமர சே. (142)

## திருபாளையங்கோட்டைபத்திரேசுரம்.

சரதனே மெய்ஞ்ஞான தற்பரனே யோக
வரதனே யெற்கருள்சீ மானே—விரதமிகு
வீட்டையார் கேட்டாலு மேவச்செய் பாளையங்
கோட்டையா வந்தெனையாட் கொள். (143)

## திருவிருக்கங்குடி நிற்கீசுரம்.

பொற்பரசு பாணிமதி பூத்தமலர் வேணியதி
நற்பரசு கானந்த நாதனே—கற்புத்
திருவிருக் கங்குடிவாழ் தேவாநீ யெற்குத்
திருவிருக்க வுந்தயவு செய். (144)

## திருவாதவூர்.

நித்த நினைவிலே நீயகலா தேயிருந்து
பத்தனுனைப் போற்றும் படியருள்வாய்—முத்தித்
திருவாத வூரரசே தேடியென்பால் வந்தே
யொருவாதஞ் செய்யா துவந்து. (145)

## திருஉத்தரகோசமங்கை.

பல்விதஞ்சேர் வாழ்வும் பவுசுஞ் சிறந்தோங்கக்
கல்விதனைச் சாற்றிக் கழல்பணிந்தேன்—செல்வி
வருமுத் தரகோச மங்கைநகர் வாழ்வே
தருமுத் தரஞ்சொல்வாய் தான். (146)

## திருவிலக்ஷமணகேசுரப்மேலாமாத்தூர்.

கந்தமூ லத்தைபுண்டு கானகமே லாந்திரிந்தே
யந்தமூ லத்தையுணர்ந் தூ மன்புடையோர்—முந்துதவம்
வேண்டா மினிச்செய்ய மேலாமாத் தூரானை
யாண்டானென் றேய்ந்துதொழு நால். (147)

## திருதருமீசுரம்

கள்ளத் திருக்குங் கபட மறியாதா
ருள்ளத் திருக்கு மொருமுதலே—தெள்ளுதமிழ்ச்
சங்கநிதி யென்னுந் தருமீச்சு ரத்தானே
தங்கநிதி தந்தருணீ தா. (148)

## திருமுகவை முத்தியம்பதி

அகரம்போ லெவ்வுயிரு மாகி நிறைந்த
மகரவிழி யாளுமைக்கு வாய்த்த—செகதீசா
போற்று || முகவை புரக்கும் பராபரமே
சாற்று முகவை யினித்தா. (149)

## திருமருதூர் நயினார் கோயில்

ஆலந் திகழுமிடற் றத்தனே மெய்ப்பொருளே
பாலந் திகழுங்கட் பண்ணவனே—சீல
மருதூர்க் கரசே மகிதலமீ தென்னைக்
கருதூழ் வினையகற்றிக் கா. (150)

## திருகரும்பையேசுரம்

முன்னசத்தை வில்லாக்கி முப்புரத்தைச் சுட்டெரித்துப்
பன்னகத்தைச் சூடும் பரம்பொருளே—மன்னுங்
கரும்பையாங் சேத்திரத்துக் கர்த்தனே யென்னுள்
ளிரும்பையிள கச்செய்தரு ளே. (151)

## திருக்கொடுமனூரீச்சுரம்

போதே வனைமுன்னம் பொன்னுதற்கண் ணாலெரித்த
மாதே வனைத்துதித்து வாழ்த்திடிலிப்—போதேதா
னெங்கள் கொடுமனூ ரீச்சுரத்தன் றானருளாற்
றங்கள் கொடுமைகெடுந் தான். (152]

## திரு எமனேசுரம்

மந்திரசொ ரூபா வரோதய சிவானந்த
சுந்தரகோ லாகல சுகாதிபனே—சந்ததமு
மெத்திசையும் போற்று மெமனேச் சுரத்தரனே
சித்திசைய நின்கிருபை செய். (153)

|| உகவை-மகிழ்ச்சி

## திருபரமக்குடி

வானத் தனுமயனும் வானத் தனுங்காணாத்
தானத்த ஞானபர தத்துவத்தன்—ஞானப்
பரமக் குடிவளரும் பண்ணவனே யுன்றன்
பரமக் குடியாகப் பண். (154)

## திருதேவியம்பதி தேவிபட்டணம்

தாயுனையல் லால்வேறு தாயுண்டோ வென்றனுக்குன்
சேயுனையே நம்பித் தினந்துதித்தேன்—வேயுதவு
பாலகத்த னேதேவி பட்டணத்தோய் தொண்டரனு
கூலகத்த னேயெனையாட் கொள். (155)

## திருராச சிங்க மங்கலம்

வாசனே முக்ய மறைப்பொருளே மெய்ஞ்ஞான
வீசனே யென்று மெனையாள்வாய்—நேச
வரத சிவ ராசசிங்க மங்கலத்துத் தேவா
சரதகுண சீலவர தா. (156)

## திருவெத்தியூர் பாதம் பெரியாள் கோயில்

ஆரணனு நாரணனு மாதிமறை யுந்தேடுங்
காரணகிர் பாகரக ணாதிபனே—பூரணமாய்
விம்பமழை தோய்பொழில்சூழ் வெற்றியூ ருக்கரசே
தம்பமெனை யாண்டருளணீ தா. (157)

## திருஎழுவன் கோட்டை வால்குடி.

நாடுதின மும்பரவு நாதனே நின்கமலத்
தாடுதிசெய் நாயேற்குத் தந்தருள்வாய்—கோடுலவு
வண்ணமதி தோயுமுடி வால்குடி மேவியவா
யெண்ணமதி யாதநிதி யே. (158)

## திருத்தொண்டீச்சுரம்

கஞ்சத் தனைத்தந்த கானத்த னுந்துதிசெய்
√யஞ்சத் தனைத்தந்த வத்தனே—விஞ்சு திருத்
தொண்டே சுரத்தில்வளர் தோன்றலே யென்றனக்குத்
தண்டே சுராவரமே தா. (159)

√ அஞ்சத்தன-விநாயகர்.

## திருவெழி முத்தி

இறைபவனே யெங்கு மிருப்பவனே தூய
மறைமுதலே ஞான மணியே—நிறையருள்சேர்
நீதவிர வேறுதவி நேரேன் வெளிமுத்தி
நாதவர மேறுங்கு றை. (160)

## திருக்கண்டனூர்

மத்தகத்தை யொத்தமுலை மானூர் மயறவிர்த்துச்
சித்தகத்தை மேவவருள் சின்மயனே—நித்தநித்தங்
கண்டனூர் தன்னில்வாழ் கத்தனே யென்றனக்குத்
தண்டமிழ்ப்பா வோதவரந் தா. (161)

## திருக்கண்ட தேவி

பாதத்தை யுன்னிப் பணியு மடியார்க்குப்
போதத்தைத் தந்தருள்செய் புண்ணியனே—நீதத்
திருக்கண்ட தேவியெனுஞ் சீர்த்திநகர்க் கோவே
கருக்கண்ட தேவசிவ கா. (162)

## திருத்தேவ கோட்டை

தந்தோ வெருளுமிடைத் தையலர்மால் கொண்டுருகி
யந்தோ மதிகெட் டலையாதே—யிந்தாகேள்
சித்தனையே செல்வமிகு தேவகோட் டைக்கரசாஞ்
சுத்தனையே நித்தந் துதி. (163)

## திருக்காரைக்குடி

மின்னாரை நீக்கியுள மெய்த்தவத்தி லேசிறந்த
நன்னாரை யன்பருக்கு நல்கியவா—பொன்னாருங்
காரைக் குடியில்வாழ் கத்தனே யெற்கினிய
சீரைக் குடியாகச் செய். (164)

## திருக்கண்ணங்குடி.

கன்னல் கமுகு கதலியுட னேசிறந்த
செந்நெல்விளை வோங்கித் திகழ்பணைசூழ்—துன்னவளங்
கூறுதிருக் கண்ணங் குடியானே யென்றனக்குச்
சீறுதிரு வேறவருள் செய். (165)

## திருச்சோழபுரம்

தூய்யனே வேதச் சுடரே சுடர்க்கொழுந்தே
யையனே ஞானத் ததிபதியே—வையகத்திற்
சோழபுர மாநகர்வாழ் தோன்றலெ யென்னையருள்
சூழநித நீவந் துகா. (166)

## திருக்குன்றக்குடி

மின்னிடத்தி னீங்காத வித்தகனே நிற்றுதிசெய்
யென்னிடத்தி னீங்கா திருந்தாழ்வாய்—துன்னுஞ்
சிகாவளமா மென்னத் திகழ்மலைவாழ் தேவா
மகாவளஞ்சேர் நன்னிதிதா வா. (167)

## திருவில்லியனூர் குன்றக்குடி

உன்னையே நம்பி யுறுதியுடன் போற்றுதல்செய்
யென்னையெ யாள்வா ரினியாவர்—மின்னைநிகர்
யம்பரனே வில்லியனூ ராதிபனே ஞானசிவ
சம்பரனே வந்தருளெந் தாய். (168)

## திருப்பெருந்துறை ஆவுடையார் கோயில்

வாச மிசையிமய வல்லியுமை யாட்கினிய
நேசமிகு நிர்மல நிராமயனே—தாசனெற்குப்
பேரான தோங்கும் பெருந்துறையூ ருக்கரசே
சீரான தோங்கவருள் செய். [169)

## திருமளம்படி மீனாட்சிபுரம்

அன்பருளந் தன்னி லனுதினமு நீங்காம
லின்பருள வந்த விறைவனே—தென்பரவு
மீனாட்சி யாபுரம்வாழ் மெய்யா வெனையருளத்
தானாட்சி யானவர தா. [170)

## திருத்தேவங் குறிச்சி அக்கினீசுரம்

இருவினையும் போக்கி யிருளகற்றி ஞானத்
திருவினையா னெய்தவருள் செய்வாய்—குருவென்பே
கூறுதிருத் தேவங் குறிச்சிநக ராதிபா
மீறுதிரு மால்பணிசோ லெ. [171)

## திருக்குடிமாமலை.

அம்பரத்த ரும்முனிவ ரானவரு மாதவரு
மிம்பருற்றே ருந்துதிசெய் யேந்தலே—தம்பம்
பிறியேன் குடுமிமலைப் பெம்மானே போற்றுஞ்
சிறியேன் குடிவளரச் செய். (172)

## திருக்கோகரணம்.

வானத்த னுங்கமல மாமறையோ னுந்துதிசெய்
தானத்த னுனசிவ சங்கரனே—ஞானத்
திருக்கோகன் னத்திலமர் தேவாதி தேவா
செருக்காக வாழ்வருளிச் செய். (173)

## திருப் புதுக்கோட்டை பவளேசுரம்.

மன்னப் பசியகல வந்தகுண் டோதரற்கா
வன்னக் குழியடைத்த வற்புதனே—மின்னப்
புதுக்கோட்டை வாழும் புனிதா சடைமேல்
* விதுக்கோட்டை வந்ததே வே (174)

## திருமருங்காபுரி.

முந்திலக்க ணங்தெரியா முக்கியநற் கீரருக்காய்
வந்திலக்க ணம்பகர்ந்த வள்ளலே—கந்த
மருங்கா புரியிலமர் வாசனே யென்பா
னெருங்கா திருப்பதென்ன நீ (175)

## திருவீரபுரி.

வன்பா யெதிர்க்கு மருவலரைத் தான்றுணித்துத்
துன்பா னதைப்போக்கிச் சொன்னமருள்—|| கொன்பாயும்
வீரபுரி யாளரசே வேணியனே சங்கரனே
மாரனர சாண்டதே வா (176)

## திருக்கோயிற் கோவில்பட்டி.

வேலைநெடு நீர்சுவர வேலைவிட்டோ னைப்பயந்த
வாலையொரு பாகமதில் வைத்தவா—சீலத்
திருக்கோவில் பட்டியில்வாழ் தேவனே யென்னை
யிருக்கோதச் செய்வா யினி (177)

* விதுக்கோள்-சந்திரன். || கொன்பாயும்-பெருமை பரவும்.

## திருநாகேசுரம் மணப்பாறை.

அப்பருஞ் சுந்தரரு மாய்தமிழாற் போற்றிசெயு
மெய்ப்பரனே யென்று விளம்பிநெஞ்சே—தப்பறவே
நீளுமணப் பாறையில்வாழ் நித்தனரு ளைப்போற்றி
நாளும் பெருவாழ்வு நாடு (178)

## திருநீலகிரி கெற்பகேசுரம்.

அத்திமுகத் தானையரு ளத்தனே யன்பருக்கீ
முத்திமுகத் தானபர மூர்த்தியே—யெத்திசையு
நீலகிரி யென்றுபெயர் நீளுங்கெற் பேசுரத்தோய்
தாலகிரி யென்னநிதி தா (179)

## திருவீரேசுரம் நாகபுரி.

கல்லா தரவமெனக் காய்வோர்பாற் செல்லாது
நல்லா தரவெனக்கு நல்கியே—யெல்லாரும்
வீரே சுரமென்னு மெய்ப்பதியா யிவ்வுலகத்
தாரேசு ருவிதமே யாள் (180)

## திருஉருத்திரேசுரம்.

ஏராருஞ் செம்பொன் னிருநிலங்கல் மக்களொடு
பேராருஞ் செல்வம் பெருகவருள்—சீரார்
திருவுருத்தி ரேசுரமாஞ் சீரூரில் வாழுந்
தருவுருத்தி ரேச்சுரநீ தா (181)

## திருத்தாரகேசுரம் பாகனெரி.

ஊழ்வினையோ சற்று முணர்விலே னுக்கிந்த
தாழ்வினை வந்தவகை தானறியேன்—பாழ்வினையின்
கேதகற்று மாதார கேசுரத்துக் கோர்முதலே
வாதகற்று மாநிதிதா வா (182)

## திருக்கந்தேசுரம் வைப்பார்.

உண்ணலையே யுன்னி யுலோபரை யேபாடி
யண்ணலுனைப் பாடாதே நானைலு—நண்ணித்
திருவைப்பார்க் கோர்முதலே தேவனேயான்சற்
குருவைப்பார்த் தோர்போலக் கொள் (183)

## திருசுதேச்சுரச் சாக்கை

கந்தமிலை காயுண்டுங் காவனமெல் லாந்திரிந்து
மந்தமிகு மாதவஞ்செய் யன்புடையீர்—வந்தொருகாற்
சூலாயுதனுஞ்சுரேசுரனைப் போற்றினல்
மேலான மோட்சமுறு மே. [184]

## திருவண்டாரம் நிஷத்தேசுரம்

நீருரு மேனி நிராமயமே யுன்னையன்றி
வேறு றெனையாள்வார் வித்தகனே—சீருறும்
வண்டார மென்னவுயர் மாநகரில் வாழரசே
தண்டார் பகையைத் தவிர். [185]

## திரு அகரனீசுரம்

மன்னர்க்கு மன்னனென மாநிதிதந் தென்றனையாள்
† பொன்னர்க்கு நேசபரி பூரணனே—யுன்னர்க்குச்
சீரகர னீச்சுரம்வாழ் தேவகிரு பாகரவு
தாரகர னீச்சுர சதா. [186[

## திருக்குண்டேசுரம்

மிக்கமனை மக்கள் விளைநிலங்கள் வீட்டினொடு
தக்கநிதி வாழ்வெனக்குத் தந்தருள்வா—யக்கலைசேர்
குண்டே சுரப்பதிவாழ் கோவே குணமிகுந்த
தண்டே சுரற்கருணை தா. [187]

## திருச்சவுரேசுரம்

நந்திரிலோ கம்புகழ நாட்டு பன்றிக் குட்டிகளை
மந்திரிக ளாக்கிவைத்த வள்ளலே—யிந்தச்
சவுரேசுரமா நலத்துக் கோர்தேவா
அவிரோத மாகவெனை யாள். (188)

## திருவருணேசுரம்.

நாடந் தரமீது நாண்மதியை யுந்தடவு
மாடந் தனிலுலவி வாழ்வோங்கும்—நீடு
வருணே சுரப்பதிவாழ் வள்ளலே மிக்க
வருணே சுரவெனையின் றுள். (189)

---

† பொன்னர்—விஷ்ணு

## திருமிருகமலை

ஒட்டார் திரிபுரத்தை யோர்நகையி னாலெரித்த
மட்டார்ந் திலகுசடை வள்ளலே—கட்டார்ந்த
வாரணனே ஞானத் தரனே மிருகமலைக்
காரணனே யென்னைவந்து கா. (190)

## திருக்கண்டேசுரம்

பெருக்காச் சிவாயவெனப் பேசவடியேற்குத்
திருக்காட்சி தந்தருளிச் செம்மை—யிருக்கார்
திருக்கண்ட கேசுரம்வாழ் சின்மயா னந்தா
திருக்கண்ட வொட்டாமற் செய். (191)

## திருமன்றுடி மங்கல குண்டலீசுரம்

வானவனும் பொன்னழகை வாய்ந்தரு § ணின்னேச
னானவனைப் போலாக நல்வரந்தா—ஞானமிகு
மன்றுடி மங்கலத்துள் வாசனே தில்லையிலே
நின்றுடி மங்கலஞ் சேர் நீ. (192)

## திருச்சுதீஸ்வரம் கீழடி

ஆதிமறைக் குட்பொருளை யத்விதசு கானந்த
சோதிமறை யாதசெக சோதியைப்—பேதைநெஞ்சே
தென்னு னவனைச்சு தீச்சுரத்தை யாளவந்த
மன்னு னவனை வழுத்து. (193)

## திருக்கோயிலூர்

சேவடிக ளுளுஞ் சிரத்திலுறப் போற்றிசெய்தேன்
பாவடிகண் டோதவருள் பாலிப்பாய்—மாவரத
வையனே கோயிலூ ராதிபனே முக்கியமாஞ்
செய்யனே ஞானவர சே. (194)

## திருப்பெருவயல்

உள்ளத் தகலாத யோகிகளுங் காணுத
வள்ளற் பரம வரோதயனும்—புள்ளுலவு
சந்தமருஞ் சோலைத் தடஞ்சூழ் பெருவயலூர்
வந்தமருந் தேவனையே வாழ்த்து. (195)

§ நேசன்-நோயுணுயெகுபேரன்.

## திருவேப்பல்

நந்தியென்பாற் கேண்மனமே நானுரைப்ப தற்கெளிதோ
சித்தியென்ப தெல்லார்க்குஞ் சிக்குமோ—தத்தி
நடித்தார் திகழேம்ப னுதனூர் கீர்த்தி
படித்தார் பெறுவார் பதம். (196)

## திருச்சாக்கோட்டை

முக்கணனே வேத முதலே யெளியேனை
யிக்கணமே வந்தா ளிறையோனே—மிக்க
கடவுளே சாக்கோட்டைக் கத்தனே யெற்குச்
சடைவுளே யில்லாமற் றான். (197)

## திருயிளையாத்தங்குடி

பாதார விந்தம் பரவு மடியாருக்
காதார மான வரும்பொருளே—நீதா
திருவிளையாத் தங்குடிவாழ் தேவாவென்பானீ
மருவிளையா தின்னமருள் வாய். (198)

## திருமகேசுரம் காணுடு காத்தான்

புன்னரிகள் யாவும் புரவிகளாக் காட்டிய
பின்னரிக ளாக்கிவைத்த பெம்மானே—வன்ன
மகேசுர மாந்தலத்தில் வாழ்பரனே மேலாஞ்
செகேசுரனெ யெற்கருணீ செய். (199)

## திருப்பாலேசுரம் கழனிவாசல்

பூவண்ணத் தானறியாப் புண்ணியனே யெந்நாளுந்
தூவண்ணத் * தானையூர் சுந்தரனே—பூவிலுயர்
பாலே சுரப்பதிவாழ் பண்ணவனே செல்வமகிழ்
வாலே சுரப்பவருள் வாய். (200)

## திருவெறியூர் திருக்கோளக்குடி

சங்கரனே சம்பு சதாசிவனே சூலமொளி
ரங்கரனே வேதத்தரும்பொருளே—யிங்கரிய
விண்ணவனே போற்றும் வெறியூ ரெனும்பதிவாழ்
பண்ணவனே யென்றணைக் கண்பார். (201)

---

$ ஆனை-இடபவாகனத்தை.

## திருவேதிகுடி

நீளுஞ் சராசரமாய் நின்றருள்வோய் நாயேனை
யாளுஞ் சமயமீ தத்தனே—நாளுமணி
யக்கனே வேதிகுடி யாளுமர சாதிபனே
நக்கனே ஞானசுகு ணை. (202)

## திருமத்தங்குடி

சொன்ன திபன்மகிழுந் தோழாதார் நிம்பையணி
தென்ன கருணைச் செழுஞ்சுடரே—யென்னையருள்
வானத் துலவுமுடி மத்தங் குடிக்கரசே
வானத் துறங்குழையா வா. (203)

## திருகுத்தங்குடி

சித்தனே மெய்ஞ்ஞான சின்மயனே யானசிவ
சுத்தனே வேதாந்த சுந்தரனே—நித்தமுயர்
குத்தங் குடியிலமர் கோவேநீ யென்றனது
சித்தங் குடிகொளர சே. (204)

## திருச்சாலைக்குடி

சச்சிதா னந்தசிவ சங்கரதயாபரனே
$ யச்சுதா நந்தமரு மங்குழையாய்—மெச்சுதிருச்
சாலைக் குடியிலமர் தாணுவே யூழ்வினையா
மாலைக் குடியோட்டி வை. (205)

## திருத்தனிச்சாத்தங்குடி

சங்கை யணிகுழையா தற்பரனே வேணிமிசை
கங்கையணி நாதா கருணையனே—பொங்குமுடன்
றண்ணார் திருத்தனிச் சாத்தங் குடிமுதலே
பண்ணார் தமிழோங்கப் பண். (206)

## திருப்புதுக்குடி

ஏதப் பொருளகற்று மின்னிசையோர் நால்வருக்கு
வேதப் பொருளுரைத்த வித்தகனே—போதமிகு
மந்திருப்பு துக்குடிவா ழத்தனே நீயென்பால்
வந்திருப்பாய் தாமதியா மல். (207)

---

$ அச்சுதா அழிவில்லாதவனே.

### திருத்தென் களக்குடி

ஆதியே சோதியே யந்தமுறா மிந்தையொரு
பாதிமுடி மீதுபுனை பண்ணவனே—கோதி
றிருத்தென் களக்குடிவாழ் தேவாவென் னுள்ளக்
கருத்தென்ன வென்றுவந்து கா. (208)

### திரு நல்லக்குடி

நின்றுலவு நாளு நிதிக்கிழவன் போலோங்கி
யென்று மழியா தெனக்கருள்வாய்—துன்று திரு
நாதாந்த மேவுதிரு நல்லக் குடியில்வளர்
வேதாந்த னேசெல்வ மே. (209)

### திருவண்குடி

வாட்டொழிலோன் றேவியால் வந்தெதிர்த்த சித்தனையோர்
நாட்டொடடங்கி யங்க நறுக்கியவா—தேட்டுர்
திருவண் குடியமருஞ் சிற்பரனே யெற்குத்
திருவண் குடியாகச் செய். (210)

### திருமலை

செய்யனே யிந்தரவஞ் செஞ்சடையின் மீதிலணி
யையனே வேதத் தரும்பொருளே—துய்ய
திருமலையா மென்னவுயர் சிர்த்தலத்தை யாள்வோய்
வரு § மலைதீர்த் தாண்டருளுவாய். (211)

பாண்டியநாடு முற்றிற்று.

---

**ஆக நாடு 1-க்கு, ஸ்தலம் 211 கவி 212.**

திருச்சிற்றம்பலம்.



---

§ அலை-அலைவு, துன்பம்.



உ

சிவமயம்.

# ஈழநாடு சிவக்ஷேத்திர மாலை.

## திருக்கோணமாமலை

அக்கந் தனைப்புனைந்த வண்ணலே மாதுலனாந்
தக்கன் றனைவதைத்த தற்பரனே—மிக்கதிருக்
கோணமெனு மாமலைவாழ் கோவே யுனதுபதங்
காணவெதி ராகவந்து கா. (212)

## திருக்கேதீசுரம்

அரிபுரத்தைக் காண வடர்க்கு மவுணர்
திரிபுரத்தைச் சென்றெரித்த தேவா—வுரியோர்க
ளேற்ற மிகுந்திருக்கே தீச்சுரம்வா ழும்முதலே
தோற்றமிகுந் தாளினிவந் து. (213)

## திருமுனீசுரம்

சண்டனைமுன் வென்ற தரனே யொளிர்நீல
கண்டனைமெய் யான கடவுளை—மண்டலத்தி
லெந்தவள முஞ்சேர்மு னீசுரம்வாழ் தேவனையே
வந்தனைசெய் தேத்துமன மே. (214)

## திருக்கொழும்புதீவு

கஞ்ச மலர்த்தடமுங் காவனமுஞ் சாரலுறு
மஞ்சமரும் வெற்பும் வளஞ்சிறந்து—விஞ்சு
கொழும்புதீ வென்னுநகர்க் கொற்றவனே யின்னந்
தொழும்புசெய்வேன் காப்பாய்வந் து. (215)

## திருமாவிட்டபுரம்

போதவன்மால் வேதம் புரந்தரன் காணுத
நீதவன்மார்க் கண்டனெதிர் நின்றனையாற்—பேதையெனை
யித்திருமா விட்டபுரமென்னு நகர்க்கோர் முதலே
பத்திருமா தத்திலுங்காப் பாய். (216)

## திருகிரி மலை நகுலபுரி

பாரிலுனை யல்லாது பாடே னொருவரையுஞ்
சீரிலுயர் மாதுமையாள் சேகரனே—பேரிலுயர்
கிரிமலை யாதிபனே கேண்மையிலா லோபிகளை
நேரிலினிப் பாரேன்கா நீ. (217)

## திருநல்லூர்

கோலமதி சூடிக் குலவும் பரனருளாற்
சீலமதி மேவுஞ் செயலுடையீர்—தாலமதிற்
§ சேர்க்குமுதற்றரமாஞ் செந்தமிழா னல்லூரைக்
காக்குமுத லைப்பாடுங் கள். (218)

## திருநகுலேசுரம் சத்திரம்

நச்சரவம் பூண்டகரு ணாகரனை நாடாத
துச்சரவம் போக்காத தொல்லோனை—யிச்சியா
தேமனற வென்றநகு லேசுரனைப் போற்றுதல்செய்
மாமனமே யாள்வான வன். (219)

ஈழநாடு முற்றும்.

---

## ஆகநாடு 2-க்கு ஸ்தலம் 219. கவி 220.

திருச்சிற்றம் பலம்.



---

§ சேர்க்குமென்பது-ஆசேதுகை.



உ

சிவமயம்.

# மலைநாடு சிவக்ஷேத்திரமாலை.

## திருவஞ்சைக் களம்

பொங்கரவ ணிந்தசிவ புண்ணியபு ராதனனே
சங்கரநா ராயணத யாபரனே—மங்களஞ்சே
ரஞ்சைக் களப்பதிவா ழுத்தனே செல்வமிக
நஞ்சக் களத்தேவா நல்கு. (220)

## திருச்சுவிந்திரம்

மூடமதி யேயுனக்கு முன்புத்தி சொன்னதெல்லா
மாடரவுக்கூற்றியற்பா லானதுவே—நாடி
யிணங்குவாய் நீதான்சு சீந்திரத்துத் தேவை
வணங்குவா யெல்லாம் வரும். (221)

## திருநீர் வேலி

வெம்பியுளம் வாடி விருதா வலையாது
நம்பியுனை வந்தடைந்தே னாயகனே—யம்புவியி
னீர்வேலி யென்னுநகர் நின்மலனே யென்னையென்றுங்
* கார்வேலி போலிருந்து கா. (222)

## திருவில்லூன்றி

சீருலவுங் கங்கைதிகழ் செவ்வே ணியிற்கொன்றைத்
தாருலவுஞ் சங்கரச் தாசிவனே—மேருமலை
விற்பரனே வில்லூன்றி மெய்ந்நகரில் வாழ்ந்தருளுந்
தற்பரனே வந்துபதந் தா. (223)

## திருவாலி களுவலை

தரையேத்து மன்பர்களைச் சாற்றலரு முத்திக்
கரையேற்றுங் கிர்பைக் கடலே—விரைசேருங்
காவுலவும் வாலிக் களுவலையில் வாழ்முதலே
மாவுலகி லென்றனையாள் வாய். (224)

* கார்வேலி-மேகமாகியவேலி

## திருநெல் வேலியூர்

கல்லா லடியினுங் கத்தனை நல்விசையன்
வில்லா லடியுண்ட மெய்ப்பொருளே—சொல்லாரு
நெல்லைநக ராதிபனே நீயல்லால் வேறுதவி
யில்லைநக ராதா ளெனை. (225)

## திருநெட்டூர்

அத்தனே ஞானத் தரும்பொருளே யன்பர்சூழ்
பித்தனே யென்னையருள் பெம்மானே—முத்தர்வாழ்
நெட்டூருக் கோரரசே நிட்களா னந்தனே
மட்டூரும் வேணிவர வா. (226)

## திருச்சாமலை சந்திரபுரி.

சுந்தரி கபாலி துரந்தரி வராகிதுர்க்கை
யந்தரியோர் பாகத் தமர்ந்தவா—சந்ததமுஞ்
சாமலையூ ரென்னுந் தலத்தரசே யென்னுளத்து
மாமலைதீர்த் தாண்டருள வா. (227)

## திருராச வல்லிபுரம்.

வாச விமயமருண் மாதையிடப் பாகம்வைத்த
யீசனே யன்பர்க் கெளியவனே—நேசத்
திருராச வல்லிபுரத் தேவாநா யேனுக்
கொருராச வாழ்வரு ளுவாய். (228)

## திருஆத்தூர்ராசபுரி-

கல்விசற்று மில்லாதார் கண்ணிரண்டு மில்லாதார்
கல்வியே முத்திவழி காட்டுவதாற்—கல்விதனை
யல்லாருஞ் சோலைதிக ழாத்தூரார்க் கன்புசெயக்
கல்லதார்க் கென்னுங் கதி. (229)

## திருவல்நாடு பணிசுரம்.

உன்பதத்தைப் போற்று முறவோர்க் கினிதான
நன்பதத்தைத் தந்தருள்செய் நாதனே—யின்பமுடன்
வன்னாடு மாநகர்வாழ் வள்ளலே யென்றனையாள்
† யெங்நாடும் போற்றுமிறை யே. (230)

† எந்தநாடும் - மெல்லின வெதுகை.

## திருமுறப்பநாடு பாரிசம்.

தேருந் தவமுனிவர் சித்தர் கணநாத
ராரும் பரவு மருட்கடலே—பாருள்
முறப்பநாட் டெக்கரசே முத்தொழிற்கு முன்னோய்
சிறப்பநா யேற்குதவி செய். (231)

## திருப்பொன்னேரி பவளேசுரம்.

வேத னரியறியா வித்தகன்றொண் டர்க்கருள்செய்
போதா னெவர்க்கும் புராதன—னீதத்
திருப்பொன்னே ரிக்கதிபன் சித்தர்சூழ் தேவ
†னிருப்பெனென் னெஞ்சிருந் தானே. (232)

## திருஅரிய யனமர்ந்தல் அமரபுரி.

எந்நாளு நின்று ளிருதயத்தி னீங்காது
பொன்னாருஞ் செந்தமிழாற் போற்றினேன்—முன்னா
மரியயன்மாந் தற்பதிவா ழுத்தனே யென்பாற்
கரியமய னீக்கியருள் கா. (233)

## திருவிடைப்பள்ளி.

தேவுமாய் மானிடமாய்ச் செப்புஞ் சராசரங்கள்
யாவுமாய் நின்றருள்செய் யண்ணலே—மேவித்
திருவிடைப் பள்ளியில்வாழ் தேவாவோர் தாயின்
கருவிடையு றுமலெனைக் கா. (234)

## திருக்கொல்லி யறைப்பள்ளி.

மாநாகம் பூண்டிலகு வள்ளலே யெவ்வுயிருந்
தானாக நின்ற தயாபரனே—வானோர்கள்
பன்னுதிருக் கொல்லியறைப் பள்ளி யரசேயா
னுன்னுதிருச் செல்வ முதவு. (235)

## திருக்குளையூர்.

இந்தரனே பொற்கயிலை யீசுரனே நற்சோம
சுந்தரனே யாவரும்பே சுந்தரனே—சந்ததமும்
போதா திருக்குளையூர்ப் புண்ணியனே யன்பர்சூழ்
நாதா வெனக்கருணீ நா. (236)

† இருப்பு-இரும்பு.

## திருப்பொய்கை.

இமையவரை யின்றெடுத்த வென்னன்னை பாகா
சமையமிது வந்தருள்வாய் சாமி—தமையுணர்வார்
மண்டோய வந்தித்து வாழ்த்துதிருப் பொய்கைநகர்
கண்டோ யெனையும்வந்து கா. (237)

## திருநெற்குணவூர்.

நீதியே வேதாந்த நின்மலசொ ரூபிசெக
சோதியே மூவருக்குந் தோன்றலே—யோதுதிரு
நெற்குணவூ ரென்னவுயர் நீடு தலத்தரசே
நற்குணஞா னத்தையினி நல்கு. (238)

## திருநற்குணவூர்.

நாவலவர் போற்று நடேசா திருக்கயிலைக்
காவலனே ஞானக் கடலமுதே—மேவுலக
திருநற் குணவூர்வாழ் தேவாதி தேவா
வொருநற் குணமருள்செய் யுற்று. (239)

## திருக்கங்கை கொண்ட சோளேச்சுரம்.

அச்சமிலா வாட லறுபத்து நான்கிலொன்றின்
மச்சம் பிடிக்கவந்த வள்ளலே—பிச்சனையாள்
கங்கைகொண்டான் வாழுங் கடவுளே பாகத்து
மங்கைகொண்ட தேவாநீ வா. (240)

## திருச்சாய்க்குடி.

பூவுங் கடலும் பொருப்புஞ் சராசரமும்
யாவும் புரப்போ னவனிருக்கப்—பாவிநெஞ்சே
கற்றூர் பரவுங் கதிர்ச்சாய்க் குடியில்வந்து
மற்றூர்தா னுன்னையருள் வார். (241)

## திருவடமாகறல்.

துன்றுஞ் சடையானைத் தூய்த்தமிழாற் போற்றினு
லென்று நினைத்தவெலா மெய்துமே—யின்று
திருவட மாகறல்வாழ் தேவனையே வாழ்த்து
கருவட மாமருந்தாங் காண். (242)

## திருப்படம்பக்கம்.

பொற்கனகன் றேழா புவிதா மனமிரங்கி
நற்கனக மின்றெனக்கு நல்குவாய்—யெற்குத்
திருப்படம் பக்கமெனுஞ் சீர்த்தலத்துக் கோவே
விருப்படங்க லுந்திர வே. (243)

## திருக்களத்தையாதிதேச்சுரம்.

துட்டை விரும்பிவந்த துட்டயாழ்ப் பாணனஞ்சக்
கட்டைவிற கைச்சுமந்த காரணனே—யிட்டத்
திருக்களந் தையாதி தேச்சுரத்தோ யென்னை
மருக்களங்க மாற்றியருள் வாய். (244)

## திருக்கீழ்க்கோட்டூர்.

கிள்ளைக் குயருமொழி கீற்றுமதி போலுநுதல்
வள்ளைக் குழையார் மயறவிர்த்துப்—பிள்ளைமதி
சூடியவா கீழ்க்கோட்டூர்த் தோன்றலே தில்லையிலே
யாடியவா வென்னை யருள். (245)

## திருமணியம்பலம்.

நின்றொண்டர் யாரு நிகழ்த்தவருஞ் சுந்தரர்க்கு
வன்றொண்ட னென்றுபெயர் வைத்தவா—வொன்றேனு
மாசடையா மிக்க மணியம் பலத்தரசே
வாசடையா தென்னையருள் வாய். (246)

## திருமுகத்தலை.

கலைகாட்டிக் கண்காட்டிக் கைகாட்டிக் கொங்கை
மலைகாட்டி மின்னார் மயக்க—நிலைதீர்
திருமுகத்த லைப்பதிவாழ் தேவா வெனையா
வரு † முகத்த லைச்செய்ய வை. (247)

## திருத்திரை லோக்கிய சுந்தரம்.

சக்கரவர்த்தி யாகவந்து தாரணியை முன்னாண்ட
வுக்ரகுமா ரன்றனையு மோர்ந்தளித்த—விக்கிரமனே
துய்யதிரை லோக்கிய சுந்தரனே யென்னையென்றும்
வையமதி லேயருள வா. (248)

---

† உகத்தலை-மகிழ்ச்சியை.

## திருவண்ணால் வாயல்.

நின்றென்று சூழலகி னீள்கந்த மூலமுண்
டென்றென்று மோடியலைக் தென்னபல—ஞென்றுசொல்வே
னண்ணால்வா யற்பதியா னலயத்தை வந்துகண்டா
லெண்ணால்கை கூடிவருமே. (249)

## திருஞாழல் வாயல்.

நந்துலவு செய்பருமை நாதா வெனையருள
வந்துலவு ஞான வரோதயனே—முந்துபொழில்
வாய்ந்த திருஞாழல் வாயனக ருக்கரசே
யாய்ந்ததிருச் செல்வ மருள். (250)

## திருவிடைக்குளம்.

ஆறுதா ரத்திலுறை யம்மையிடப் பாகனே
சீறுதா ரத்தினமுந் தீதகற்று—யாறுத்
திருவிடைக்கு ளத்துராய் செல்வமரு ளிச்செய்
கருவிடைப்பு காமலென்றுங் கா (251)

மலைநாடு முற்றிற்று.

---

**ஆக நாடு 3க்கு, ஸ்தலம் 251 கவி 252.**

திருச்சிற்றம்பலம்.







சிவமயம்.

# கொங்குநாடு சிவக்ஷேத்திரமாலை.

## திரு வெஞ்சமர்க்கூடல்

வெஞ்சமருக் கஞ்சாத வின்மலைய தானகொடு
நஞ்சமருங் கண்ட நடேசனே—விஞ்சுபுகழ்
வந்த திருவெஞ்ச மர்க்கூட லுக்கரசே
சந்ததமும் வந்துநிதி தா. (252)

## திருக்கருவூர் திருவாநிலை.

சங்கையணி யுங்குழையா தற்பரமே செஞ்சடையிற்
கங்கையணி யாதிக் கடவுளே—துங்கதிரி
சூலத்தைக் கொண்டவனே சொற்கருவூ ருக்கரசே
யாலத்தை யுண்டவனே யாள். (253)

## திருப்பாண்டிக் கொடுமுடி.

ஆற்ற லுடையானே யன்பர்பணியானே
யேற்ற முடையானே யென்றனையா—டேற்றமிகுங்
கொங்கலருஞ் சோலைக் கொடுமுடிவா ழும்பரனே
மங்கலகு ணாகர தேவா. (254)

## திருச்செங்குன்றூர் நாகாசலம் திருச்செங்கோடு.

திங்களணி வேணிச் சிவனே செழுஞ்சுடரே
மங்களகு ணாகரவ ரோதயனே—யிங்கெனையாள்
செய்ய திருச் செங்குன்றூர்த் தேவாதி தேவனே
மையணியுங் கண்டனே வா. (255)

## திருநணா பவாநிக்கூடல் பவாநி.

கள்ளத் திருக்கறுத்துக் காசினியி லுத்தமர்க
ளுள்ளத் திருந்தருள்செய் யுச்சிதனே—வெள்ளைகா
ரானை யுரித்தவனே யாய நணைப்பதியாய்
மானைத் தரித்தவனே வா. (256)

## திருமுருகன் பூண்டி.

அப்பணிந்த வேணி யரனே யரும்பொருளோ
துப்பணிந்த மேனிச் சுடரொளியே—யிப்புவிக்கோர்
சித்தனே செல்வத் திருமுருகன் பூண்டியில்வா
முத்தனே யென்றணைவந் தாள். (257)

## திருப்புக் கொளியூர் அவிநாசி.

செல்வமிக வோங்கச் செயம்பெருக வெஞ்ஞான்றுஞ்
சொல்வளமை குன்றாச் சுகந்தருவாய்—கல்வி
யவிநாசி யம்பதிவா ழையனே யான்செய்
பவநாச மாகவுங்கண் பார். (258)

## திருப்பேரூர் மேலைச்சிதம்பரம் பேரனூர்.

கையானைத் தோலுரித்த கையானை யெற்கருணன்
மையானைக் கண்டமொளிர் மையானைச்—செய்ய
வருளுதவும் பேரனூ ராதிபனை நெஞ்சே
பொருளுதவு கென்றுதினம் போற்று (259)

## திருவெள்ளியங்கிரி கிள்ளிகுடி.

சீலத்தைக் கொண்டதவ தேவரமு தத்திலெழு
மாலத்தை யுண்ட வரும்பொருளே—ஞாலத்திற்
பொற்பமரு தோங்கும் புகழ்திருகிள் ளிக்குடிவாழ்
தற்பரா னந்தவர தா. (260)

## திருமாகுடி.

தராதரங்க டோறுதை சண்டாளர் பாற்போய்ப்
பராபரனே யென்றுகவி பாடி—நிராயுதனு
யோடியலை யாதருள்வா யோங்குதிரு மாகுடியாய்
நாடியசெல் வத்தையினி நல்கு. (261)

## திருவெண்ணெய்மலை மணல்மேடு.

மெய்யிலொரு மானுமுடி மீதிலொரு மானுமிடக்
கையிலொரு மானுமுற்ற கர்த்தனே—துய்யவருள்
மெய்யா மணன்மேட்டு வித்தகனே தொண்டர்கு
ழையா வினியெனைவந் தாள். (262)

## திருத்தலத்துறை.

மின்றங்கு மாமிக்கா வேலைகளோ ரேழுமொன்று
வன்றங் கழைத்ததிலே சானதுவோ—வின்று
திருத்தவத்து றைப்பதியான் செல்வமருள் செய்யுங்
கருத்தவத்த மாகாது காண். (263)

## திருச்சிவமலை வேதவனம்.

ஆதியே வேதத் தரும்பொருளே யாரமுதே
சோதியே ஞானச் சுடரொளியே—நீதியுறு
வேத வனநகர்வாழ் வித்தகனே முக்யசெக
நாதவன மேவுசுகு ணா. (264)

## திருமருதமலை மருதங்குடி.

சந்த மருவறுகு சாத்து மரவிந்த
மிந்தமரு வேணி யிறையவனே—முந்த
மருதங் குடியமரும் வள்ளலே யென்றுங்
கருதெங் குடிவளரக் கா. (265)

## திருத்தஞ்சை தளிக்குளம்.

அங்கம் புனைந்தானே யாலம் புனைந்தானே
சங்கம் புனைந்தானே தற்பரனே—துங்கமறை
சாற்றுதிருத் தஞ்சை தளிக்குளம்வா ழீச்சுரனே
§யேற்றுதிருச் செல்வமரு ளே. (266)

## திருப்பழயாறை.

ஆரணனே வேதத் தரும்பொருளே முத்தொழிற்குங்
காரணனே மிக்ககரு ணாகரனே—வீரப்
பழையாறை யென்னும் பதியரனே சங்கக்
குழையானே யென்னையாட் கொள். (267)

## திருப்பூந்துறை.

தேசுமிகுந் தோங்குந் திறல்விசைய னுக்குமுனம்
பாசு பதங்கொடுத்த பண்ணவனே—பேசுந்
திருப்பூந் துறையானே தேவாவென் வீட்டில்
திருப் ¶பூந் துறையவருள் செய். (268)

---

§ ஏற்று ஏறச்செய்கின்ற; அதிகப்படுத்துகின்ற.
¶ புகுந்தென்பது-பூந்தென உலகவழக்குமரூஉ மொழியாயிற்று.

## திருச்சென்னிமலை.

மெய்பதனி லோர்மானும் வேணிமிசை யோர்மானுங்
கைபதனி லோர்மானுங் காட்டுவாய்—துய்யதிருச்
சென்னிமலை யென்னுநகர் தேவா வெனதுளத்தின்
மன்னிமலை யாதெனையாள் வா. (269)

## திருப்பெருந்துறை சாலீசுரம்.

அன்றுமார்க் கண்டற் கயனெழுத்தை யும்மகற்றி
யென்றுமீ ரெட்டளித்த தென்னபொய்யா—நின்றுநெஞ்சே
யோசிப்பாய் நற்பெருந்து றைப்பதியா னுண்டென்று
பூசிப்பா யிங்கிதைநம் பு. (270)

## திருப்பஞ்சாக்கை.

நாடுங் கவிவலரே நண்ணுமே நன்னிதியந்
தேடுங் கவிகள்பல செந்தமிழாற்—பாடுங்கள்
பஞ்சாக்கை யென்னும் பதியானை வாரிதரு
நஞ்சான கண்டத்தா னை. (271)

## திருநெடுவாயல்.

காண்கா லனையுதைத்த கத்தன் றனைத்தேடி
வீண்கால மாவலைந்து விட்டோமே—சேண்காணு
மிந்திருக்குஞ் செஞ்சடையா னிங்குநெடு வாயலிலே
வந்திருக்க நாங்காணு மல். (272)

## திருநெய்தவாயல்.

நில்லாம லென்னை நினையாமல் வீணர்பால்
பொல்லாக் கவியெநி போய்விடுவாய்—சொல்லாம
$ னீளடிமை யாதுறைவோ னெய்தவா யற்பதியில்
லாளடிமை யாக்கொண்ட தால். (273)

## திருக்குணவாயல்.

ஓமனமே கேளுனக்கோர் யோசனையைச் சொல்லுகிறே
னுமதுமெய் யென்றுறுதி யாக்கொள்வாய்—காமமதை
மாற்றுந் திருக்குண வாயலா னைப்பரவிப்
போற்றுநிற்கு நேரார் புகல். (274)

---

$ நீளடியையால்-நீண்ட பாதத்தையுடைய கரியஆலமரம்.

## திருராசிபுரம் நடேசுரம்.

கோளுமுனிவுங் கொடுமைகளெல் லாமகற்றி
நாளும்பஞ் சாக்கரத்தை நாட்டியே—நீளுமறை
சாற்றுதிரு ராசிபுரந் தன்னிலிருந் தாள்பரனைக்
கூற்றுதைத்தா னைக்கை குவி. (275)

## திருநாமக்கல் ராமணீசுரம்.

பவகண்டந் தீர்த்துப் பலவரங் கடந்து
நவகண்ட முப்புரக்கு நாதா—தவங்கொண்ட
நாமக்கன் மாநகர்க்கு நாதனென வந்தவா
காமக் குறையகற்றிக் கா. (276)

## திருவிசாகபட்டணம் சந்தீசுரம்.

வேதாவு மாலு மிகுமறையுங் காணாத
நாதா வுனையினிமே னன்மர வேன்—மாதேவ
வித்தகா தூயா விசாகபட்ட ணத்திலமர்
சித்த நாயேற்கருணீ செய். (277)

## திருத்தாராபுரம் தரணீசுரம்.

நந்தனவ னச்சிறப்பு நற்றடா கப்பரப்புஞ்
சந்தனவ னப்பெருக்குந் தான்விளங்குஞ்—சுந்தரஞ்சேர்
தாரா புரத்திலமர் தற்பரனே யென்றனையா
டரா புரமகலா தே. (278)

## திருமுடிகொண்டான் வாலீசுரம்.

பைந்தருமன் றந்ததிறற் பார்த்தனுக்குப் பாசுபதந்
தந்தருண்மெய்ஞ் ஞான தயாபரனே—வந்து
முடிகொண்டா னென்றுரைக்கு மூதூரை யாளும்
¶ படிகொண்ட தேராய்கண் பார். (279)

## திருஅரசிலையார் அக்னீசுரம்.

ஆரங் கமழ்ப்புயனே யன்பர்துதி நாயகனே
தீரங் கனகத் திருவருள்வாய்—பாரி
லரசிலையா ரென்னுநக ரத்ததிபா மாரன்
யரசிலையா மேவுசுகு ணை. (280)

¶ படிகொண்டதேர்-பூமிரதம்.

## திருவாழ்வா மங்கலம்.

ஆனை யுரித்தோனே யாலந் தரித்தோனே
மானைக் கரமதனில் வைத்தோனே—கானையுறு
மாதவர்கள் சேர்வாழ்வா மங்கலத்தில் வாழ்முதலே
பாதவர்கள் யெய்தாது பார். (281)

## திருயீரோடு கணபதேசுரம்.

ஆதியந்த மான வரசே யரும்பொருளே
மாதியைந்த பாக வரோதயனே—யோதுமறை
தேரும்பெ ருங்கணப தேச்சுரத்தோ யென்னையரு
ளாருங் கணபதிதே வா. (282)

## திருப்பவானி நன்னிலம்.

நாடு மடியே னவையோர் தமைப்பாடி
வாடு மெளிமையற வந்தாள்வாய்—தேடுபுகழ்
நன்னில மாதலத்தி னூடும் பரதேவா
விந்நிலத்தில் வாள்வருளி யே. (283)

## திருக்கருப்பூர்.

வேதப் பொருளே வெளியே நிராமயமே
நாதப் பொருளே நவரசமே—யோதுதிரு
வாய்க்கருப்பூ ரத்தனே வாழ்த்துமடி யேனினியோர்
தாய்க்கருப்பு காதவரந் தா. (284)

## திருக்கோடுசேரி.

வந்தனமுன் றந்த வரையா தரித்தருள்செய்
கந்தனைமுன் றந்தகரு ணாகரனே—சந்ததமுங்
கோடுசேரி யென்றுபெயர் கொண்டநக ருக்கரசே
நீடுசெறி வாழ்வையரு ணீ. (285)

## திருமேட்டுப்பாளையம் கடலேசுரம்.

தினமே யுனக்குண்மை செப்பினதை விட்டு
மனமேவே றென்றுவழுத் தாதே—கனமேவு
மெய்க்கட லேசுரம்வாழ் வித்தகனை வாழ்த்துநிதி
மைக்கடல்போ லாக வரும். (286)

### திருக்காரைக்கால் கணீசுரம்.

பூமன் றலையறுத்த போதகனே பூவாளிக்
காமன் றனையெரித்த கண்ணுதலே—நேமமிகு
காரைக்கா றன்னிலமர் கத்தனே நிற்போற்று
வாரைக் $ கால் கண்டஞ்சு வான். (287)

கொங்கு நாடு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகநாடு ச க்கு ஸ்தலம் 287 கவி 288.

---

## துளுவநாடு சிவக்ஷேத்திரமாலை.

### திருக்கோகர்ணம்.

வெள்ளைவிடை யேறிவந்து மெய்யடியா ருக்கருள்செய்
வள்ளைக் குழையழகா மாதவனே—பிள்ளையான்
கோகரண மாநகர்வாழ் கோவே யருள்கிரு
பாகரனே யென்றனைக்கண் பார். (288)

### திருநஞ்சுண்ட கூடல்.

நீயே துணையெனவே நித்தமுனை யேதுதிக்கு
நாயேனை யாதரித்தா ணக்கனே—தூயர்சூழ்
நஞ்சுண்ட கூடலில்வாழ் நாதா நிராமயனே
மஞ்சுண்ட வேணி வரா. (289)

### திருஉசேனைமாகாளம்.

பத்திக்கோர் ஞானம் பதவிக்கோ ராலயமாஞ்
சித்திக்கோர் வித்தான தேசிகனே—யெத்திக்கும்
வந்துபணி யுச்சினி மாகாளிப் பட்டினம் வாழ்
வந்துலவு மார்பவரந் தா (290)

---

$ கால்-யமன். † மஞ்சுஉண்ட-நான்குமேகங்களையணிந்த

## திருநாகபஞ்சவடி சிதம்பரம்.

நீதேவ னென்று நினைந்துனையே நம்பினேன்
வாதேசெய் யாதின்று வந்தாள்வா—யோதுஞ்
சிதம்பரமா மென்னுந் திருநகர தேவா
பதம்பரவி னேனருட்கண் பார். (291)

## திருக்கோதாவரி.

வேலனெனுங் கோலனைப்போன் மேதினியில் யானுமொரு
பாலனெனை யும்புரப்பாய் பண்ணவனே—சீலமிகு
கோதா வரியெனும்பேர் கொண்டநக ரத்தோயென்
றுதர் வரியவர தா. (292)

## திருஊரலோத்தூர்.

அன்பரலக் கண்டவிர்க்கு மையனே யென்றனையு
மின்பமுட னண்டருண்ம யேச்சுரனே—விம்பதிரு
வூரலோத் தூரரசே யுண்மைப் பெருங்கடலே
யாரணிந்த நாதா வருள். (293)

## திருச்சருவகிரி.

அருணா சலபுரத்துள் ளையனே செய்ய
கருணா கரக்கடலே காவே—திருவேய்
சருவகிரி யென்னுந் தலத்தோ யொருகா
லுருவகிரி யாகியதே தோ. (294)

## திருத்தான்றோன்றியீசுரம்.

தண்டுலவு செய்யநறுந் தாமரையா னும்மாலும்
பண்டுமறை யுங்காணாப் பண்ணவனே—விண்டுபணி
தான்றோன்றி யீச்சுரம்வாழ் தற்பரனே மாமலையாய்
வான்றோன்றி நின்றருள் தேவா. (295)

## திருக்கிருஷ்ணை புல்லூர்.

காவனத் திற்றிரிந்த கண்ணப்ப னெச்சிலுண்ட
வாவனத்தி லேசிறந்த வள்ளலே—மேவெனையாள்
புல்லூ ரெனும்பதிவாழ் போதனே பொன்மேரு
வில்லூர் புயபலமீ ளி (296)

## திருச்சூரசேனம்.

சித்தகனே நாதாந்த தேசிகனே மெய்ஞ்ஞான
வித்தகனே வேதாந்த மெய்ப்பொருளே நித்தனித்தந்
தென்மதிதோ யுஞ்சூரசேனநகர் வாழ்முதலே
நன்மதிதா ஞானசுகு ணா. (297)

## திருச்சூர சேனமயானம்.

அத்தனே யுன்னையன்றி யாதரவு வேறுமுண்டோ
முத்தனே வேத முதற்கொழுந்தே—பத்தர்சூழ்
செப்பு திருச்சூர சேனமயா னத்தரசே
வொப்புதிரு வேறவரு ளும். (298)

## திருக்கந்த மாதனமலை.

அமிர்தமெனுஞ் செந்தமிழா லன்பாசப் போற்றும்
தமியேற் கிதசமயந் தந்தாள்—விமலமிக
மன்னு திருக்கந்த மாதனவெற் பாதிபனே
மின்னு திருச்செல்வ மே. (299)

## திருக்கெட்டீசுரம்.

சொற்குவிய லைசெய்து சொல்லு மடியேற்குப்
பொற்குவிய றந்து புரந்தாள்வாய்—நற்கலைசூழ்
கெட்டீச் சுரத்திலமர் கீர்த்திபர னேகலியா
லுட்டீச் சுரந்தவிர்த்தா ளு. (300)

## திருயிளமையாக்கினார் கோவில்.

பொற்பரனார் வேதப் புனிதனார் மெய்ஞ்ஞான
தற்பரனார் தம்மகிமை சாற்றக்கேள்—கற்பி
ளணங்கார் மிக்கிளமை யாக்கினார் கோவில்
வணங்கார் தமக்குமருள் வார். (301)

## திருக்கண்டமங்கலம்.

கொண்டலமிழ் தத்தைக் கொணர்ந்து பொழிவதுபோற்
றண்டமிழைப் பாடவரந் தந்தவா—வண்டார்சூழ்
கண்டமங்க லத்திலமர் கத்தனே யென்னுளத்திற்
கொண்டமம்ம ரைத்தீர்த்தாட் கொள். (302)

## திருக்களாஞ்சேரி.

எங்கு நிறைந்தரமா யெவ்வுயிரை யும்புரப்போ
னிங்குநமை யாள்வானென் றெண்ணுநெஞ்சே - சங்கைஎன்ன
சீரார் திருக்களாஞ் சேரிநக ரான்கொன்றைத்
தாராரும் வேணிவர தன். (303

## திருப்புலியூர்.

ஆதியந்த மாயிருந்த வையனே மெய்யதனிற்
பாதியந்த மாதிருந்த பண்ணவனே—சோதி
மலிபுலியூர் வாழு மகதேவா வென்பாற்
கலிபுலியூ ராமனீ கா. (304)

## திருக்கூவம்.

நீயே துணையலது நீணிலத்தி லென்றனக்கு
வாயேது வேறு வழுத்துதற்குத்—தூய
திருக்கூவ மென்னுந் திருநகரா யானோர்
கருக்கூவம் வீழாது கா. (305)

## திருமலையேசுரம்.

எங்கெங்கு மேநிறைந்தே யெவ்வுயிரை யும்புரக்க
வங்கங்கு நின்றருள்செய் யத்தனே—யிங்கு
மலையே சுரத்திலமர் வள்ளலே செல்வ
நிலையே யெனக்கருள்செய் நீ. (306)

## திருமங்கையேசுரம்.

மோனவடி வாய்நிரைந்த மூர்த்தியே முத்தொழிற்குத்
தானவடி வாய்நிரைந்த தற்பரனே—ஞானத்
திருமங்கை யேசுரம்வாழ் சிற்பரமே பாகத்
தொருமங்கை யேயகலா தோய். (307)

## திருமாலயன்றுறை.

எள்ளுக்கு ளெண்ணெயைப்போ லெவ்வுயிர்க்கு மவ்வுயிரா
யுள்ளுக்கு ளேயிருக்கு முத்தமனே—விள்ளுந்
திருமா லயன்றுறைவாழ் தேவா கலியால்
வருமா லயகல வை. (308)

## திருப்பனங் காட்டூர்.

தீர்ப்பா யவத்தைச் செயலருள்வா யேழைமுகம்
பார்ப்பா யெனையென்றும் பண்ணவனே— † கார்ப்பாய்
திருப்பனங்காட் டூரரசே சேயிழையார் விட்ட
‡ கருப்பனங் காட்டுமயக் கை. (309)

## திருவலி தாயம்.

தமரான நேசத் தனமா பதிபு
மமரா பதியுங்கண் டஞ்ச—விமல
வலிதாய மென்றுரைசெய் மாநகரா யெற்கு
வலிதாய செல்வமருள் வா. (310)

## திருவட முல்லைவாயல்.

ஆலமரம் போலவிழி யாயிழைமே லவ்வனங்கன்
கோலமரஞ் செய்யமயல் கொண்டரனே—சீல
வடமுல்லை வாயலெனு மாநகர்க்கு வந்தாள்
திட † முல்லை வாயானைச் சேர். (311)

துளுவநாடு முற்றிற்று.

**ஆக நாடு ௲ க்கு ஸ்தலம் 311 கவி 312.**

திருச்சிற்றம் பலம்.

---

# சோழநாடு.

## சிதம்பரம் புலியூர்.

அம்பணி நாயகனே யாரரவம் பூண்டசிவ
சம்புவே மேலாந் தயாபரனே—வம்பனைத்துந்
தீர்த்தருள்வாய் தில்லைச் சிதம்பர நடேசனே
காத்தருள் நோக்குகடைக் கண். (312)

---

‡ கார்ப்பாய் - மேகங்கள் பரவிய சந்தநோக்கிப் பதரமிரட்டித்தது. † கருப்பன் - மன்மதன்.

† முல்லை - முல்லையரும்புபோன்ற பல்.

## திருவேட்களம்.

வந்தாய வோங்குதிரு மன்னுவரை முன்னுதவு
மெந்தாய் பரையி னிறையோனே—நந்தாத
தூயதிரு வேட்களம்வாழ் தோன்றலே நிற்றுநிக்குஞ்
சேயனகந் தீர்த்தருள்வந் தே. (313)

## திருநெல்வாயில் சிவபுரி

வண்டர் பரவுகொன்றை மன்னுசடைச் சங்கரனே
தொண்டர் பணிகின்ற சோதியே—விண்டுலவி
யாரும் படியுநெல்வா யண்ணலே யூழ்வினையைத்
தீரும் படியருணீ செய். (314)

## திருக்கழிப்பாலை காரைமேடு.

ஆதி பராபரனே யன்றிருவர் தேடவருஞ்
சோதியே நின்ற சுடரொளியே—நீதிக்
கழிப்பாலை மேவியவா கத்தனே பற்றார்
பழிப்பான தோடவருள் பண். (315)

## திருநல்லூர் பெருமணம் ஆச்சாபுரம்.

காலன் றனையுதைத்த கங்கா தரப்பொருளே
ஞாலமதி லென்றனக்கு நல்லவரஞ்—சீலமுடன்
றாதா திருமணம்வாழ் தற்பரனே மெய்ஞ்ஞான
நீதா கயிலையர னே. (316)

## திருமயேந்திரப் பள்ளி.

கூற்றை யுதைத்தசெய கோலா கலாவைகை
யாற்றை யடைத்த வருட்கடலே—நீற்றையணி
வார்சடையா செல்வ மயேந்திரப்பள் ளிக்கரசே
சீர்சடையா தோங்கவருள் செய். (317)

## திருத்தென் முல்லைவாயில்.

ஏனமன மாகி யிருவருந்தே டற்கரிய
வானவனே மெய்ஞ்ஞான வள்ளலே—மோனதவ
மானோர் புகழ்முல்லை யம்பதிவா மூந்தேவா
நானேறு வருந்தாதா னன்கு. (318)

## திருக்கலிக் காமூர்.

வெள்ளைவிடை மீதுகந்த வேதாந்த சின்மயனே
பிள்ளைமதி சூடுசடைப் பெம்மானே—§தள்ளையெனை
காவார் திருக்கலிக் காமூர்வாழ் தற்பரம
தேவா வெனக்கருணை செய். (319)

## திருச்சாய்க்காடு சாயாவனம்.

ஆலத்தை யுண்டபர மானந்த மெய்ப்பொருளே
சூலத்தைக் கொண்ட சுடரொளியே—கோலத்தைப்
பெற்றதிருச் சாய்க்காட்டூர்ப் பெம்மானே யெற்குதவு
வுற்றபல செல்வமுகந் து (320)

## திருப்பல்லவ னீச்சுரம்.

பாதிமதி யப்பறுகு பையரவு கொன்றைதும்பை
சோதிதிரு வேணிமிசைச் சூடியவா—வாதியே
பல்லவ னீச்சுரம்வாழ் பண்ணவனே மேலான
வல்லவனே செல்வமருள் வாய். (321)

## திருவெண்காடு.

வேதியனு மாதவனும் வேண்டியுருக் காணாத
சோதிவடி வாகிநின்ற சுந்தரனே—மேதினியின்
மின்னுதிரு வெண்காட்டூர் வித்தகா நீயெனக்கு
மன்னுதிருச் செல்வமருள் வாய். (322)

## திருக்கடை முடிகீழூர்.

திங்க ணதியறுகு செஞ்சடையி லேபுனைந்த
சங்கரனே ஞானத் தயாபரனே—துங்கவிடை
மீதே கடைமுடியூர் வீதிபுலா வந்தேவா
வாதே தெனையாளா வா. (323)

## திருக்குரு காவூர்.

பொன்னிமய மீன்றதவ புத்திரியா மென்னவந்த
கன்னிதிரி சூலிமகிழ் காதலனே—துன்னு
திருக்குருகா வூரிலமர் தேவாநீ யென்னை
சருக்குருகா தேயுகந்து கா. (324)

§ தள்ளை—தள்ளாதே.

## திருப்பிரமபுரி சீர்காழி.

நந்துலவும் பாணி நராயணனு நான்முகனு
முந்துமறை யுந்தேடு முக்கணனே—சந்ததமுஞ்
சீர்காழி நாதா சிறியேன் வினையகற்றிப்
பார்மீதி லென்றுங்கண் பார். (325)

## திருக்கோலக்கா.

வெள்ளை விடையானே விண்மதிதோ யுஞ்சடையாய்
கள்ளவிருஞ் சொல்லுமையாள் காதலனே—விள்ளுதிரு
கோலக்கா வுற்ற குணசீலா வற்புதஞ்சேர்
தாலக்கா வாதிபாநீ தா. (326)

## திருப்புள்ளிருக்கும் வேளூர் வைத்திஸ் வரன் கோயில்

அண்டபகி ரண்ட மடங்கலையும் வென்றுவருஞ்
சண்டனை யன்றுதைத்த சங்கரனே—மண்டுதிருப்
புள்ளிருக்கும் வேளூர்ப் புராதனனே யென்றனையாள்
கள்ளிருக்குங் கொன்றையழ கா. (327)

## திருக்கண்ணார் கோயில் குருமானக்குடி.

ஆரணனு நாரணனு மாதிமறை யுங்காணுக்
காரணமெஞ் ஞான நுதற் கண்ணரனே—பாரில்
திருக்குருமா னக்குடிவாழ் தேவாவென் னுள்ளச்
செருக்குலவு செல்வமருள் செய். (328)

## திருக்காட்டு பள்ளி.

வேதனொடு மாலும் விரைந்தெழுந்தே நேடும்
போதவரை யாகிநின்ற புண்ணியனே—சோதி
திருக்காட்டுப் பள்ளியில்வாழ் தேவாதி காந்த
முருக்காட்டா தாள்வா யுகந்து. (329)

## திருநின்றவூர்.

வண்டம ருஞ்சோலை வானவனு மற்றுமுள
வண்டருஞ்சூழ் ஞானத் தரும்பொருளே—தண்டமிழ்சேர்
நின்றவூர் மேவு நிமலாவென் றீவினையை
வென்றருள்வா செல்வமிக வே. (330)

## திருப்புன்கூர்.

பிட்டுக்கு மண்சுமந்த பித்தனே நற்புவன
மொட்டுக்கும் பூசைக் குகந்தவனே—மட்டுமிகு
பொன்வாவி சோலைசூழ் புன்கூரில் வாழரசே
யென்பாவ நீக்கியரு ளே. (331)

## திருநீடூர்.

அத்தனே ஞானத் தரும்பொருளே வேதியனும்
நத்தனுங் காணரிய நாதனே—முத்தர்சூழ்
நீடூரில் வாழும் நிமலா வெளியேனை
மாடூருந் தேவாகா வா. (332)

## திருஅன்னியூர்.

மானேந்து பாணி மதியேந்து வேணிசெழுந்
தேனேந்து கொன்றைத் திகம்பரனே—வானேந்து
மன்னியூர் மேவு மழகா வடியேற்கு
மன்னியூர் செல்வமருள் வாய். (333)

## திருவேள்விக்குடி.

வில்லா லடித்த விசையனுக்குப் பாசுபத
வல்லா யுதங்கொடுத்த மாதேவா—நெல்லுவயல்
மீதனத்தை மேவுதிரு வேள்விக் குடிமுதல்வா
மாதனத்தை யெற்கருளு வா. (334)

## திருஎதிர்கொள்பாடி மேலைதிருமணஞ்சேரி.

அத்தியுரி யானே யரவப் பணியானே
சத்தியுரி யானே தயாபரனே—சித்தியருள்
பாதா திருவெதிர்கொள் பாடியெனு மூதூர்வாழ்
நாதா தயாளசுகு ணா. (335)

## திருக்குறுக்கை வீரட்டானம்.

சீரார் புவிபுகழுஞ் செல்வத் திரவியமே
யோரா ரணிவேணி யுத்தமனே—பேரார்
திருக்குறுக்கை மாநகர்வாழ் தேவாமெய் யின்பந்
தருக்கு$ருக்கை யாதிபனே தா. (336)

$ ருக்கு—இருக்குவேதம்

## திருமணஞ்சேரி கீழ்திருமணஞ்சேரி.

காலன் றனைக்கொன்ற காரணா தொண்டனெனுஞ்
சீலன் மகன்பிழைக்க செய்தவா—ஞாலத்
திருமணஞ்சே ரிப்பதிவாழ் தேவா சிறியேன்
கருமணஞ்சே ராதவிதங் கா (337)

## திருக்கருப்பறியலூர் தலைநாயிறு.

ஆனை யுரித்தரிய வம்பலத்தி லாடிவரு
மானைத் தரித்துமத மாானையுந்—தானெரித்த
வையா கருப்பறிய லத்தனே யென்னையினிச்
செய்யாய் கருப்புகாச் சீர் (338)

## திருக்குரக்குக்கா.

துன்னு மதிநதியுந் தும்பை யறுகரவுஞ்
சென்னிமிசைச் சூடுசிவ தேவனே—நன்னயமாக்
காக்குந் திருக்குரக்குக் காவூர்வா முத்தனே
பார்க்குந் திருத்தயவு பண் (339)

## திருவாள் கொளிப்புத்தூர்.

அன்றிரு வருந்தேட வங்கிவடி வாயுயர்ந்து
நின்றபரா ஞான நிராமயனே—யென்றுந்
திருவாள் கொளிபுத்தூர்த் தேவா வெனதுள்
வருவாய் மிடியகற்று வாய். (340)

## திருப்பழமண்ணிப் படிக்கரை.

முப்புரத்தை யன்றெரித்த முக்கணனே யென்றுயரை
யப்புறத்தி னீக்கியரு ளையனே—யிப்புவியின்
மண்ணிப் படிக்கறையூர் வாழுந் தயாநிதியே
விண்ணிற் பரவுசிவ மே. (341)

## திருஓமாம் புலியூர்.

சோமன் றனைத்தரித்த சுந்தரனே சுந்தரஞ்சேர்
காமன் றனையெரித்த கண்ணுதலே—யேம
னொடுக்கமிநி யால்வென்ற வோமாம் புலியூர்
கடுக்கையனே யென்னையென்றுங் கா. (342)

## திருக்காறாட்டு முள்ளூர்.

இமைய வரையீன்ற வென்று மெழில்சே
ருமையையொரு பாகம்வைத்த யோகா—வமைவாகக்
காறாட்டு முள்ளூர்வாழ் கத்தனே மிக்கசிந்தி
நாறாட்டும் பாவினுக்கு நல்கு (343)

## திருநாரையூர்.

வல்ல முருகனையும் வாரணமு கத்தனையு
நல்லதவத் தாலீன்ற நாதனே—சொல்லுந்
திருநாரை யம்பதிவாழ் தேவாவென் றுன்ப
மொருநாளு மில்லாம லோட்டு (344)

## திருக்கடம்பூ ரக்கரக்கோயில்.

வஞ்சிக் கொடியிடையார் மாயப் பெருவலையி
னெஞ்ச முழன்றுமிக நீந்தாதாள் கொஞ்சுங்
கடம்பூரில் வாழுங் கருணைக் கடலே
‖ படம்பூ ணணிந்தபர மா (345)

## திருப்பந்தணை நல்லூர்.

ஆதியே சோதியே யந்தரனே சுந்தரனே
பாதிமதி சூடும் பரஞ்சுடரே—மாதிலகி
யோங்குதிருப் பந்தணைநல் லூரருள்செய் யாதிபனே
தேங்குதுயர் நீங்கவருள் செய் (346)

## திருக்கஞ்சனூர்.

மட்டுப் படாக்கொங்கை மாதர் கலவியிலே
கட்டுப் படாமலெனைக் காத்தருள்வாய்—மட்டுலவு
கஞ்சனூர் வாழுங் கருணைப் பெருங்கடலே
செஞ்சரனந் தந்தருணீ செய் (347)

## திருக்கோடி காவு.

பாலமதி சூடும் பரனே பரவெளியே
சாலவினை யைத்தவிர்க்குந் தாணுவே—கோலத்
திருக்கோடிக் காவிலமர் தேவா வெனையா
ளிருக்கோடித் தேடபர னே (348)

‖ படம்-பாம்பு; இது-ஆகுபெயர்.

## திருமங் கலக்குடி.

வாச மிகுந்துளசி மாலையணி மாதவனும்
நேசமறை வேதியனு நீணிலத்திற்—பூசலிட்டுத்
தேடியறி யாமுதலே தென்மங்க லக்குடியாய்
நாடியதி செல்வமதை நல்கு (349)

## திருப்பனந்தாள் தாடகேசுரம்.

வல்லிநிக ருந்தனத்து மாகாளி யம்மையுடன்
றில்லைதனி லேநடஞ்செய் சின்மயனே—முல்லைவளர்
செய்யார் திருப்பனந்தாட் டேவா கடுக்கையணி
துய்யா வெனையாள்வந் து (350)

## திருஆய்ப்பாடி.

ஆறுமுகத் தைப்பெற்ற வண்ணலே சென்னியிலோ
ராறு புகச்சுமந்த வையனே—யேறுசீர்
பல்கு முயர்திருவாய்ப் பாடித் தலத்தரசே
நல்குவர மிக்கசுகு ணா (351)

## திருச்சேய்ஞலூர்.

பித்தனே ஞானப் பெருமானே பேய்களுட
னெத்தினமு மேயாடு மீசனே—சுத்தமிகுந்
துற்ற திருச்சேயஞ லூரில்ர சாளவந்த
தொற்றவனே யென்றனையாட் கொள் (352)

## திருந்துதேவன்குடி.

பண்டுமறை கண்டுதுதி பாடவரிதாயவெழின்
மண்டுபுனல் சூடுசடை வானவனே—தண்டலைசூழ்
தேவங் குடிநாதா சேயன் வினையான
பாவம் பறந்திடக்கண் பார். (353)

## திருவியலூர்.

வேதன் சிரந்துணித்த வித்தகா வன்பருக்குப்
போதந் தனைப்பணித்த புண்ணியனே—காத
னயமாக வேவியலூர் நண்ணுவோ யெற்குச்
செயமாக நன்மையருள் செய் (354)

## திருக்கொட்டையூர்.

வீணாளைப் போக்கிமின்னார் மீதுமயல் கொண்டலைந்து
வாணாளைப் போக்கா வகையருள்வாய்—சேணாட
தொத்த திருக்கொட்டை யூராளுந் தற்பரனே
§ நத்தமிழை யென்னாவில் நல்கு (355)

## திருவின்னம்பர்.

சண்டனையு தைத்துனையே தஞ்சமென வெண்ணுமார்க்க
கண்டனைவந் தாண்டதிருக் கண்ணுதலே—மண்டலத்தி
லின்னம்பர் மேவு மிறையே வுமைக்கரசே
யென்னண் பருக்கருள்வா யே (356)

## திருப்புறம் பியம்.

நரியைப் பரியாக்கு நாதா முதிய
வுரிய மறைதேடு முறவோ—யரிய
புறம்பியத்தி லுற்ற புராதனனே நாயேற்
கறம்பொருளின் பந்தனைத்தந் தாள் (357)

## திருவிசைய மங்கை.

கண்டங் கரியானே கண்மூன் றுடையானே
மண்டலத்தி லென்னையருள் வள்ளலே—கொண்ட
திருவிசைய மங்கைநகர்த் தேவா விண்ணாண்டார்
தருவிசைய மன்னுவர தா. (358)

## திருவைகாவூர்.

வாடும் பயிர்க்கு மழைபெய்த வாறதுபோற்
றேடுமெனை யாண்டரு டியாகேசா—நீடுதரு
வானவர்கள் போற்றுந்தி ருவைகாவூர் நாயகமே
யானகிரு பாகரதா யா. (359

## திருக்கானூர்.

தந்திமுக னைப்பயந்த தற்பரா மெய்ப்பொருளே
யந்திமதி யைப்புனைந்த வத்தனே—வந்துதிருக்
கானூரில் வாழுங் கருணைத் தடங்கடலே
யானூ ரிறையே யருள். (360)

---

§ ந-நல்ல; நக்கிரனென்றதுபோலும்.

## திருஅன்பிலாந்துறை.

சென்டு முலைமடவார் செய்யமொழிக் காதலிலே
மண்டு மகாவினையை மாற்றுவாய்—பண்டுதிருப்
பேரன்பி லாந்துறைவாழ் பெம்மானே நாயேன்மேற்
சீரன்பி லாததென்ன செப்பு. (361)

## திருமாந்துறை.

தங்கமலை வெள்ளிமலை தன்னிலனு தினமே
யங்கமலை யோடுவள ரத்தனே—யிங்கரிய
சீதகல மாந்துறைவாழ் தேவா சிறியேன்செய்
கோதகல வந்தெனையாட் கொள். (362)

## திருப்பாற்றுறை

அன்ப ரகத்தி லகலாம லேயிருக்குந்
தென்பரம ஞானச் செழுஞ்சுடரே—யின்பதிருப்
பாற்றுறையின் மேவும் பதியே கொடுவினையை
மாற்று மிதுசமயம் வா. (363)

## திருவானைக் காவுஜம்பு கேசுரம்.

அத்தியொடு தும்பை யறுகுமதி யும்புனைந்த
சத்திக் கிடப்பாகந் தந்தவா—வெத்திசையுங்
காவார் திருவானைக் காவூரில் வாழ்ந்தருளுந்
தேவாமெய்ஞ் ஞானமருள் செய். (364)

## திருப்பைஞ்ஞிலி.

நாடியய னும்மாலும் நண்ணியன மேனமுமாய்த்
தேடியுங்கா ணாதபர தேவனே—நீடியே
பண்ணார்கா வோங்குதிருப் பைஞ்ஞிலியூர் வாழுநுதற்
கண்ணாவந் தென்னையென்றுங் கா (365)

## திருப்பாச்சிலாச்சிராமம்.

அம்புயத்தி ருந்தோனு மவ்வணங்கா ரெண்மரொன்று
யம்புயத்தி ருந்தோனு மன்றறியாச்—சம்பு
திருப்பாச்சி லாச்சிரமத் தேயிருந்து தந்தாள்
விருப்பாச்சி லாக்யமினி மேல் (366)

## திருஈங்கோய்மலை.

கொன்றை மதிசூடுங் கோவே யுமையோடு
மன்றி நடம்புரிந்த மாதேவா—நின்றுபுகழ்
நாட்டுமீங் கோய்மலைவாழ் நாதனே யென்றனுக்குத்
தேட்டுமுதல் யாவுமருள் செய் (367)

## திருப்புவன கிரிஉதயமலை.

ஓங்குமதி வல்லோ ருளத்தகலா தாகாயப்
பாங்குமதி யைப்புனைந்த பண்ணவனே—நீங்கா
வரனே திருவுதய மாமலைவாழ் தேவா
வரனே யினியெனைவந் தாள் (368)

## திருவழுவூர்.

வண்டமருங் கொன்றையணி வள்ளலே தூயதிருக்
கண்டமருஞ் சோதியனற் கண்ணுதலே—மண்டு
திருவழுவூ ரானபெருஞ் சீர்த்திநகர்த் தேவா
வொருவழுவி லாமற்கா வுற்று (369)

## திருநாகேசுரம் சேலம்பாலநாசம்.

தாலத்தை யுண்டோன் சதுர்மறையோனஞ்சவரு
மாலத்தை யுண்டோன்வந் தாதரிப்பான்—சீலந்தோர்
போற்றுதிருச் சேலப் புனிதனே யுண்டென்று
சாற்றுதிருச் செந்தமிழைத் தான் (370)

## திருவேரகம் சுவாமிமலை

காண்டா வனத்தைக் கனலிக் கிரைகொடுத்த
பூண்டா ரணிமார்பன் போரிரத—மாண்டமரில்
விட்டவன்பூ சித்ததிரு வேரகத்தில் வாழ்முதலே
யிட்டவன்பு வைத்தருள்வா யே (371)

## திருவாட்போக்கி இரத்னகிரி.

வென்றி புரிவழுதி வேட்டைதனி லேதடிந்த
பன்றிக் குருளைகட்குப் பால்கொடுத்த—துன்றுதிரு
வாட்போக்கி யென்னு மணிநகர்வா ழும்முதலே
நாட்போக்கி டாதெனையா ளன்கு (372)

## திருக்கடம்பந்துறை.

பூபால னோடு புயல்வண்ண னாகவந்த
கோபால னுந்தேடக் கூடாத—§கோபாலா
பாவார் திருக்கடம் பந்துறையில் வாழ்ந்தருளுந்
தேவாவந் தாள்வாய் தினம் (373)

## திருப்பராயத் துறை.

வில்வம் பணியறுகு வெண்மதிநன் னீறுநதி
செல்வம் பணிபுனையுஞ் சின்மயனே—கல்வித்
திருப்பரா யத்துறைவாழ் தேவாதி தேவா
மருப்பரா வுன்னடிக்கீழ் வை (374)

## திருக்கற் குடிமலை.

பாக்கியமுஞ் செந்தமிழின் பாடலுஞ் சொற்பலித
வாக்கியமு மெய்ஞ்ஞான வைதிகமும்—யோக்கியமுங்
கற்குடியாஞ் சீர்தலம்வாழ் கத்தனே நாயேற்கு
நற்குடியாம் வாழ்வுகளும் நல்கு (375)

## திருத்தோகைமலை.

அன்னம் பிரியானு மஞ்சம் புடையானும்
வுன்னன் புடையாருங் கொப்பாமோ—துன்னுதிருத்
தோகைமலை தன்னிலமர் சுந்தரனே நாயேற்கு
வாகைமலை யாதருளு வாய். (376)

## திருமுக்கீசுரம் உறையூர்.

அஞ்சுதலை யுற்றவனே யாறுதலை யாகவந்தே
யஞ்சுதலைத் தீர்த்தெனையின் றாதரிப்பாய்—விஞ்சுபுகழ்ச்
சோதியே முக்கீச் சுரத்துறை யுந்தேவே
யாதியே யென்னை யருள் (377)

## திருசிராப் பள்ளி.

ஆனை யுரித்துடுத்து மையனே மெய்யனே
மானை யொருகரத்தில் வைத்தவனே—வானிற்
றிகழ்திருச்சி ராப்பளிவாழ் நீனரக்ஷ காநீ
புகழ்வரந்தந் தாள்பிர பு. (378)

§ கோபாலா-நெற்றிக்கண்ணுடையவனே.

## திருஎறும்பியூர்.

பண்ணா ரமுதமொழிப் பார்வதியா ளின்பமுறு
விண்ணூர் பரவெளியே வேணிபனே—தண்ணா
ரெறும்பியூர் தன்னி லிருக்குந் தயாளா
வருமபிரிய மாகவெனை யாள். (379)

## திருநெடுங்களம்.

ஆறுமுக னைப்பயந்த வையனே மார்க்கண்டன்
கூறுமுகந் தன்னில்வந்தாட் கொண்டவா—சீறுமதி
சூடு நெடுங்களத்தூர்த் தோன்றலே சிற்சபையி
லாடும் பராபரனே யாள். (380)

## திருமேலைத் திருக்காட்டுபள்ளி

§ முன்னகைவில் லோடெதிர்த்த முப்புரத்தர் யாவரையும்
பின்னகைவில் லாலெரித்த பேரமுதே——§பொன்னர்
பகர்ந்திருமே லைக்காட்டுப் பள்ளியா யெற்குத்
திகழ்வரமே தந்தருணீ செய். (381)

## திருஆலம் பொழில்.

போற்று மடியார் புனிதமனத் துள்வந்து
தோற்றும் பரமே சுரப்பொருளே—சாற்றுதிரு
வாலம் பொழிலமர்ந்த வத்தனே யென்னையருள்
தாலந் தனிநிதி தந்து. (382)

## திருப்பூந்துருத்தி.

பண்டு மறைசொல் பரனே பரவெளியே
யண்டு மெளியேற் கருமிடியைத்—துண்டுபடச்
செய்வாய் வளஞ்சேர் திருப்பூந் துருத்தியினி
துய்வா யெனையா ள்வாய். (383)

## திருக்கண்டியூர்.

மாலயனுந் தேட வரையாய் நிறைந்தகுண
சீல மதிசூடுந் தேவாசீர்த்—தாலமதிற்
கண்டியூர் வாழுங் கருணா கரப்பொருளே
யண்டினே னென்றனைவந் தாள். (384)

---

§ முன்ன-முற்காலத்தவனே. § பொன்னர்-தேவர்.

## திருச்சோற்றுத்துறை.

கூற்றுக் குளம்வெருவக் கொன்றவா கூடநக
ராற்றுக்குள் ளாடல்புரி யத்தனே—சோற்றுத்
துறையகத்து வாழுஞ் சுமுகா வினியேன்
குறையகற்றுஞ் செல்வங் கொடு. (385)

## திருவேதிகுடி.

தக்கன் றனைவதைத்த தாணுவே மெய்ப்பொருளே
யக்கந் தனைப்புனைந்த வற்புதனே—யிக்குலவும்
வேதிகுடி கொண்டவர தேவணியா தூயமதி
பாதிகுடி கொண்ட பர. (386)

## திருத்தென்குடிதிட்டை.

அண்ணு மலையா யமர்ந்த வரும்பொருளே
யுண்ணு முலையாட் குகந்தவா—விண்ணோர்
திருத்தென் குடித் திட்டைத் தீனதயாளா
கருத்தென் குடிவைத்துக் கா. (387)

## திருப்புள்ள மங்கை.

அப்பணிந்த தேவா வருளே யருட்பிழம்பே
துப்பணிந்த வாயுமையாள் தோய்முதலே—செப்புதிருப்
புள்ளமங்கை மேவும் புனிதா வெளியனையா
ளுள்ளமங்கு வாடா துவநது. (388)

## திருச்சக்கரப் பள்ளி அய்யம் பேட்டை.

அந்தகனை வென்ற வருளே மனோகரனே
சுந்தரனே ஞானச் சுடரொளியே—சந்தத்
திருச்சக் கரப்பள்ளித் தேவாநின் சீர்த்தா
ளருச்சனை செய்ய வருள். (389)

## திருக்கருகாவூர்.

ஆதி பரஞ்சுடரே யண்ணலே மிக்கசெக
சோதிப் பவளநிறத் தூயனே—நீதி
பெருகுங் கருகாவூர்ப் பித்தனே வேழை
கருகுங் கரவா தருள். (390)

## திருப்பாலைத் துறை.

ஆலத்தை யுண்ட வரனே செங் கைக்கிசைந்த
சூலத்தைக் கொண்ட சுடரொளியே—சீலத்தார்
பாலைத் துறைமேவும் பண்ணவனே யோட்டுதுன்ப
வேலைத் துறையகல வே (391)

## திருநல்லூர்.

தாண்டவ மாடியசீர்த் தற்பரனே நற்புவியை
யாண்டவனே ஞானத் தருட்பரமே—நீண்ட
புகழ்பெருகு நல்லூரின் பூதநா தையா
திகழ்பெறுமென் வன்கலியைத் தீர் (392)

## திருஆவூர்பசுபதீசுரம்.

மன்றுதனில் முன்னுகந்து மாநடன மேபுரிந்த
குன்றுமுலை மங்கையிடங் கொண்முதலே—நன்றுதிரு
வாவூரில் வாழுமுக்க ணத்தனே யென்மிடியைச்
சேவூ ரிறையவனே தீர் (393)

## திருச்சத்திமுற்றம்.

அப்பணிந்த நாதா வரனே யரும்பொருளே
செப்பணிந்த கொங்கையுமை சேர்புனிதா—தப்பறுசீர்ச்
சத்திமுத் தத்திலமர் தற்பரத யாபரனே
சித்திமுற்று செல்வமருள் செய் (394)

## திருப்பட்டீசுரம்.

வல்ல வினையகற்றி வையகத்தி லென்றனக்கு
நல்ல நிதிபெருக நல்குவாய்—செல்லமலர்
மாமேவுஞ் சோலை வளந்திகழ்பட் டீச்சுரத்தி
லேமேவு ஞானவெளி யே (395)

## திருவடதளி.

வம்புலவு கொங்கையுமை மாதேவா மிக்கசெல்வ
நம்புமடி யேற்குவந்து நல்குவாய்—பம்புலவு
மஞ்சுதவழ் சோலை வடதளி மாநகர்வா
ழஞ்சுமுக நாதவெனை யாள் (396)

## திருவலஞ்சுழி

வாடுந் துயரமதை மாற்றியெழில் செல்வமிக
நாடும் படியருள்செய் நாதனே—யேடுநிகழ்
தாதார் கமலத் தடஞ்சூழ் வலஞ்சுழிவாழ்
நீதாமெய்ஞ் ஞானசுக னே (397)

## திருக்குடமூக்கு கும்பகோணம்

சந்திரனைச் சென்னிமிசைத் தானணிந்து கற்பகப்பூ
விந்திரனை யும்புரக்கு மேந்தலே—வந்துதிருக்
கும்பகோ ணத்திலுறை கோவேதா வென்றனக்கு
நம்பனே கல்வி நலம் (398)

## திருவடகுரங்காடுதுறை

அன்றுமார்க் கண்டனுக்கா வந்தகனைத் தானுதைத்து
நின்றுதிருக் காட்சிதந்த நின்மலனே—சென்றுகமழ்
கந்தமலிந் தொங்குகுரங் காடுதுறைத் தேவாவென்
பந்தவினை தீர்த்தருட்கண் பார் (399)

## திருப்பழனம்

பூவுலகி னிற்சிலந்திப் பூச்சிக்குத் தோன்றியெதிர்
காவலவ னாக்கிவைத்த காரணனே—தேவத்
திருப்பழன மாந்தலத்திற் செல்வமே யெற்குத்
தருப்பரவு செல்வமிகத் தா (400)

## திருவையாறு

இன்பாய்த் தவம்புரியு மீசுரிக்குப் பாகமதை
யன்பாகத் தந்தசிவா னந்தனே—யென்பாலில்
வந்த வினையதனை மாற்று திரு வையாற்றிற்
சந்ததமு மேவுவர தா (401)

## திருநெய்த்தானந் தில்லைத்தானம்

வன்னவிடை யானே மழுவேந்து கையானே
மின்ன லிடையாடன் மெய்க்கோவே—நன்னயஞ்சேர்
தில்லைநெய்த் தானத் திறையே செழுஞ்சுடரே
நெல்லையா யென்னையருணீ. (402)

## திருப்பெரும்புலியூர்

அந்தரங்கோ யுஞ்சிகரத் தாரூர்ப் பரவையின்பாற்
சுந்தரர்க்குத் தூதுசென்ற சுந்தரனே—வந்திப்
பெரும்புலியூர் தன்னிலமர் பித்தா வெளியேன்
விரும்புவன தந்தகுரு வே. (403)

## திருமழபாடி

வில்லதனைக் கொண்டடித்த மெய்விசைய னுக்கருள்செய்
வல்லசெக நாத மகேச்சுரனே—சொல்லார்
திருமழபா டிப்பதிவாழ் தேவாநீ யென்முன்
வருமழகா வென்றருள் வாய். (404)

## திருப்பழூர் மேலப்பழூர்

ஆரு ரரசன்மன மானதைக் காட்டமகன்
றேரூரும் போதரவாய்ச் சேர்ந்தவனே—யேரூர்
திருப்பழூர் நாதா சிறியேற் குதவு
விருப்பதனைத் தந்துதின மேம (405)

## திருக்குடந்தை கீழ்க்கோட்டம் கும்பகோணம்

முத்தனைய மூரலா மோகன் றனையெரித்த
வித்தகனே ஞான விளக்கொளியே—சித்தங்
குடந்தைகீழ்க் கோட்டமெனக் கூறுநகரோய் †கன்
மடந்தையுடன் வந்தெனையாள் வாய் (406)

## திருக்குடந்தை காரோணம் கும்பகோணம்

மானார் கலவி மயக்க மதைத்தவிர்த்துத்
தேனார்மெய்ஞ்ஞானந் தெளியவே—தானருள்வாய்
கண்டுபணிந் தென்குடந்தைக் காரோணத் தத்தனே
துண்டுமதி சூடுசெகு ணா (407)

## திருநாகேசுரம்

பாகுமொழி மாதுமைக்குப் பாகமது தானீந்த
வாகுபெறு வேணி விநோதயனே யோகமிகு
நாகீச் சுரத்தினிலே கண்ணுவோய் மெய்வடிவ
வாகீச சுரனேமுன் வா (408

† கல்மடந்தை-மலைமகள்.

## திருவிடைமருதூர்

அத்திதனைக் காத்த வரிமறையி னான்முகனும்
பத்தியுடன் தேடும் பரவெளியே—சித்தி
விடைமருதூர் மேவி விளங்கு மணியே
யடையலரைப் போக்கியெனை யாள் (409)

## திருத்தென்குரங்காடுதுறை

நீறான மேனி நிமலா செழுஞ்சுடரே
சீறான திங்களணி செஞ்சடையாய்—மாறும
லாயதிருத் தென்குரங் காடுதுறை யூர்க்கரசே
நேயதிரு வேறவரு ணீ. (410)

## திருநீலக்குடி

அந்த விசையனுக் காசையுறும் பாசுபதந்
தந்ததுபோ லின்றெனக்குத் தாதாதா—வந்துமெழில்
கொஞ்சுதிரு நீலக் குடிநக ரந்தரசெ
விஞ்சுதிரு வேறவர மே. (411)

## திருவைகன் மாடக்கோயில்

பாதம் பணிந்தேத்தும் பத்தர் மனக்கவலை
யெத மகற்றுசெக தீசனே—சீதமிகு
மாமதிதோய் கோபுரஞ்சூழ் வைகன்மா டக்கோவின்
மாமதிதோ யம்பிகை†த வா (412)

## திருநல்லம்

மாத ரவலத்துள் வாடாமனின்பதுமப்
பாதமதைத் தந்துவரம் பாலிப்பாய்—கோதகல
மாமடந்தை யோங்கி வளர்ந்திலகு நல்லமெனுஞ்
சேமநகரத்திலர சே. (413)

## திருக்கோழம்பம்

மமார்க்கண் டனுக்கு வயதுபதி னாறுதந்த
கார்க்கண்ட னைகரு ணாகரனே—பார்க்குள்ளே
தீரையா வென்வினையைத் தென்றிருக்கோ ழம்பமெனு
மூரையா நின்னருளா லுற்று. (414)

---

† தவா-நாயகனே.

## திருவாவடுதுறை

கண்ணப்ப னெச்சிறரக் காட்சிதருங் காரணனே
விண்ணைப் பணிந்தசெவ் வேணியனே—மண்ணிற்
றிருவா வடுதுறைவாழ் தேவாநீ நல்ல
குருவா வடியனையாட் கொள் (415)

## திருத்துருத்திகுற்றாலம்

சித்தனே மெய்ஞ்ஞான தேவனே யன்பர்கு
முத்தனே தூய வருட்கடலே—பத்தனையாழ்
சோலையவிர்ந் தோங்கியெழி றோன்றுதிருக் குற்றால
வாலையபி ராமிகணா வா (416)

## திருவழுந்தூர் தேரழுந்தூர்

ஐயனே யன்ப ரகவினையைத் தீர்த்தருளு
மெய்யனே துய்யமதி வேணியனே—செய்ய
பரசேந்து கையா பகர்திரு வழுந்தூர்க்
கரசேவந் தென்னையுகந் தாள் (417)

## திருமயிலாடுதுறை மாயூரம்

எல்லாமும் வல்லசித்த ரென்றுரைக்கக் கூடலிலே
கல்லாது சித்தெல்லாங் காட்டியவா—சொல்லாருஞ்
செய்யதிரு மாயூரச் சீரூர்ச் சிகாமணியே
துய்யதிரு வாழ்வருள்வந் து (418)

## திருவிளநகர்

சித்தனங்கம் வெட்டிச் செயங்கொண்டு வாள்வினைசெய்
பத்த னில்லைக் காத்த பரதேவா—நித்தநித்தம்
வந்துதிரு விளத்தூர் மாநகரோய் மிக்கநிதி
தந்துதிரு வேறவரந் தா (419)

## திருச்செம்பொன்பள்ளி செம்மனார்கோயில்

பிரியப் பரிவாற் பெருவழுதிக் காக
நரியைப் பரியாக்கு நாதா—வரிய
திருச்செம்பொன் பள்ளியெனுஞ் சீரூரில் வாழ்வோய்
திருச்செம்பொன் வாழ்வையருள் செய் (420)

## திருதனிப்பள்ளி புஞ்சை

நாகா பரணு நளின மலர்ப்பாதா
பாகார்ந்த சொல்லுமையாள் பாகனே—வாகான
நல்வந் தனையே னனிப்பள்ளி யூர்க்கரசே
செல்வந் தனையுறவே செய் (421)

## திருவலம்புரம்

செட்டுக்கு விற்பனைசெய் சிமாட்டி வந்திதரும்
பிட்டுக்கு மண்சுமந்த பித்தனே—மட்டூர்
திருவலம்பு ரத்திலமர் தேவாதி தேவா
மருவலம்பெ றக்கிருபை வை (422)

## திருத்தலைச்சங்காடு

வந்தனத்தைச் செய்து வழிபடும்யாழ்ப் பாணனுக்கா
விந்தனத்தை விற்றருள்செய் யேந்தலே—வந்து
திருத்தலைச்சங் காட்டுத் திருநகரில் வாழ்வோய்
கருத்தலைபு ருமலெனைக் கா 423)

## திருப்பறியலூர் வீரட்டானம்.

அரும்விளையாட் டாக வறுபத்து நாலு
திருவிளையாட் டாடுஞ் சிவனே—பெருவாழ்வை
யுற்ற் திருப்பறிய லூரிலுறை யுந்தேவா
நற்றயவா லென்னையரு ளண்கு (424)

## திருவாக்கூர்.

நேமனென வோங்குதவம் நீள்வணிக னுக்காக
மாமனென வந்து வழக்குரைத்த—சேமனே
யாக்கூரில் மேவிவள ரத்தனே மிக்கவருள்
வாக்கூற வேயருள்செய் வா (425)

## திருக்கடவூர் வீரட்டானம்.

கந்தரந்தோ யாரூரின் கண்பரவை நாச்சியின்பாற்
சுந்தரந்தோய் சுந்தரர்க்குத் தூதுசென்ற—சுந்தரனே
நந்தார் திருக்கடையூர் நாதா செழுங்கடலே
சிந்தாத செல்வமருள் செய் (426)

## திருக்கடவூர் மயானம்.

சொல்லாளர் போற்றுமெழிற் றூய திருவருணை
வல்லாள கண்டனுக்கு மைந்தனரு—ளல்லானே
வந்து கடவூர் மயானத் துறைபரனே
சந்துகமழ் செல்வமிகத் தா (427)

## திருவேட்டக்குடி.

மைகாட்டுங் கூடல் வழுதியின்பால் வேடனுக்காய்
மெய்காட்ட வந்தருள்செய் வித்தகனே—செய்காட்டும்
வேட்டக் குடியமரும் வேணியா வென்றனையுஞ்
சேட்டக் குடியாகச் செய். (428)

## திருத் தருமபுரம்.

பொருணூ வலவர்சூழ் பூசுரனே மிக்க
கருணை கரப்பரனே காவே—யருள்சேர்
தருமா புரத்திலமர் தாணுவே செய்ய
திருமா திலகவருள் செய் (429)

## திருத்தெளிச்சேரி கோவிற்பத்து.

சீரைப் பொருந்தித் திகழ்வழுதி கூடலிலே
நாரைக்கு முத்திதந்த நாதனே—காரையுறு
செய்ய திருத்தெளிச் சேரிக் கொருமுதலே
துய்யதிரு வேறச் சொல் (430)

## திருநள்ளாறு.

ஞானந் தனிற்சிறந்த நாதகிரு பாகரனே
வானவர்கள் போற்று மயேசுரனே—கானவன்ற
னெச்சிலிலே யிச்சையுற்ற வீசாநள் ளாற்றரசே
கச்சியிலே வந்தசிவ கா (431)

## திருக் கோட்டார்.

கூடலிலே முன்னங் குலவுமறு பன்னான்கா
மாடல் புரிந்த வரும்பொருளே—நாடுதிருக்
கோட்டா ரெனும்பதிவாழ் கோவே கொடியமிடி
வாட்டாது செல்வமருள் வாய் (432)

## திருஅம்பர் பெருந்திருக்கோயில்.

உய்தவஞ் செய் வாற் குருவிக் கோதி யுபதேசஞ்
செய்தபர மானகுரு தேசிகனே—மெய்திகழும்
பேர்த்திரு வம்பர்ப் பெருந்திருக்கோ விற்கரசே
சீர்த்திருச் செல்மிகச் செய் (433)

## திருஅம்பர் மாகாளம்.

தீபா கொடுமறையோன் சேயருடா யைப்புணர்ந்த
மாபா தகந்தீர்த்த மாதேவா—கோபாலா
வந்து திருவம்பர் மாகாள மாநகரோய்
கொந்துலவு செல்வங் கொடு (434)

## திருமீயச்சூர் பேராளம்.

கடுத்துவந்து சுந்தரரைக் கல்யாணந் தன்னிற்
றடுத்துவந் தாண்ட தயாளா—வடுத்தருள்செய்
தூய திருமீயச் சுரப்பொருளே யென்றனக்
காயதிருச் செல்வ மருள் (435)

## திருமீய்ச் சூரிளங்கோயில்.

பொன்மிதக்கப் பாடும் புலவரா மப்பருக்காக்
கன்மிதக்கச் செய்த கருணாகரனே—சொன்மிகுத்த
சுந்தரஞ்சே ருந்திருமீய்ச் சூரிளங்கோ விற்கரசே
மந்தரம்போ னன்னிதிதா வா (436)

## திருத்தி லதைப்பதி.

அட்டியில்லா மற்றமிழுக் காகவே முன்றங்கக்
கட்டிதனைத் தந்தகரு ணாகரனே—மட்டார்
திருத்திலதை யம்பதிவாழ் தேவா வுனது
கருத்திலதை வைத்தெனையுங் கா (437)

## திருப்பாம் புத்து.

பாரமணி கூடலிலே பாண்டியற்கு விற்கவந்த
காரணனே ஞானகரு ணாகரனே—தாரணியிற்
றுய்யமதி சூடி துலங்குதிருப்பாம்புத்தூர்ச்
செய்யனே யெற்கருணீ செய் (438)

## திருச் சிறுகுடி.

நல்லோ ரகமடங்கு நாதனே நிற்றுதியால்
வல்லோ ரகமடங்கு மாறுடையோய்—சொல்லாருங்
†கந்தரமீ தோங்குமுடி காட்டு சிறுகுடிவாழ்
சுந்தரனே வந்தொன்று சொல் (439)

## திருவீழி மிழலை.

மேருவே வில்லாக வேதியனே சாரதியாப்
பாரதுவே தேராப் படைத்தமுதற்—காரணனே
வேதம் பரவுதிரு வீழிமிழ லைக்கதிபா
நீதம் பரவவரு ணீ (440)

## திருவன்னியூர்.

பூசிதனே வேதப் புனிதனே மெய்ஞ்ஞான
தேசிகனே கிர்பைச் செழுங்கடலே—நேசமுடன்
வெள்ளைவிடை யேறி விளங்குமன்னி யூரரசே
§தள்ளை யெனக்கு ன்றனரு டா (441)

## திருக்கருவிலி கொட்டிடை.

பாதந் தனைப்போற்றும் பத்தருக்கு மெய்ஞ்ஞான
போதந் தனைவிளக்கும் பூரணனே—கோதில்
கருவிலியூர் தன்னிலமர் கத்தனே யெற்குத்
தருவிலினி தானநிதி தர (442)

## திருப்பேணுப் பெருந்துறை.

போதனயன் மாலறியாப் புண்ணியனே யன்பர்சூழ்
$ வேதனைய ளுகவந்த வித்தகனே—நாதனைச்
சென்று பெருந்துறைவாழ் சிற்பரனை யுள்ளுவாய்
யென்று மறவாம லே (443)

## திருச்சித்தீச்சுரம் நரையூர்.

தாலகண்ட மொன்பதிலுந் தானிருந்தங் கங்கருள்செய்
நீலகண்ட தற்பரநி ராமயமே—சீலமிகு
சித்தே சுரநகர்வாழ் தேவாமெய்ம் முத்திக்கோர்
வித்தே சுரர்கடரு வே (444)

## திருச்சிவ புரம்.

கையமருஞ் சூல கபாலத்தாய் காசினியி
லையனே யண்ணலே யற்புதனே—துய்யனே
மிக்க சிவபுரம்வாழ் வித்தகா மேலாகத்
தக்கநிதி யென்றனக்குத் தா (445)

## திருக்கலைய நல்லூர்.

வில்லைநிகர் நன்னுதலாள் வீரமா காளியுடன்
றில்லைதனி லேநடஞ்செய் சின்மயனே—வல்லை
திருக்கலைய நல்லூர்வாழ் தேவாதி தேவா
செருக்கதிக செல்வமருள் செய் (446)

## திருக்கருக் குடிவலங்கிமான்.

இருளைக் கடிந்தநிறத் தேனம் பயந்த
குருளைக்குப் பால்கொடுத்தாட் கொண்ட வருட்கடலே
செல்வக் கருக்குடியாஞ் சீர்நகரில் வாழ்முதலே
கல்விக் கருளுதவிக் கா (447)

## திருவாஞ் சியம்.

பூமிக்கா யுள்மகிழப் போந்தோ ரெழுகடலை
மாமிக்கா யன்றழைத்த வள்ளலே—காமிக்க
மானதிரு வாஞ்சியமெய் மாநகரில் வைகிய
தீன தயாளவருள் செய் (448)

## திருநன்னிலத்துப் பெருங்கோயில்.

பண்டோ தரியயனும் பார்க்கவரி தானவா
குண்டோதரற் கன்னங் கூர்ந்தளித்தாய்—கொண்ட
திருநன் னிலத்திலமர் தேவாவந் தாள்வா
யிருநன் னிலத்திலெனை யே (449)

## திருக்கொண்டீச்சுரம்.

நற்கிளியா மென்னுமொழி நாட்டு தருமிக்குப்
பொற்கிழிதந் தாண்ட புனிதனே—சொற்கநிகர்
கொண்டீச் சுரத்திலமர் கோவே யெனையாள்கற்
றண்டீச் சுரசேகரா தா (450)

## திரு அரசிற் கரைபுத்தூர்.

கோவுந்து ஞானக் குரிசிலே தொண்டரல்லல்
யாவுந் தொலைத்த வருட்கடலே—மேவு
மரசிற் கரைபுத்தூ ரண்ணலே நின்றாள்
பரசிற் கரையேறப் பண் (451)

## திருப் பனையூர்.

விண்டார்ந் திலகுதிரு மேருவெனும் பொன்மலையைச்
செண்டா லடித்த செழுஞ்சுடரோ—பண்டு
திருப்பனையூர் வாழ்பரம தேவா வெனையாள்
விருப்பனைத்துந் தந்துதின மே (452)

## திருவிற்குடி வீரட்டானம்.

மடறிகழுங் கூடல் வழுதியாய் வேலைக்
கடல்சுவற விட்ட கருணைத்—திடனார்
திருவிற் குடியென்னுஞ் சீர்நகரா யென்னைத்
திருவிற் குடியிருக்கச் செய் (453)

## திருப் புகலூர்.

விளையலுறு செய்சூழ மெய்க்கூட றன்னில்
வளையல்விற்க வந்த வரதா—களையகற்று
மாதங்க மானதிரு வாழ்வே புகலூராய்
மாதங்க வாழ்வருளு வாய் (454)

## திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்.

விண்டுதொட வோங்கி விளங்குமுடிக் கூடலிலே
வண்டுதொடப் போனதிரு வள்ளலே—தொண்டரே
வாழுந் திருப்புகலூர் வர்த்தமா னீச்சுரனே
சூழுங் கலியைத் துரத்து (455)

## திருவிராமன தீச்சுரம்.

எப்புரத்தை யும்வென் றிலகுமசு ராதிபர்வாழ்
முப்புரத்தை வென்ற முதல்வனே—செப்புரத்தா
ரோத்து மிராமன தீச்சுரத்தில் வாழ்பரனே
சாத்துகவி மாலைகொண் டீதான் (456)

## திருப்பயிற்றூர்.

தேடு மிருகவதை செய்வச் சிராங்கதற்கு
வீடு கொடுத்தருளும் வித்தகனே—நீடுபர
வாசா திருப்பயிற்றூர் மாதலத்தில்வாழு
மீசா வெனையாள்வந் தே (457)

## திருச்செங் காட்டங்குடி.

வேண்டி யருஞ்சமணர் விட்டமத யானைசெற்றுப்
பாண்டியனைக் காத்த பரஞ்சுடரே—நீண்டுலகி
லன்று திருச்செங்காட் டங்குடியா யென்றனுளங்
கன்றுதலில் லாதுவந்து கா (458)

## திருமருகல்.

வன்ன விடையானே வாணர்க் கினியானே
கன்னற் சிலையானைக் காய்ந்தவனே—யிந்நிலத்திற்
சேமம் பெருகுந் திருமருகற் சீருராய்
நேமம் பெருகவருணீ (459)

## திருநாகை காரோணம்.

வருமுகத் தைக்கண்டு வண்டமிழ்க்கு முன்னந்
திருமுகத்தைத் தந்தசெக நாதா—தருவுலவி
யோங்குதிரு நாகைக்கா ரோணமதில் வாழ்முதலே
யீங்குதிருச் செல்வமரு ளே (460)

## திருச்சாத்த மங்கை.

காமனுக்குத் தொண்டனருள் கான்முளைக்குப் பாசவலை
யேமனுக்கு மேமெனன வெய்தியவா—நேமத்
திருச்சாத்த மங்கைவளர் தேவாநின் செய்ய
வுருச்சாற்ற வந்தா ளுகந்து (461)

## திருச்சிக்கல்.

சீராய் வரங்குலவுஞ் சின்மயசி காமணியே
காராரு ஞானக் கடலமுதே—பேரான
சிக்கன கரத்திலமர் தேவா பராபரனே
தக்கதிருச் செல்வமரு தா (462)

## திருக்கீழ் வேளூர்.

வெள்ளை விடையானே விந்தையுற வேயுகந்து
பிள்ளையெனை யாளும் பெருமானே—விள்ளவரும்
வில்வ மிருந்திருக்கீழ் வேளூர்க் கிறையவனே
செல்வமிகுந் தேறவருள் செய் (463)

## திருத்தேவூர்.

சொற்கிடில் லாததமிழ்த் தூய விலக்கணத்தை
நற்கீ ரருக்குரைத்த நக்கனே—நெற்கதிர்
வானங் குலவி வளருந்தே வூரரசே
ஞானங்குலவவருள் நல்கு. (464)

## திருப்புள்ளியின் முக்கூடல்.

எழுகடல்வந் தும்மூழ்கா தேங்குமா மிக்கா
வழுதி தனையழைத்த வாழ்வே—முழுமறையோர்
போற்று திருவரியான் புள்ளிமுக் கூடலெந்தாய்
சாற்று திருச் செல்வந் தா. (465

## திருவாரூர்.

தேசுமிகு பார்த்தனன்று செய்தவத்துக் காவுகந்து
பாசுபதந் தந்தாண்ட பண்ணவனே—பூசிதைசே
ரெந்தை திருவாரூ ரேந்தலே வந்தெனக்குச்
சிந்தை மகிழவருள் செய். (466)

## திருவாரூர் ஆலாநெறி.

ஓரானை தன்னை யுரித்துடுத்துந் தற்பரனே
பேரானை மாமுகனைப் பெற்றவனே—சீரான
வம்பர் திருவாரூ ராலா நெறிக்கரசே
தம்பமெனை யாண்டருளீ தா (467)

## திருவாரூர் பரவையுண்மண்டளி.

ஆதியே சோதியே யந்தரனே சுந்தரனே
பூதியே மெய்யணிந்த புங்கவனே—நீதிதிரு
வாரூர்ப் பரவைநா தாகச்சென் றுண்டவனே
சீரூர் வரமெனக்குச் செய் (468)

## திருவிளமர்.

ஆனொருபா கத்திலகு மங்கையினிற் றங்கமுழு
மானொருபா கத்திலகும் வள்ளலே—வானூர்
திருவிள மாநகர்வாழ் தேவனே யின்னங்
கருவிலடை யாதெனையே கா. (469)

## திருக்கா வீரம்.

கூறுதெய்வம் யாவுங் குறிக்கி லெனையாள
வேறுதெய்வ முண்டோ விசுவேசா—மாறில்லா
மெய்யா சுகத்திருக்கா வீரநகர் தன்னிலமு
ரையா விதுசமய மாம். (470)

## திருப்பெருவேளூர்.

விற்பழித்த நன்னுதலார் மெய்ம்முனிவர் பத்தினிமார்
கற்பழித்த ஞானநுதற் கணண்ணே—பொற்பார்
திருப்பெருவே ளூர்க்கரசே சின்மயனே யெற்குத்
திருப்பெருவாழ் வேறவருள் செய் (471)

## திருத்தலை யாலங்காடு.

சீறுமுகப் பாம்புட்கச் செய்யுஞ் சிகாவளமூ
ராறுமுகத் தானையரு ளத்தனே—கூறுமெனை
யாண்டவா மிக்கதலை யாலங்காட் டுக்கரசே
தாண்டவா தூயவர தா (472)

## திருக்குடவாயில்.

நாறு மணியறுகு நற்கடுக்கை யுந்தும்பை
நீறு மணிந்தவனே நின்மலனே—மீறுங்
குடவாயின் மேவுங் குருபரனே வெய்ய
மடவார் தருமயலை மாற்று (473)

## திருச்சேறை.

பாறனக்குத் தூயநிறப் பண்ணவனே கைதவன்செங்
கோறனக்கு மாங்கவன்பேர் கொண்டவா—கூறெனக்கே
யுற்றதிருச் சேறையெனவோதுந் தலத்தரசே
கொற்றமிகச் செல்வங் கொடு (474)

## திருநாலூர் மயானம்.

சங்கரனே மெய்யான தற்பரனே பொற்பரனே
பொங்கரவ ணிந்தசிவ போதகனே—யிங்கெனையா
ளுந்தானை யாமகிழ்நா லூர்மயா னத்தரசே
வந்தானை வென்றருடே வா (475)

## திருக்கடுவாய்க் கரைபுத்தூர்.

அஞ்சக் கரத்தானு மாரணனுங் காணாத
வஞ்சக் கரத்தானே யாண்டருள்வாய்—விஞ்சுங்
கடுவாய்க் கரைபுத்தூர்க் கண்ணுதலே வாது
விடுவாய் கரையேற வே (476)

## திருஇரும்பூளை.

நம்பு மடியவர்க்கு நல்லவனே நாவலர் வாழ்த்
தம்பரம தேவாகு மண்ணலே—தம்பந்
திருவிரும்பூ ளைப்பதிவாழ் தேவா-வெனது
கருவிரும்பு நெஞ்சங் கரை (477)

## திருஅரதைப் பெரும்பாழி.

நாகமத னிற்பிறந்த நங்கையுமை வீற்றிருக்க
வாகமதிற் பாதிதரு மண்ணலே—யோகரன்பிற்
பேசுதிரு வாகைப் பெரும்பாழி யம்பதிச்சி
வாசுகம தாகவருள் வா (478)

## திருஅவளிவணல்லூர்

அவசியம தாவரந்தா வண்ணலே யென்றுந்
தவசிகளும் போற்றுந் தயாளா—நவமா
மவளிவணல் லூரா யணிந்தேன்பா மாலை
துவளிதழி மாலைபுனை தோட்கு (479)

## திருப்பருதிநியமம்

ஐயனே யுன்னையன்றி யார்தா னெனையாள்வார்
மெய்யனே நீயாள வேண்டுமே—செய்ய
பருதி நியமப் பதிவாழும் வேதச்
சுருதிமுத லேயினிவந் து (480)

## திருவெண்ணியூர்

தங்கோல மாற்றித் தனிப்பாண் டியன்போலாய்ச்
செங்கோல் செலுத்துஞ் செழுஞ்சுடரே—யிங்கோர்
திருவெண்ணி யூர்க்கரசே சிற்பரனே யென்றுந்
தருவெண்ணீ றேங்குசுகந் தா (481)

## திருப்பூவனூர்

வேடனெச்சி லைப்புசித்த வேணியனே யானுமுன்றன்
சீடனெச்சி வாலயமுஞ் சென்றறியா—மூடனெனைப்
பார்திருப் பூவனூர்ப் பண்ணவனே யென்னுளத்தை
நேர்திருப்பு வையமிசை நீ (482)

## திருப்பாதாளேச்சுரம்

செங்கையிட மானேந்தி செய்யவரை வேந்துதவு
மங்கையிடப் பாகம்வைத்த வள்ளலே—துங்க
திருப்பாதா ளீச்சுரம்வாழ் சின்மயா னந்தா
திருப்பாதந் தந்தருணீ செய் (483)

## திருக்களர்

சாயகத்தைக் கொண்டெதிர்த்த தையலைத் தண்கூட
னாயகத்தைக் கைப்பிடித்த நாயகனே—பேயனையாள்
பூவிலடி யார்க்குப் பொருளா யிருந்தகளர்
மாவிலடி யானதே வன் (484)

## திருச்சிற்றேமம்

நாகச் சிகாமணியே நல்லவர மேகொடுக்க
வாகச் சிகாமணிவ ரோதயனே—யோகத்
திருச்சிற்றே மத்திலமர் தேவாவு னுன்னை
யருச்சித்தேத் தற்கே யருள் (485)

## திருவுசாத்தானம்

சத்தியுட னின்கமலத் தாளிணையி லன்புவைத்துப்
புத்தியுடன் போற்றுத புல்லனையாள்—சித்தித்
திருவுசாத் தானத் திருப்பதிக்கோர் வாழ்வே
மருவுசாத் தென்பா மலர் (486)

## திருஇடும்பாவனம்

எத்திசையும் போற்று மிறைவா நினதுபெருஞ்
சித்திசைய வேகருணை செய்குவாய்—முத்தர்கள்
பன்னுந் திருவிடும் பாவனம்வா ழீச்சுரனே
யென்னுஞ் சிவக்கடவு ளே (487)

## திருக்கடிகுளம்

கந்திரிலோ கம்புகழுங் கான்பன்றிக் குட்டிகளை
மந்திரிக ளாக்கிவைத்த மானவனே—தந்திரஞ்சேர்
செய்ய கடிகுளமாஞ் சீர்நகரா நல்வரந்தா
வெய்ய வினையகல வே (488)

## திருத்தண்டலை நீணெறி

சங்கரியைப் பாகம்வைத்த சங்கரச தாசிவமே
யிங்கரிபூ சித்த விறையவனே—பொங்கரிய
நீதிதிருத் தண்டலை நீணெறியில் வாழ்ந்துலவு
சோதியெனை யாண்டருள்வந் து (489)

## திருக் கொட்டூர்

பாவலனற் கீரனுக்குப் பண்டிலக்க ணம்பகர்ந்த
மாவலனே யாதி மறைமுதலே—காவலஞ்சூழ்
கோட்டூரில் வாழுங் குருவே மெய்ஞ் ஞானநெறி
நாட்டு ரடியார்க்கு நல்கு (490!

## திருவெண்டுறை.

$விண்டுமெகிழ் வாகமுன மெய்த்தவத்தாற் பெற்றெடுத்த
செண்டுமுலை மாதுமையாள் சேகரனே—தண்டமிழை
மெய்க்குகந் தயாபரனே வெண்டுறைவா ழும்முதலே
மைக்குலவு கண்டனே வா (491)

## திருக்கொள்ளம் புதூர்.

துங்கப் பலவளஞ்சேர் தொன்மதுரைப் பாண்டியற்கு
சங்கைப் பலகைதந்த தற்பரனே—யிங்கரிய
வானவர்கள்போற்ற வளர்திருக்கொள் ளம்புத்தூர்
தானவனே யெற்குநிதி தா (492)

$ விண்டு—மலை

## திருப்பேரியில்.

பித்தனே ஞானப் பெருங்கருணை யாதிபனே
யத்தனே யென்னையரு ளைய்யனே—நித்தந்
திருப்பேரை யூரமர்ந்த தேவாவென் றுன்பம்
பொருப்பேற வேயனுப்பு (493)

## திருக்கொள்ளிக் காடு.

வள்ளைக் குழையாள் வரதாசெங் காட்டுநங்கை
பிள்ளைக் கறியைமகிழ் பெம்மானே—தள்ளையென்
கோதகற்றி யோங்குதிருக் கொள்ளிக்காட் டுக்கரசே
பாதபத்மந் தந்தருட்கண் பார் (494)

## திருத்தெங்கூர்.

ஆனை யுரித்தவனே யப்புரமெ ரித்தவனே
மானைத் தரித்தவனே வந்தருள்செய் கானகத்தி
லாடும் பராபரனே யாந்திருத் தெங்கூரி
லூடுந் தயாநிதியே நல்கு (495)

## திருநெல்லிக்கா.

வளமேவுங் கூடல் வரிவிழிமீ னாட்சி
களமேவு மங்கலநாண் கட்டி—புளமகிழ்ந்த
கர்த்தா திருநெல்லிக் காவுக்கரசான
நிர்த்தாவந் தென்னையா ணீ (496)

## திருநாட்டியத் தான்குடி.

கோலமதி சூடிமகிழ் கொண்டலே தெண்டிரைசூழ்
ஞாலமரு ளம்பிகையா ணயகனே—சீலமிகு
நல்லதவ மேவுதிரு நாட்டியத் தான்குடிவாழ்
வல்லவனே யென்னையருள் வா (497)

## திருக்காராயில்.

$மாம னுளமகிழு மைத்துனனு மென்னவந்த
†விம னுளத்துறைநீர் வேணியனே—பூமழுவா
ரீசா திருக்காரா வென்னுநக ரத்திலமர்
நேசா கனகந்தா நீ (498)

$மாமா-விஷ்ணு †விமன்-பிரமன்

## திருக்கன்ருப்பூர்.

வலைவீசி மீன்பிடித்து மாவலைச்சி யோடுச்
சிலைமேற் குடிகொண்ட தேவா—நலையாக
மானே திகழ்க்கரத்து வள்ளலே கன்ருப்பூ
ரானே பரனே யருள் (499)

## திருவலிவலம்.

விஞ்சுதிரு மாலயனு மேவுங்கா லாங்கவர்க்குஞ்
செஞ்சுடராய் நின்று திகழ்பரனே—மிஞ்சு
வலிவலத்தைக் கண்டுகந்து வந்தமர்ந்த தேவா
கலிவலத்தைத் தீர்த்தெனையுங் கா (500)

## திருக்கைச்சினம்.

கச்சிலக வோங்குமுலைக் காமாட்சி யம்மனது
கச்சியக மாகவளர் கத்தனே—மெச்சித்
திருக்கச் சினத்தலம்வாழ் தேவாநீ யெற்குச்
செருக்கச் சினமகலச் செய் (501)

## திருக்கோளிலி.

கொட்டாருங் கூடையொடு கூடற் பதியினில்வந்
தெட்டாத வாறடைத்த வெங்கோவே—மட்டார்
திருக்கோ ளிலிப்பதிவாழ் தேவா கொடிய
கருக்கோ ளிலாதென்னைக் கா (502)

## திருவாய்மூர்.

ஆதியே ஞானத் தரும்பொருளே யாரமுதே
நீதியே யெங்கு நிராமயமே—சோதியே
நஞ்சு மிடற்றனே நற்றிருவாய் மூர்க்கரசே
யஞ்சுமுகத் தானே யருள் (503)

## திருமறைக்காடு வேதாரணியம்.

மெய்யனே வேதமுடி மீதுநட னம்புரியு
மையனே செய்யசடை யாதிபனே—துய்ய
$ வறையே திருமறைக்கா டாயிருந்த வேணி
யிறையே யெனையாள்வா யே (504)

---

$ அறை-ஆப்பனூரில். (ஆப்புவடிவாயிருந்தவனே)

## திரு அகத்தியான்பள்ளி.

மறைவற் றிலகுதிரு வைகையிலே யாட
லறுபத்து நாலுபுரி யத்தா—நறுஞ்சீர்
திருவகத்தி யான்பள்ளித் தேவா வினிமேற்
கருவகற்றி யென்றனையே கா (505)

## திருக்கோடி குளகர்.

சீல மதிபுலவுஞ் செஞ்சடையா யாங்குதிரை
யாலவிட மேபுசித்த வண்ணலே—தாலத்
திருக்கோடி மாநகர்வாழ் தேவனே யென்னுட்
டிருக்கோடிப் போகவருள் செய் (506)

## திருத்தக்களூர்.

அக்க னெருக்குமுத லாரணத்துக் குட்பொருளே
நக்கனே ஞான நடேசனே—மிக்க
திருத்தக்க ளூரிலமர் தேவர்சூழ் தேவா
தருத்க்க வாழ்வருணீ தா (507)

## திருநெடுங்காடு நிறைக்காடு.

சராசரங்க ளத்தனையுந் தானாகி நின்ற
பராபரமே சத்தியோர் பாகா—வராதி
நிறைக்கா டெனும்பதிவாழ் நின்மலனே யாதி
மறைக்காவ லானதே வா (508)

## திரு எட்டிக்குடி.

பன்னாகம் பூணும் பரனே பரவெளியே
பொன்னாக மேலிருந்த புண்ணியனே—மின்னாளி
லெட்டிக் குடியிலம ரீசனே யெந்தையே
யீட்டில்லாச் செல்வமருள் வா (509)

## திருத் தஞ்சைநகர்.

காரியிடத் தேயுழலுங் கட்டமெலாந் தீர்த்தருள்செய்
நாரியிடப் பாகமுறை நாயகனே—வாரியிடத்
தானவிடங் கொண்ட தயாபரனே தஞ்சையிலே
யானவிடங் கொண்ட வரா (510)

## திருப் பழயாறை.

அண்டர்சூழ் நாதா வரவப் பணிநீதா
பண்டயன்மா றேடும்பரவெளியே—மண்டலத்திற்
செய்யார் பழையாறைத் தேவனே யென்கலிபை
வையா தகற்றியருள் வாய் (511)

## திருத்திரி புவனம்.

மாசகத்தி லில்லறமே வாய்ந்ததென வவ்வைசொன்ன
வாசகத்தைக் கேட்டவ் வழிநின்றேன்—ரூசனையா
னாக்குந் திரிபுவனத் தத்தனே யென்னையென்றுங்
காக்குங் கடனுனக்கே காண் (512)

## திருக்காட்டு மன்னார்குடி.

செந்நெல் கதலி செழும்பூக மஞ்சளிஞ்சி
கன்னலு மோங்குங் கழனிகள்சூழ்—தென்னார்நற்
காட்டுமன் னார்குடிவாழ் சத்தனையே புன்னியுரு
நாட்டுமவர்க் குண்டோ நவை (513)

## திருவண்டாய்பாலை காட்டூர்.

காமனையு முப்புரத்தின் கண்ணரக்கர் வாழ்ந்திடுநன்
மாமனையுஞ் சுட்டெரித்த வள்ளலே—சேமதிருக்
காட்டூர்வாழ் தற்பரனே கங்கா தரப்பொருளே
தேட்டூர வாழ்வருளிச் செய் (514)

## திருமிளையான்குடி சோழம்பாடி.

நரியைப் பரியாக்கி நானிலத்தோர் காணப்
பரியை நரியாக்கும் பண்போ—புரிமையோர்
பன்னு திருச்சோளம் பாடிநக ருக்கரசே
மன்னுதிருச் செல்வமருள் வாய் (515)

## திருச்சந்திர சேகரபுரம்.

வாடியடி யென்மடவார் மையலுக் குள்ளாகித்
தேடியலை யாமலருள் செய்தாள்வாய்—நீடியமுன்
னையசந்த்ர சேகரபு ராதிபவ ரோதயனே
தூயசந்த்ர சேகரசு கா (516)

## திருக்கணமங்கலம்.

சேய்மாமன் கூடலிலே சென்றோர் வணிகனுச்குத்
தாய்மாமன் போல்வழக்கைத் தான்தீர்த்தோய்—தூய
கணமங் கலநகர்வாழ் கத்தனே யென்பால்
மணமங் கலமாக வா (517)

## திருச்சூராணர்கோயில் தலையூர்.

தஞ்ச மிதுவே சமய முனைப்பணிந்தேன்
வஞ்சமிடி யானைந்து வாடாது—செஞ்சொன்மிக
நன்று திருச்சூர ணர்கோவிற் கோரரசே
யின்று திருச் செல்வமரு ளே (518)

## திருச்சூர மங்கலம்.

எத்தனையோ குற்ற மிருக்கு மிருந்தாலு
மத்தனை யும்பொறுத்தா ளத்தனே—நித்தநித்தம்
போதினிற்செய் யாண்மருவும் பொற்சூர மங்கலத்தோய்
வாதினிச்செய் யாதென்பால் வா (519)

## திருச்சோழம் பேட்டை.

உன்னைநம்பி யேத்து முரிய வுரவோர்க
டன்னைநம்பி யென்றுபெயர் சாற்றவைப்பாய்—யென்னையரு
டப்பா ரிதழுமைசேர் சோழம்பேட் டைக்கரசே
தப்பா திதுசமயந் தான் (520)

## திருநாகை நாகேசுரம்.

அன்பி லுனைமறவா தாண்டருள்வாய் போற்றிசெய்வேன்
முன்பினீ வந்து முகம்பார்ப்பாய்—நம்பினே
னுகைநா கேசுரம்வாழ் நாதனே யெற்கருள்செய்
வாகைநா கேசுரதே வா (521)

## திருக்கோவிலடிப் பாளையம்.

பாண்டுமகற் காவிரங்கிப் பாசுபத மானதனை
யாண்டுமகிழ் வாயளித்த வண்ணலே—நீண்டிலகு
கோவிலடிப் பாளையம்வாழ் சோவே திறல்விசையன்
மாவிலடி கொண்டவிறை வா (522)

## திருப்பத்திரேசுரம் வரிஞ்சையூர்.

ஓது புவிமீதி லொன்றுமிலா வுத்தமனே
மாதுமைய நீர்ந்து மகிழ்வெய்த—வேதுலங்கும்
பத்திரேசு ரத்திலமர் பண்ணவனே நின்றனது
சித்திரப்பூங் கொன்றையருள் செய் (523)

## திருச்சித்தீச் சுரம்.

தேசம் புகழவென்றுஞ் சித்தரெலாஞ் சித்தமொடு
வாசம்பு வென்றுதுதி வள்ளலே—நேசமிகு
சித்தனே மிக்கதிருச் சித்தீச் சுரத்தமரு
மத்தனே யென்னை யருள் (524)

## திருவெங் குருதி.

தக்கமழு வற்புதனே தந்துலவும் பொற்புயனே
யக்கமதி யைப்புனைந்த வண்ணலே—மிக்கதிரு
வெங்குருதி யென்னுநகர் மேவியவா வெற்குனருள்
சங்குலவு செங்குழையாய் தா (525)

## திருக்கண்ணார் கோயில்.

இமையவரை யீன்ற விறைவசிவ காமிக்
கமையுமண வாளனு மையா—சமயந்
திருக்கண்ணார் கோவிலமர் சிம்மயனே கோளர்
திருக்கண்ணு தெறகருணை செய் (526)

## திருக்கடை முடி.

தப்புரத்தைக் கொண்டடித்த தானவர் குழாஞ்சாவ
முப்புரத்தைச் சென்றெரித்த முக்கணனே—யிப்பார்ச்
† சுதிருக் கடைமுடிவாழ் தோன்றலே பாவ
மதிரும் படியோட்டி யாள் (527)

## திருவாஞ்சியம்.

காணற் கரியானைக் கண்டங் கரியானைப்
பாணற் கரியானைப் பாடுநெஞ்சே—பூணுமலர்
மட்டான தோங்குதிரு வாஞ்சியத்தில் வாழுமவன்
றட்டாமற் செல்வர் தரும் (528)

† சு-நல்ல.

## திருக்கைச்சினம்.

மங்கையொரு பங்கின் மகிழ மகிழ்வாக
சங்கைக் குழையாக்கோ டற்பரனே—செங்கமலச்
சீதேவி யின்னருளைச் சேர்திருக்கைச் சின்னமுறு
மாதே வினிதருளு வாய் (529)

## திருச்சந்தலை.

மந்தரனே ரானபுப வள்ளலே மெய்ஞ்ஞான
சுந்தரனே யாதிச்சுருதியே—யந்தரியாள்
பாகதிருச் சந்தலையூர்ப் பண்ணவனே யென்றனக்குத்
தாகதிருச் செல்வமினித் தா (530)

## திருப்புதுவை.

சீறாக மன்மதனைத் தீயர் திரிபுரத்தை
நீறாக வேயெரித்த நின்மலனே—வீறார்
புதுவை நகர்க்கரசே பூமாவோர் பாதி
விதுவை யணிந்தசிவ மே (531)

## திருச்சொளிங்கவரம்.

சேலகவி லாசவிழித் தேன்மொழியாண் மாதுமைசேர்
சீலகயி லாசசெக தீசனே—ஞாலமுறு
சோளிங் கவரநகர்ச் சுந்தரனே யென்றனக்குக்
கோளிங் கறவருளே கூர் (532)

## திருவீராம் பட்டணம்

வெள்ளை விடையேறி மேதினியெ லாந்துலங்கும்
பிள்ளைமதி சூடியருள் பெம்மானே—தெள்ளுதமிழ்
மெய்யான தோங்குதிரு வீராம பட்டணம்வா
ழையாநீ யென்னையுகந் தாள் (533)

## திருவில்வ வனநல்லூர்.

சத்துருவ தாகவந்த சண்டனைமுன் சங்கரித்து
மித்துருமாக் கண்டனையாள் வேணியனே—சித்துலவு
வானூரும்வில்வ வனநல் லூருர்க்கரசே
தானுதி பாவருணீ தா (534

## திருப்புலவயல்.

பொன்னவனே நன்னேசப் பூரணனே கூடலையா
டென்னவனே மெய்ஞ்ஞானத் தெள்ளமுதே—யிந்நிலத்திற்
புல்வயனற் றானம்வாழ் பொற்பரனே நற்றமிழைச்
சொல்வளந்தந் தாண்டருள்வந் து (535)

## திருக்கொல்லிமலை அறப்பளீசுரம்-சதுரகிரி.

அண்டபகி ரண்ட மடங்கலைபு மேவிளக்குந்
துண்டமதி சூடியருள் சுந்தரனே—விண்டுலவி
யந்தமிகுங் கொல்லிமலை யாமரப்ப ளீச்சுரமே
வந்தமர்ந்த தேவதே வா (536)

## திருத்தெங்களூர்.

அன்றனையா தேத்திவா முன்பரைமுன் றாண்டதுபோ
லின்றனையே நம்பு மெளியனையா —டின்று
திருத்தெங்க ளூர்க்கரசே தேவாநின்பா லன்றிக்
கருத்தெங்கும் போகாது கா (537)

## திருத்திங்களூர்.

செந்நென் மணி கன்னலெனச் சேணுலவ மேலோங்குங்
கன்னல்கமு கென்னவளங் காட்டுபணே—புன்னலஞ்சேர்
செல்வ மிகுந்ததிருத் திங்களூ ராதிபனே
சொல்வளந்தந் தாண்டருள்வந் து (538)

## திருநங்களூர்.

சூலமார் செங்கைச் சுரநமனைக் கொன்றாளக்கிப்
பாலமார்க் கண்டனையாள் பண்ணவனே—சீலதிரு
நங்களூர் வாழுமெங்க ணாதா வடியேற்குத்
திங்களூர் வேணியருள் செய் (539)

## திருப்பாசனூர்.

எந்தவினை நீக்கியரு ளின்பசுக மும்பெருகச்
சந்ததமு மிக்கவரந் தந்தாள்வா—யந்தத்
திருப்பாச னூரென்னுஞ் சீர்நகரில்—வந்தே
யிருப்பான தேவரீ யே (540)

## திருநாசனூர்.

மாசை யகற்றுமதி வல்லசெய சுந்தரர்க்கு
வேசைபாற் றூதுசென்ற வித்தகனே—காசுதீர்
நாசனூர் தன்னிலமர் நாயகனே யென்றனக்கு
மாசணுகா வாறருளு வாய் (541)

## திருயீசனூர்.

கையா றிரண்டுடைய கான்முளையைத் தந்தவெழி
லய்யாநல் வேதத் தரும்பொருளே—செய்பரவு
மீசனூர் மேவு மிறைவா செழுங்கடலே
தாசனீ டேறவரந் தா (542)

## திருத்தேசனூர்.

சீலனெனும் வல்லாள சீமான் கதியடையப்
பாலனென வந்த பரஞ்சுடரே—மாலறவே
திங்கடவழ் மாடத் திருத்தேச னூரிலமர்
மங்களகு ணாகரனே வா (543)

## திருக்கூரனூர்

மாதவத்த னான வணிகன் மருகனுக்கா
மாதுலனாய் வந்தாண்ட வாறதுபோற்—பேதையேற்
செற்குலவு சோலை யெழிற்கூர னூரரசே
சற்குருவாய் வந்தருணீ தா (544)

## திருயேரனூர்.

வேலனையு மைந்துகர வேழமுக னோடுக்ர
பாலனையுந் தந்த பரஞ்சுடரே—சீலத்
திருவேர னூரரசே சிந்தை மகிழ்வாற்
றிருவேறச் செல்வமருள் செய் (545)

## திருத்தேரனூர்.

பாம்பா பரணமணி பண்ணவனே யன்பர்சூழ்
சாம்ப சிவனான தற்பரனே—தேம்பாய்
திருத்தேர னூர்க்கரசே செல்வமதை யெற்குப்
பெருத்தேற வைத்தருளன் பே (546)

## திருப்பேரனூர்.

மாற்றலரை வென்று மகிழ்வா யெனக்குநிதி
யேற்றமுறத் தந்தருள்வா யெப்போதும்—போற்றுதிருப்
பேரனூர் வாழ்ந்தருளும் பெம்மானே பொற்புலவுந்
தேரனூர் வாழுஞ் சிவா (547)

## திருக்காட்டூர்.

சங்கரா கங்கா தரனே தயாபரனே
யங்கரா கம்புனைந்த வத்தனே—யெங்கடிருக்
காட்டூரில் வாழுமுக் கண்ணா கடையேற்குத்
தேட்டுற வேயருணீ செய் (548)

## திருமாட்டூர்.

ஆரரவு தும்பைமதி யானையுரி யென்புகமழ்
நீரறுகு கொன்றையணி நின்மலனே—வீரதிரு
மாட்டூ ரரசே வரோதயகிர் பாகரனே
$ கோட்டூர வோடவருள் கூற் (549)

## திருப்பூழியூர்.

பொடியாக மான புனிதா மதனைப்
பொடியாகச் செய்திடுங்கண் போதா—வடியேனை
யாடிருப் பூழியூ ரத்தனே யென்பானின்
தாடிருத் தங்க நீதா (550)

## திருஆழியூர்.

அட்டதிசை யும்போற் றடியார்க் கிடர்புரியுந்
துட்டரைச் சங்கரிக்குஞ் சுந்தரனே—யிட்டத்
திருவாழி யூரரசே சீதளவு தாரத்
தருவாழி யேவரந் தா (551)

## திருவேலனூர்.

கோலனே ஞானக் கொழுந்தே மறைபரவு
சீலனே வேதச் செழும்பொருளே—ஞாலத்
திருவேல னூர்க்கரசே தேசிகனே மிக்க
கருவேலந் தந்தெனையே கா (552)

---

$ கோள் குற்றம்.

## திருமூலனூர்.

கண்டமத னிற்கரிய கண்ணுதலை மேலான
தண்டமிழ்வா ணர்க்கருள்செய் தற்பரனே—பண்டு
திருமூல னூரிலமர் தேவாமெய்ஞ் ஞானக்
குருமூல மாயெனையாட் கொள் (553)

## திருநாலனூர்.

விண்டலத்தை யாளுந்தெய் வேந்திரனைப் போலாக
மண்டலத்திற் செல்வமருள் வாநீயே—வண்டலருஞ்
சோலைதிகழ் நாலனூர்த் தூயாநற் செஞ்சடையில்
வாலைமதி யைப்புனைந்தே வா (554)

## திருவெங்கூர்.

வித்தகனே ஞான விரதா வருட்கடலே
சித்தசனை வென்ற தியாகேசா—சத்திதனை
யாகத்தில் வைத்தோ யருள்வெங்கூர்க் கோரரசே
யோகத்தின் மேவவரு ளு (555)

## திருநாங்கூர்.

நஞ்சடையக் கண்டமிசை நண்ணும் படியமைத்த
செஞ்சடையா யாரூர்த் தியாகேசா—தஞ்சமெனப்
பாதார விந்தம் பணிந்தேனன் னாங்கூர்க்கோ
ராதார மானா யருள் (556)

## திருப்பொன்னூர்.

நெற்றி விழியுடைய நின்மலநி ராமயனே
வெற்றியொடு செல்வ மிகவருள்வாய்—நற்றிரைசூழ்
பூமியிடத் தானதிருப் பொன்னூர் நகர்க்கரசே
வாமியிடப் பாகாதே வா (557)

## திருத்தென்னூர்.

வந்ததிக மான வறுமை தனைப்போக்கிச்
சந்ததமு நல்லவரந் தந்தாள்வாய்—சுந்தரஞ்சேர்
செந்நெலடுத் தோங்குதிருந் தென்னூர் நகர்க்கரசே
வன்னவிடை யானேநீ வா (558)

## திருத்தாளையூர்.

ஒட்டாமன் முன்செய்த வூழ்வினைய தானகெடு
பட்டோட நற்கருணை பாலிப்பாய்—தட்டாமற்
சந்திரனுஞ் சூரியனுந் தாவுதிருத் தாளையூர்
வந்திருந்த வாயெனையாள் வாய் (559)

## திருக்கூளையூர்.

கூற்றை யுதைத்தோனே கூடலிலே வந்திக்கா
யாற்றை யடைத்தோனே யாரணனே—போற்றினேன்
வாசனே நற்கூளை மானகரை யாளவந்த
யீசனே யெற்குநிதி யீ (560)

## திருவேளூர்.

வாள்வினைஞ்ஞ ஞானசித்தன் வாழ்வழித்த தைப்போலென்
கோள்வினையைப போக்கிடுத லுன்கொள்கை—கேள்வியுட
னெத்திசையும் போற்றுதிரு வேளூர்வா ழும்பரனே
சித்திசைய வாக்கருளிச் செய் (561)

## திருத்தேவூர்.

என்றுயரந் தானீக்கி யின்பமுறச் செல்வமதை
யின்றுவந்து நீதருவா யென்கோவே—மன்றுபுகழ்
துய்யமதிச் செஞ்சடையா தேவூர் நகர்க்கரசே
செய்யமதி யாதயவு செய் (562)

## திருவிடங்களூர்.

வேதமறி தற்கரிதா மென்கமலப் போதனைய
பாதமறி தற்குனருள் பாலிப்பாய்—நீதமிக
வுற்றிதிருவிடங்க ளூரா சாளவந்த
கற்றவர்கொள் கையாநீ கா (563)

## திருகடங்களூர்.

எந்தையென வந்தா யிருவினையை யும்பொய்க்கிச்
சிந்தைமகிழ் வாகித் தினந்தினமும்—வந்தருள்வாய்
சின்னவிடை யாள்சேர் திருக்கூடங்க ளூர்க்கரசே
வன்னவிடை யானேதே வா (564)

## திருமுந்தையூர்,

சீலமுண்ட கற்கரிய சின்மயா னந்தசிவா
வாலமுண்ட கண்டத் தரும்பொருளே—கோலத்
திருமுந்தை யூரெனுநற் சீர்த்தலத்து வாழ்வே
பொருமுந்தை யூழ்வினையைப் போக்கு (565)

## திருப்பந்தையூர்.

மண்டலத்தி னின்பதத்தை வாழ்த்திப் பணிந்தேத்தித்
தண்டமிழைச் சொல்லவரந் தந்ததுபோற்—றெண்டர்
திருப்பந்தை யூர்க்கரசே தேவனீ யென்னு
விருப்பந் தரச்செ யினிமேல் (566)

## திருமறையனூர்

கருமியெனச் சொல்லாத காதலுறு சைவத்
தருமிக்குப் பொற்கிழியைத் தந்த—தருமா
திருமறைய னூர்க்கரசே தேவா வடியேற்
கரு§மறையா மென்ன வருள் (567)

## திருப்பிறையனூர்

முத்தனே தேவ முதல்வனே யட்டமா
சித்தனே ஞானச் செழுஞ்சுடரே—நித்தா
திருப்பிறைய னூர்க்கரசே தேவாதி தேவா
கருப்பிறையைச் செற்றவனே கா (568)

## திருநிறையனூர்

கரிக்குருவிக் கன்றளித்த கண்ணுதலே யானை
யுரிக்குரிய வள்ளலே யோங்கு—மரியதிரு
நீலகண்ட நாதா நிறையனூ ரற்புதனே
தாலமதி லேற்கரு ணீதா (569)

## திருஇறையனூர்

எத்திசையும் போற்று மிமையமலை யன்றுதவுஞ்
சத்திசிவ காமிமகிழ் சங்கரனே—நித்தியமு
நோக்குந் திருவிறைய னூர்க்கரச தாகவந்து
காக்குங் கருணையனே கா (570)

§ மறை—இரகசியம்

## திருமுதல்வனூர்

ஆதியே வேதத் தரும்பொருளே யாரமுதே
சோதியே நின்மல சொரூபியே—நீதியா
மூவுலகம் போற்று முதல்வனூ ருக்கரசாந்
தேவுலவு செல்வமருள் செய் (571)

## திருநம்பனூர்

ஏங்கினவர்க் கீந்தவர்பா லில்லாத வட்டிசொல்லி
வாங்கினவ னைக்கழுவின் மாட்டுவா—யிங்கிரண்யஞ்
சேட்டமிக வோங்குந் திருநம்ப னூர்க்கரசே
தேட்டமிக வெற்கருள்வந் தே (572)

## திருப்பஞ்ஞலூர்

இன்னன்மிகக் கொண்டேங் கிலகியகுண் டோதரற்கா
வன்னக் குழியமைத்த வற்புதனே—மின்னுந்
திருப்பாய்ஞ்ஞ லூர்க்கரசே சித்தமகிழ்ந் தெற்குத்
திருப்பாத காட்சியருள் செய் (573)

## திருத்தேரூர்

கூறியடி யார்கள் குழாங்கள்கண் காட்சிபெற
மாறிவிளை யாடவந்த வள்ளலே—மீறுந்
திருத்தேரூர்ச் சேத்திரம்வாழ் தேவா நற்செல்வந்
திருத்தேக வாழ்வையருள் செய் (574)

## திருப்பேரூர்

உத்தமத்தி லேசிறந்த வோர்மடமா துக்காகச்
சித்தனங்கத் தைப்பிழந்த செஞ்சுடரே—நித்தனித்தந்
தெள்ளிருக்கும் வாழ்தருந் திருப்பேரூ ருக்கரசே
கள்ளிருக்குங் கொன்றையழகா (575)

## திருக்கொடுங்கோளூர்

சூலமிடற் றேவே துரியாதி தங்கடந்த
நீலமிடற் றனே நிராமயனே—பாலவிழி
யம்பிகைபாள் பாகா வருட்கொடுங்கோ ளூர்க்கரசே
நம்பிகையா தென்னையரு ணன்கு (576)

## திருத்தகட்டூர்

வேதாந்த மீதிலுறை வித்தகனே யுத்தமனே
நாதாந்த மானசிவ நாயகனே—சீதமலர்ச்
செய்யார் வளஞ்சூழ் திருத்தகட்டூ ருக்கரசே
யையாவந் தென்னையினி யாள் (577)

## திருமாலூர்

மாங்குயிலைப் போலுமொழி வல்லியுமை யாளுடனே
யீங்குலகை யாளவந்த வீச்சுரனே—தேங்குலவுஞ்
செய்யவயல் சூழூர் திருமாலூ ருக்கரசே
வையம் புகழ்நிதிதா வா (578)

## திருப்பிடவூர்

வந்தனைசெய் யன்பர் மனத்தின் படியருளுங்
கந்தனைமுன் னீன்றகரு ணாகரனே—சந்தத்
திருப்பிடவூ ராளவந்த தேவாநீ யென்னை
யிருப்பிடமாக் கொண்டாள்வா யே (579)

## திருக்கோவந்தபுத்தூர்

சாற்றுமடி யார்க்கருள்செய் தற்பரனே யிவ்வுலகோர்
தூற்றுமடி தீர்க்கின்ற சுந்தரனே—யேற்றதமிழ்
வல்லார் புகழ்திருக்கோ வந்தபுத்தூ ராதிபனே
மல்லார் திரள்புயமே தா வா (580)

## திருத்தேனூர்

மாதர் வலைக்குண் மயங்கா தகற்றிநிற்சேர்
போதரவைக்குட் புகவரந்தா—நீதத்
திருத்தேனூ ராளவந்த தேவனே வேறு
கருத்தே னுகாந்தவழ கா (581)

## திருஆமாவூர்

தோகை மயிலாடுஞ் சோலை யெழில்காட்ட
வாகையுறுமன்னம் வளங்காட்ட—யோகத்
திருவாமா வூரிலமர் தேவா வுமையா
ளொருவாமா வென்றனையா ளு (582)

## திருஅளப்பூர்.

மாங்குயில் கள்பாட வன்ன மயிலாடத்
தேங்குலவுஞ் சோலைத் திகழ்வளஞ்சே—ரீங்கு
திருவளப்பூர் வாழ்ந்தருளுஞ் சின்மயனே யெற்கு
மருவளப்பூந் தாளிணைதா வா (583)

## திருவூற்றனூர்.

தூய்யமதி யென்பறுகு சூடியவா நின்பதத்தைச்
செய்யமதி யோடுதுதி செயனையா—ளுய்யத்
திருவூற்ற மாநகரிற் சீர்பெறவே வாழுந்
தருவூற்ற மானவர தா (584)

## திருமாற்றனூர்.

ஆனை யுரித்துடுத்து மத்தனே மிக்கான
மானைக் கரத்தில்வைத்த வள்ளலே—வானூர்
திருமாற்ற னூரென்னுஞ் சீர்நகரிற் செல்வா
வொருமாற்றஞ் சொல்வா யுவந்து (585)

## திருச்சேற்றனூர்.

சித்தனே மெய்ஞ்ஞான தேவனே வேதாந்த
முத்தனே யாதி முதற்கொழுந்தே—பத்தர்வாழ்
பொங்குதிருச் சேற்றனூர்ப் போதா மிடியகல
வெங்குதிருச் செல்வமரு ளே (586)

## திருநல்லாரூர்.

விடையேறி வந்து விரைவாகப் போற்றுக்
கடையே னிடரகற்றிக் காத்தாள்—சடையுமையாள்
பாகாநல் லாரூர்வாழ் பண்ணவனே வென்றிதிகழ்
நாகா பரணகுரு ணு (587)

## திருயேமப் பேரூர்.

நீளச் சடையானே நின்மலசொ ரூபியெனை
யாளச் சடையானே யற்புதஞ்சேர்—வேளையரு
ளேமப்பே ரூர்க்கரசே யின்னலுறை வாட்டுகின்ற
காமப்பே யோடவருள் காண் (588)

## திருப்பேரூர் வட்டீசுரம்.

நிருவாத வூரரசே சென்மமீ டேறக்
குருவாக வந்துவிஞ்சை கூறிப்—பெருவளங்கொள்
மேபரார்வ மிக்கதிருப் பேரூர் தனக்கரசே
சீராரும் வாழ்வையருள் செய் (589)

## திருநியம நல்லூர்.

வெண்கொக் கிறகணிந்த வேணியனே தண்குலவு
விண்கொக் கிடையமர்ந்த வித்தகனே—மண்கொள் மலர்
காறு திருநியம நல்லூர்க் கரசேதா
மீறுதிருச் செல்வமுற வே (590)

## திருப்பொய்கை நல்லூர்.

அன்பாகப் போற்று மடியே னகவினையை
வன்பாகத் தீர்த்தருள்செய் வள்ளலே—முன்பாகப்
போத னரிபுகழும் பொய் கைநல்லூருக் கரசே
யோதகரி மாவாக்கு வோய் (591)

## திருவடபேரூர்.

வையமதிக் குந்தரமர் வாடாம லென்றனக்குத்
துய்யமதி சூடியருள் சுந்தரனே—செய்ய
திருவடபே ரூர்க்கரசே தேவாதி தேவா
தருவடவா லாய்நிதிநீ தா (592)

## திருத்துடையூர்.

சீரரவிந் தம்புனைவோன் செங்கண்மா லுங்காணு
நீரரவிந் தம்புனைபு நின்மலனே—சூரத்
திருத்துடையூ ரென்னவுயர் சீர்த்தலத்துக் கோவே
கருத்துடைய னாக்கியெனைக் கா (593)

## திருமுளையூர்

ஆதியே வேதத் தரும்பொருளே யாரமுதே
சோதியே ஞானச் சுடரொளியே—நீதத்
திருமுளையூர் நாதனே சென்றொருதா யின்பாற்
கருமுளையா தென்னையென் றுங் கா (594)

## திருவேளூர்

மாதவத்தி லேசிறந்த மார்க்கண்ட மாமுனிவ
னோதவத்தி லேயழுந்தா தோர்ந்தாண்ட—நாதனே
திங்கள்தவழ் சோலை திகழ்திருவே ளூர்க்கரசே
யெங்கடுயர் தீர்த்தருள்வா யே (595)

## திருவிளத்தூர்

விண்ணவனே வேதாந்த வித்தகனே யன்பர்சூழ்
பண்ணவனே ஞானப் பரம்பொருளே—வண்ணத்
திருவிளத்தூர் வாழ்ந்தருளுஞ் சின்மயா னந்த
மருவுளத்தோய் வாவாதே வா (596)

## திருத்துவையூர்

நேமத் தயாபரனே நின்மலசொ ரூபவுமை
வாமத் தயாபரனே வாவாவா—சேமத்
திருத்துவையூ ரானதிருச் சீர்நகரத் தேவே
கருத்துவையூர் நந்திபதி கா (597)

## திருநாலூர்

வல்லவனே வெள்ளைவிடை வாகனனே பொன்மேரு
வில்லவனே வேதாந்த மெய்ப்பொருளே—நல்ல
திருநாலூர் வாழ்வே சிறியேனை யாள்வா
யொருநாலு பேர்க்கருள்செய் வோய் (598)

## திருத்தஞ்சை எழும்பூர்

சங்கா ளியனுஞ் சதானந்த னுந்துதிக்க
வங்காளி யோடுநட மாடியவா—விங்கெனையாள்
சந்திரனும் வந்துலவுந் தஞ்சையெழும் பூர்க்கரசே
மந்திரசொ ரூபாதே வா. (599)

## திருச்செந்தலை வாலந்துறை

சுந்தரனை யாவரும்பே சுந்தரனை மெய்புருவா
மந்தரனை யேகவெளி யானவனைச்—செந்தமிழார்
செந்தலையூர்க் கெய்திச் சிவசிவென மாபுவியில்
வந்தலையா தின்பமுறு வாய். (600)

## திருலாலீசுரம் எதுத்துறை

பேச்சறியேன் லோகப் பிரட்டறியே னன்புடனே
$ யீச்சறியே னென்னை யெடுத்தாள் வாய் மாசசே
ரிலாலீச் சுரத்தினில்மே வெம்பெருமா னீயே
யலாலீச் சுரன்வேறிங் கார். (601)

## திருமுடவன்றுறை தில்லைவிளாகம்

இன்ன லுடன்கலியே யென்றனெதிர் வந்ததென்ன
னென்ன லுரைத்த நினைவிலையோ—முன்னையான்
முத்தன் பெரிய முடவன்று றையில்வள
ரத்தன டிமை யகல். (602)

## திருகுருக்கை அரியலூர்

இங்கயற்க ணீண்ட விருநிலமெ லாம்பரவு
மங்கயற்கண் ணம்பிகைசே ரத்தனே—பொங்கக்
குருக்கை யெனும்பதிவாழ் கோவெற்குச் செல்வப்
பெருக்கை யருளிருப் பின். (603)

## திருச்சவன் பள்ளி.

பத்த சனந்தொழும் பண்ணவனே பூவேவு
சித்தசனங் கங்கரியச் செய்நுதர்கண்—ணத்த
திருச்சவன் பள்ளியில்வாழ் தேவாவந் தென்னுட்
தரிச்சவதி தீர்த்தருணீ தா. (604)

## திருவெண்காட்டூர் தொண்ணுந்துறை.

போதனே வேதப் பொருளே பொருட்கிசைந்த
நாதனே ஞானகரு ணாகரனே—நீதனே
வெண்காட்டூர் தன்னிலமர் வித்தகனே நல்வரந்தா
கண்காட்டு நெற்றியனே கா (695)

## திருவாவடுதுறை ஆடுதுறை.

கசடனிற் றெண்டர் கழல்பணியா மூட
வசடன்யான் சொற்றமிழ்க்குள் ளன்பா—லிசைவாய்
திருவா வடுதுறைவாழ் தேவாநீ வந்து
குருவா வடுத்தீர்த்தாட் கொள் (606)

---

$ ஈச்சு-ஈந்து.

## திருப்பண்டார வட்டை யெறணுருளம்.

சீலமுண்ட கத்தன் சிரமதிலொன் றைத்தடிந்த
வாலமுண்ட கத்த னடிதொழுவாய்—மாலநெஞ்சே
பண்டார வட்டையில்வாழ் பண்ணவன் றன்னிருதாள்
கண்டா ரவந்தொலைப்பான் காண் (607)

## திரு அய்யப்பேட்டை.

ஆற்றுநீர் கால்வாயி லாமைக்கா மள்ளரள்ளச்
சேற்றினொடு நித்திலமுஞ் சேர்த்தெறியு—மேற்றவளஞ்
சாருமய் யம்பேட்டைத் தற்பரனே யெற்குநிதி
சேரும் படிக்கருணை செய் (608)

## திருக்காறைக்கால்.

அன்றொருநால் வர்க்கினிதா வாரணத்தி னுட்பொருளை
நன்றுபதே சம்புரிந்த நக்கனையே—சென்றுதொழு
காரைக்கா லானையன்பாற் கண்டுதினம் போற்றுதல்செய்
வோரைக்கா லன்சேரா னோர் (609)

## திருத்துறைப்பூண்டி

கரைகாண் பரிய கரியகடல் சூழுந்
தரைமீது கந்தமலர்த் தாளைப்—பரவு
திருத்துறைப்பூண் டிக்கரசே தேவா நாயேற்குக்
கருத்துரை பூடகிடிக் காண் (610)

## திருமன்னூர் கோயில் ராஜமன்னூர்கோயில்.

வாசனே செந்தமிழ்செய் வன்கவிஞ ருக்குதவு
நேசனே ஞான நெறியாளா—பூசிதையா
மன்னூரு கோயிலில்வாழ் மாதேவா வுன்னையுளத்
தெந்நாளும் யான்மறவே னே (611)

## திருப்புதுச்சத்திரம்.

மின்னலிடை யாளுமைசேர் வித்தகனே மெய்ப்பொருளே
வன்னவிடை யேறுமகாதேவா—மன்னும்
புதுச்சத் திரத்திலமர் புண்ணியனே யெற்கு
கதுச்சத் திரத்துமிழ்கா வா (612)

## திருப்புள்ளப் பூதங்குடி

அவ்விடத்துப் பன்னக மாபரண மாச்சூடி
யெவ்விடத்துந் தானு யிருப்பவனே—செவ்விதஞ்சேர்
புள்ளப்பூ தங்குடிவாழ் புண்ணியனே வஞ்சகமாங்
கள்ளப்பூ தத்துளெனைக் கா (613)

## திருநெடுங்களம்.

நல்வளஞ்சே ரும்நிலமும் நன்னிதியு மற்றுமுள்ள
செல்வமெலாம் வந்திருக்கச் செய்வாயே—கல்வி
நெடுங்களமெ னும்பதிவாழ் நின்மலனே வாய்ந்த
§ கடுங்களவி சாலவழ கா (614)

## திருப்பசுபதி கோயில்.

ஆருதவி யுண்டுனையே யல்லாது நாயேற்குச்
சீருதவி யற்ற சிறியனையா—பேரும்
பசுபதிகோ விற்கண்வளர் பண்ணவனே தூய
பசுபதிகோ வந்தெனைக்கண் பார் (615)

## திருப்பண்ணை நல்லூர்.

மூன்று ளடமாடு மாதேவ னேயன்பா
லென்றுமெனை நீங்காம லேயிருந்து—நன்று
திருப்பண்ணை நல்லூர்வாழ் சின்மயனே நின்பால்
விருப்பண்ணச் செய்வாய் விரைந்து (616)

## திருப்பல்லார வட்டை

புன்கலிகா லத்துனையே போற்றுமடி யேன்கொடிய
வன்கலியா னித்தமுளம் வாடாது—பொன்கனக
வானுலவும் பல்லார வட்டைநக ருக்கரசே
தேனுலவுஞ் செல்வமருள் செய் (617)

## திருப்பச்சையூர்.

பாம்பணிசெவ் வேணிப் பரம்பொருளே யெவ்வுயிருந்
தாம்பணிமெய்ஞ் ஞானத் தயாநிதியே—காம்புலவு
பச்சையூ ராதிபனே பார்பதியோர் பாகமுற
விச்சையூ ராவுடை யானே (618)

§ கடுங்களமென்பது-கடுங்களமெனவிகாரப்பட்டது.

## திருப்பச்சையபட்டினம்.

பொன்னுங் கனகமணிப் பூஷணமு நன்செய் புன்செய்
யுன்னுங் கனசெல்வ முள்ளதெல்லா—மன்னுதிருப்
பச்சையா பட்டினம்வாழ் பண்ணவனே தந்தாள்வா
யிச்சையாப் பட்டினத்தோ டே (619)

## திருநாங்குசேரி.

மாணர் கலவி மயக்கமதி லேதினமு
நாணசைப் பட்டலைந்து நையாமற்—வாணரு
நாங்குசே ரிப்பதிவாழ் நாதனே நற்பொருளே
பாங்குசே ரிங்கெனைக்கண் பார் (620)

## திருக்கருந் திட்டைக்குடி.

அத்திமலர் தூவி யடிபணியு மன்பருக்கு
முத்திமனை நல்கு முதற்கொழுந்தே—சித்தி
நெடியானே யன்பர்சூழ் நீள்கருந் திட்டைக்
குடியானே யென்னையாட் கொள் (621)

## திருத்தஞ்சைமாமணி.

துண்டமதி சூடுசிவ சுந்தரத யாபரனே
கண்டமதி லங்குகறைக் கத்தனே—யண்டர்தொழ
வந்து திருத் தஞ்சை மாமணிவாழ் தேவநல்கு
† தந்து திருச் செல்வமிகத் தான் (622)

## திருக்கரம்பனூர்.

எற்குரு வாமென்னு மோர்வாத வூரார்க்குச்
சற்குருவாய் வந்துபதே சம்புரிந்த—சிற்குணனே
மாகரம்ப னூர்க்கினிய வாவணங்க வாழ்த்தவெற்கு
நாகரம்பத் துக்குமே னல்கு (623)

## திருத்தஞ் சாக்கை.

வந்தானைக் காய்ந்தானை வன்சமண ரால்விடுத்துத்
தந்தானைத் தோலுடுத்த தற்பரனை—யிந்தானை
தஞ்சாக்கை யானைநிதந் தான்றுதிக்க வந்திடுவாய்
நெஞ்சான தஞ்சாதே நீ (624)

---

† தந்து—றால்.

## திருநாட்டுத் தஞ்சை.

வஞ்சமா வேதன் வரைந்ததெலா மென்னருகு
நெஞ்சமே யொன்று நிகழ்த்தக்கேள்—விஞ்சு
திருநாட்டுத் தஞ்சையில்வாழ் தேவனையே யுன்னி
யுருநாட்டு த்தஞ்சமென்றோ து (625)

## திருக்காவேரி.

பன்னிருகா ல்கண்டதின்மேற் பாய்ந்தாறு தாரத்திற்
றுன்னி யிருந்து சுகம்பெறவே—நன்னிலையைப்
பூசிகனே வேதம் புகழ்திருக்கா வேரியாய்
தேசிகனுய் வந்துசெய்வான் சீர் (626)

## திருத்தஞ்சை ராஜராஜேசுரம்.

நெற்றி விழியானை நின்மலசொ ரூபனையுட்
பற்றிப் பரவிப் பணிநெஞ்சே—வெற்றித்
திருத்தஞ்சை ராசரா சேசுரத்துத் தேவைக்
கருத்தஞ்சா தேதுதிசெய் காண் (627)

## திருவிண்ணூர்.

எந்தவினை வந்தாலு மென்பா லணுகாமற்
சந்ததமும் வந்தருட யாபரனே—கந்தமிகு
விண்ணூ ரெனும்பதிவாழ் வித்தகனே சித்தமதி
லெண்ணூர் புரமெரித்தோ னே (628)

## திருவிண்ணூத் துங்கறை.

கூசிநீ யாரென்று கூடிவந் தாய்கலியே
சீசிநில் லாதப்பாற் சென்றுவிடு—காசி
திருவிண்ணூத் தங்கறைவாழ் தேவனையே போற்றி
மருவுவோம் வாழ்வு வரும் (729)

## திருப்பூவாளூர்.

சொன்ன வறளச் சுவாசமே லாயிழுக்கப்
பன்னுடி யோடு பலங்குறையப்—பின்னுன
வந்தக்கா லந்தனில்வந் தாள்பூவா ளூரரசே
¶ மந்தக்கா லற்செற்ற வா (630)

---

¶ மந்தக்காலன்-மன்மதன்.

## திருஅய்வர் பாடி.

ஒன்றுபத்து நூறு யொருபதி னாயிரமா
யென்றுமென் மேலும்வளர்ந் தேறுமே—நன்றுநெஞ்சே
ஐவர்பா டிப்பதிவா ழத்தனிரு தாள்பணிதல்
செய்வையெனின் மிக்க திரு (631)

## திருத்தில்லை யாடி.

பையல் குலைவிரும்பப் பண்ணுமட வார்தந்த
மையல் வலைக்குண் மதிகலங்கித்—துய்யசீர்த்
தில்லையா டிப்பரனைச் சென்றுவணங் காலோபர்
தொல்லைவினை போகுமோ சொல் (632)

## திருக்கவித் தலம்.

காமனையு முப்புரத்தின் கண்வா ழசுரரையு
மாமனையுஞ் சுட்டெரித்த வள்ளலே—பூமருவுங்
காவலவர் போற்றுங் கவித்தலத்தா னைப்போற்றும்
பாவலவர்க் குண்டோ பயம் (633)

## திருவண்டங்குடி.

உன்னையல்லால் வேறுதவி யுண்டோ புவிமீதி
லென்னைவந் தாடலுனக் கேகடமை—யன்னையே
வண்டங் குடியானே வாரியமு தத்தாலங்
கண்டங் குடியானே கா (634)

## திருக்குடந்தை விசுவநாதேசுரம்.

கல்விப் பொருளுங் கனகசவு பாக்யமாஞ்
செல்வப் பொருளுந் தினந்தருவாய்—நல்வளஞ்சேர்
நாட்டுக் குடந்தைவிஸ்வ நாதேச் சுரச்சிவமே
வீட்டுக் குறத்தா விடை (635)

## திருக்குடந்தை யகத்திசுரம்.

கூடல் புனவாசல் குற்றால நெல்வேலி
தேடற் கரிய சிவத்தலங்கள்—பாடற்
குடந்தையகத் திச்சுரம்வாழ் கொண்டலே வெற்பின்
மடந்தையகத் தேயுள்ள வா (636)

## திருக்குடந்தை நாகேசுரம்.

பேதை மனமேநீ பித்துப் பிடித்தது போல்
வாதைமிகப் பட்டு வருந்துகிறாய்—தீதில்
குடந்தைநா கேச்சுரம்வாழ் கொண்டலையே யன்பர்
மடந்தவிர்த்தாள் வானைநீ வாழ்த்து (637)

## திருக்கொள்ளடம் காவேரிகபாலீசுரம்.

வானமகிழ் வாயமதி வாய்ந்தசடைச் சங்கரனை
யோநமசி வாயவென வோதிடுவோர்—தானமாங்
கொள்ளடங்கா வேறியெனக் கூறுகபா லீச்சுரத்தி
லுள்ளடங்கா வின்பமுறுவார் (638)

## திருஎழுப்பி விட்டான்சேறி.

சேர்ந்துண்மை யாய்க்கேளாய் சித்தமே நீஞாலகிற்
போந்துண்மை வாகனைப் போலிருப்பாய்—காந்தா
யெழுப்பிவிட்டான் சேரியில்வா ழீச னமனை
மழுப்பிவிட்டா னென்றுமகிழ் வாய் (639)

## திருத்தாரு காவனம்.

சீதகம லத்தைத் தினந்தினமும் பூசித்தேன்
பாதக மலத்தைபுறப் பண்ணுதா—ணீதத்
திருத்தாரு காவனம்வாழ் தேவாநீ யென்னை
வருத்தாமற் காவல்செய் வாய் (640)

## திருநாகூர்.

நாதன் பகிரண்ட நாயகனை நற்பரனை
வேதன் றலைதுணித்த மெய்ப்பொருளைப்—பூதலத்தில்
நாகூருக் கோர்திலக நற்குணத யாபரனைப்
பாகூறுஞ் செந்தமிழாற் பாடு (641)

## திருவடகுடி.

மணியதன மாயருளி வஞ்சமிடி யென்னும்
பிணியனைத்துந் தீர்த்தருளும் பெம்மா—னணியகலா
விண்ணாடு போற்றுதல்செய் மேல்வட குடிக்கரசே
பண்ணாடிநீ தொண்டனைக்கண் பார் (642)

## திருப் பேராளம்.

பேருலகம் போற்றும் பிஞ்ஞகனே யாலவிடக்
காருலவுங் கண்டக் கடலமுதே—சீருலவும்
பேராள மாநகர்வாழ் பெம்மானே நாயேற்குப்
பாராள யோகமுறப் பண் (643)

## திருப்புலிவலம்.

பராபரமே தேவர் பரவுதிருப் பாதா
சராசரங்க டாளுன சம்பு—வரமார்
புலிவலத்தோய் நின்பதத்தைப் போற்றுமெனைக் கண்டு
கலிவலஞ்செய் தோடவருள் காண் (644)

## திருமலைராயன் பட்டினம்.

இந்தணிசெவ் வேணி யிறைவாநின் னாலயத்தில்
வந்தணிசெந் தாமரைத்தாள் வாழ்த்தினேன்—சந்ததமுந்
துட்டர் வணங்குஞ்சீதிரு மலைராயன்
பட்டனத்தா யென்றனைக்கண் பார் (645)

## திருக்கந்தங்குடி.

நீடிய செல்வ நினைப்பார்க்கு நேரருளு
மூடிகனைத் தந்தசிவ மூர்த்தியே—தேடியசீர்ப்
பொன்னார்கந் தங்குடிவாழ் புண்ணியன்பொற் யாதமதை
யெந்நாளும் போற்றுதிநெஞ் சே (646)

## திருக்களாஞ்சேறி.

வானவனைத் தொண்டரையாள் வானவனை யென்றனுளத்
தானவனை யென்றுமுரித் தானவனை—மானவனைச்
சித்தமே யந்தத் திருக்களாஞ் சேரியனை
நித்தமே போற்றுவாய் நீ (647)

## திருவிடக்களி.

தஞ்சமவ னென்றுறுதி தான்கொண் டிருப்பாயேல்
வஞ்சமவன் பாலில்லை வந்தாள்வா—னெஞ்சே
விடக்களி மாதலத்து வித்தக னடேசன்
றடக்களிமா லானையுரித் தான் (648)

## திருப்பாபநாசம்.

வேதத்தை யுற்றவனும் விண்ணவனுங் காணாத
பாதத்தைக் கண்டு பணியவரு ணாதத்
திருப்பாப நாசமெனுந் தென்னகரோய் செய்வாய்
விருப்பான செல்வமுற வே (649)

## திருப்பிரம்பலூர்.

வாவிக்கு ளேயடங்கா வாழைகமு கின்மடலிற்
றாவிவிண் மேகந் தணிற்பாய்ந்து—மேவிவரும்
பேர்வளமே லோங்கும் பிரம்பலூ ருக்கரசே
சீர்வளர வேகிருபை செய் (650)

## திருத்தருமாபுரம்.

துன்று மகிதலத்துத் தோன்றுமழ கேசனைப்போ
லென்று மகிழ்வா யிருக்கவரு —ளின்று
தருமா புரமதில்வாழ் தற்பரனே யெற்குத்
திருமா தருண்மிகவுஞ் செய் (651)

சோழநாடு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகநாடு 6-க்கு ஸ்தலம் 651-கவி 652.

---

நடுநாடு அல்லது,

# மகதநாடுசிவக்ஷேத்திரமாலை.



## திருவண்ணாமலை அருணை.

மூவுலகம் போற்று முதல்வா திருக்கருணைத்
தேவனையல் லாதுண்டோ செப்புதற்குக்—காவலவு
மண்ணா மலைக்கிறைவா வாதியே நிற்றுதியை
யெண்ணா மடையனையா னின்று (652)

## திருவாமாத்தூர்.

கொற்றமிக வானநிதிக் கோனைநிக ராகவெற்கு
நற்றமிழுஞ் செல்வமுநீ நல்குவா—யுற்ற
திருவாமாத் தூர்க்கரசே தென்னனுக்கோ—ரின்னன்
மருவாமற் காத்தருடே வா (653)

## திருப்பனங்காட்டூர் பனையபுரம்.

துங்கவிடை மீதேறித் தொண்டரை யாளவரு
மெங்கள் குருவேம யேசுரனே—யிங்கு
திருப்பனைய மாநகர்வாழ் தேவாநீ யென்னுள்
விருப்பனைத்துந் தாகைதொழ வே (654)

## திருமுண்டீச்சுரம்.

ஞானத் தயாபரனே ஞாலத்தி னன்குயர்ந்த
வானத் திலகுதே வாதிபனே—மாநிலத்தி
லெத்திசையும் போற்றுமுண் டீச்சுரத்தில் வாழ்தேவா
பத்திசெயுந் தொண்டனைக்கண் பார். (655)

## திருப்பாதிருப்புலியூர்

புன்மைதனை நீக்கிப் பொருங்கலியை யும்போக்கி
நன்மைதனை யென்றனக்கு நல்குவாய்—பொன்மா
திருப்பா திரிப்புலியூர்த் தேவாமெய்க் கோவே
திருப்பாதங் காணவருள் செய் (656)

## திருமாணிக்குழி.

நல்ல வரமருள்வி நாயகனைத் தானீன்ற
வல்லவனே யென்னருகே வாவாவா—நல்லதிரு
மாணிக் குழிக்கிறைவா வாசனே யன்பர்தங்
காணிக் குரியானே கா (657)

## திருவடுகூர்.

கொற்றமிகுங் கீரர்க் குபதேசஞ் செய்ததுபோ
னற்றமிழைத் தந்தெனையு நன்காள்வா—யுற்ற
வடுகூரில் வாழும் வரதா கரிய
கடுகூ ரிலகுகளா கா (658)

## திருத்துறையூர்.

பாவம்போ முன்செய் பழியும்போ மிக்கமனத்
தாவம்போம் போகாத் தரித்திரம்போம்—கோவநெஞ்சே
பொங்கு திருத்துறைவாழ் புண்ணியனார் தங்கருணை
யிங்குநமக் குண்டேன் றிரு (659)

## திருவெண்ணெய் நல்லூர்.

கல்விவரு ஞானக் கருத்துவருஞ் செங்கமலச்
செல்விவருஞ் செல்வச் செருக்குவரு—சொல்லார்ந்த
நல்லார் திருவெண்ணெய் நல்லூரா னைப்பணிந்தே
யெல்லாம் வருமென் றிரு (660)

## திருவிடையாறு.

வேதம் பரியாக வேதியனே சாரதியாத்
தீதகத்தர் முப்புரத்தைச் சென்றெரித்த—சோதித்
திருவிடையா றென்னவயர் சீர்த்தலத்தில் வாழ்வோய்
கருவிடையா றாதெனையே கா (661)

## திருத்துறையணி நல்லூர்.

ஆரணிந்த வேணி யரனே யருட்கடலே
சீரணிந்த மெய்ஞ்ஞான தேசிகனே—தாரணியி
லங்கம் பயிலு மறையணிநல் லூர்க்கரசே
சங்கம் பரவநிதி தா (662)

## திருக்கோவலூர் வீரட்டானம்.

மேதினியி லுன்னையன்றி வேறா ரெனைப்புரப்பார்
சோதியே மெய்ஞ்ஞான சுந்தரமே—யாதியே
விந்தைதிருக் கோவலூர் வீரட்டா னம்புரக்கு
மெந்தையே வந்தா ளெனை (663)

## திருநெல் வெண்ணெய்.

கோவர் பெரிய கொலைஞர் கவர்தட்டர்
பாவர்கண்மேற் செந்தமிழைப் பாடாது—நாவலர்சூழ்
மிக்கதிரு நெல்வெண்ணெய் மேனகர்வா ழும்பரனே
தக்கதிருச் செல்வமிகத் தா (664)

## திருவிருத்தாசலம் பழமலை.

தரமறிந்து செய்யாத சண்டாளர் மீதில்
வரமிகுந்த செந்தமிழை வாழ்த்தித்—திரியாது
சம்புவே விர்த்தா சலமாந் தலந்தரசே
நம்பினெனைக் காத்தரு ளன்கு (665)

## திருநாவலூர்

எந்த§வினை நீக்கி யெழிலான நன்னிதியைத்
தந்ததன மாகவரந் தானருள்வாய்—சந்ததமு
நாவலூர் மேவு நடேசா தயாபரனே
பாவலனன் றேனுங்கள் பார் (666)

## திருவதிகை வீரட்டானம்.

அத்தி யுரித்த வரனைமெய் யன்பருக்கு
முத்தி யளித்த முழுமுதலை—சித்திசைய
மேலாந் திருவதிகை வீரட்டா னத்தரசே
யாலாந் திருப்பரவை (667)

## திருஅச்சோபுரம்.

நச்சாய கண்டத்து நாதா வரை யுதவுங்
கச்சாடு மாமுலையாள் காதலனே—பிச்சைநெற்கு
யாரும் பரவுதிரு வச்சோ புரத்தரசே
தாருங் கமலமலர் தாள் (668)

## திருத்தினை நகர்.

என்பறுகு கொன்றைதும்பை யிந்தரவு சேர்சடில
நன்பரம நாதகரு ணைகரனே—யன்பர்
கவிஞர் தினைநகர்வாழ் சத்தனே முக்கட்
புவிஞதா வைத்தருள்பொற் றாள் (669)

## திருஎருக்கத்தம் புலியூர் நாகேந்திர பட்டினம்.

வஞ்சக் கலியகற்றி வான்செல்வ முங்கொடுத்து
செஞ்சரண சேவையருள் செய்குவாய்—விஞ்சவுயர்
தண்டலைசூ ழும்மெருக்கத் தம்புலியூர் வாழீசா
தொண்டன்மிடி நீக்கித் தொலை (670)

## திருக்கூடலையாற்றூர்.

அய்யாமெஞ் ஞானத் ததிபதியே யன்பர்துதி
மெய்யா மதிசூடும் வேணியனே—செய்யாரு
மிக்கதிருக் கூடலையார் வேதச் சிகாமணியே
தக்கதிருச் செல்வமினித் தா (671)

---

§ வினையும் என்பதில் உம்-விகாரத்தாற்கெட்டது.

## திருத்தூங்கானை மாடம்.

இருக்குடனே வாதிமறை யேற்றமால் வேதன்
தருக்கோடு தேடவரி தான—செருக்கோடு
மல்குதிருத் தூங்கானை மாடத்தலத் தரசே
நல்குதிருச் செல்வமினி நன்கு (672)

## திருநெல்வாயில் அரத்துறை.

தூயவடி யார்க்குவருந் துன்பமெல்லாந் தீர்த்தருள்செய்
நாயகனே குஞ்சித நடேசனே—தாயகமாய்
வந்தவரத் துறையில் வாழுந் தயாபரனே
யெந்தவர மும்மீவா யே (573)

## திருமயிலையூர் கறையேறவிட்ட நல்லூர்.

வந்தாள்வா னுன்னை மனமே மயங்காதே
சிந்தா குலமெல்லாந் தீர்த்துவிடு—நந்தா
மயிலையூர் தன்னிலமர் வள்ளலருட் டேவன்
மயிலையூர் வேலவனத் தன் (674)

## திருச்சோமபுரம் வில்லிவாக்கம்.

சித்திதரு வோனே சிவனே பராபரனே
முத்திதரு வோனே முதல்வனே—பத்தர்சூழ்
சொல்லார் பொழில்சூழுஞ் சோமபுரத் தத்தனே
கல்லார் மனத்தனையாள் காண் (675)

## திருநீடாலி சத்திரம் கோபுராபுரம்.

நானுலகிற்செய்த நவைபெலா மென்னைவிட்டுப்
பானுவரக் கண்ட பனிபோலே—தானோட்டிச்
சந்ததமு நீடாலி சத்திரத்துக் கோரரசே
வந்ததன வாழ்வருளு வாய் (676)

## திருத்திட்டுகுடி.

பார்க்கண்ட ஞான பரமே பரவெளியே
மார்க்கண் டனைப்புரந்த வள்ளலே—வார்க்கொண்ட
திட்டுக் குடியிலமர் சின்மயா னந்தனே
மட்டுக் கடங்காத வா (677)

## திருச்செருதூர் இருஷிவந்தியம்.

ஆறூரும் வேணி யரனே யுனையல்லால்
வேறுரு வந்தாள்வார் வித்தகனே—யேறூர்
திருச்செருதூ ரத்தனே செல்வமிகத் தந்தாள்
குருச்செருதூர் நாதாவெற் கு (678)

## திருச்சத்திரம் உளுந்தூர் மாஷபுரம்.

நீடெண் டிரையதனி னீந்துந் துரும்பதுபோ
னுடெண் டிசையும்போய் நானலைந்து—வாடாது
சத்திர மாதலத்தோய் தாழ்கலியைப் போக்கியெனை
பத்திரமாக் காத்தருளப் பா (679)

## திருக்கோவிந்தபுரம் இலவாருகூர்.

கன்னல்வில் லானைக் கடிந்தவா கத்தனே
யின்ன லணுகா தெனையாள்வாய்—மன்னுதிருக்
கோவிந்த மாநகர்வாழ் கோவே வளர்ந்தேறு
மாவிந்த மாநிதிதா வா (680)

## திருக்கோழி புத்தூர் கூவனூர்.

தாழ்வெண் டிரைகடல்சூழ் தாரணியின் மேலான
வாழ்வெனக்குத் தந்தருள்செய் வள்ளலே—நீழும்
பெருங்கோழி புத்தூரராய் பேரார் துவச
விருங்கோழி யானத்த னே (681)

## திருக்கோளங்குடி வரஞ்சரம்.

தீதணுகி லாதபர தேவனே வம்பர்வெங்
சோதணுகா வாறெனையாட் கொண்டருள்வாய்—மாதவருங்
கோளங் குடியானே கோலமிட ருமதனிற்
காளங் குடியானே கா (682)

## திருப்பரப்பள்ளி உடையூர்.

ஆழ்ந்த கருத்தா யனுதினமும் போற்றுநெஞ்சே
தாழ்ந்தசடைச் சங்கரச தாசிவனை—வாழ்ந்தோர்
திருப்பரப்பள் ளிக்கெய்திச் செந்தமிழ்ப்பா வோதி
மருப்பரத்தை யானையுன்னு மல் (683)

## திருப்பொருப்பள்ளி ஓங்காரபுரம்.

பேதகத்தை நோக்காது பெற்றதா யின்புறவெம்
பாதகத்தைத் தீர்த்த பரஞ்சுடரே—நீதத்
திருப்பொருப்பள் ளிக்கரசே செயிழையார் நோக்கந்
திருப்பொ ருவரமருள் செய் (684)

## திருத்தவப்பள்ளி கூடலூர்.

தூண்டும் பரியிடபத் தோன்றல்பதத் தன்புவைத்து
வேண்டும்போ தன்றோ மிகவெய்தும்—கூண்டுநீர்
போயுச் சியமாகப் போற்றுதவப் பள்ளிகண்டாற்
சாயுச்ய மென்னமெபரி தா (685)

## திருச்சிவப்பள்ளி வலையனூர்.

நீடும் பெருவாழ்வு நெஞ்சகத்தி லேநினைந்து
நாடும் பொழுதெதிரே நண்ணுமே—கேடில்லா
தோங்கு மதிலினிளந் தூர்சிவப் பள்ளியெய்தித்
தீங்கு கெடவிருந்தாற் சீர் (686)

## திருஅரப்பள்ளி மைலம்.

சக்கரத்தைப் போன்றதிருத் தையலொரு பாகாவஞ்
சக்கரத்தை நீங்கா வரும்பொருளே—மிக்க
திருவரப்பள் ளிக்கரசே தேவாவோர் தாய்பாற்
கருவரப்பண் ணாதெனையே கா (687)

## திருச்சிறப்பள்ளி திண்டிவனம்.

மிக்கான கந்தமிலை வேறுண்டு கோடியுக
மக்கான சுத்திலலைவீர்கான்—கைக்கான
நந்தவர்க்குங் காணாத நக்கன் சிறுப்பள்ளி
வந்தவர்க்கு முத்தியருள் வான் (688)

## திருக்கூத்தனூர் செங்கமால்.

பாதார விந்தம் பணியுமடி யார்க்கருள்செய்
நீதா மதலையணி நின்மலனே—மாதடஞ்சூழ்
கூத்தனூ ராதிபனே கோவே யெனையாள்பொன்
னேத்தனூ ரமீரந்தந் தே (689)

## திருநாங்கூர் தேவகிபுரம்.

கொக்கிறகு தும்பையென்பு கொன்றை யறுகுமதி
யக்கினிது பூண்டகிரு பாகரனே—முக்கியஞ்சே
ரப்பாவை நாங்கூர்வா ழத்தனே யெற்கருள்செய்
யிப்பாவை நான்கூற வே (690)

## திருஅருளூர் காமக்கூர் காமபுரம்.

ஆரென் றெனைவந் தடுத்தா யடாகெடுவாய்
பாரென்றன் பேரு பகரக்கேள்—போரன்
றடக்கருளூ ரானடிமை யாகுங் கலிநீ
கெடக்கவியுஞ் சொல்வேனிங் கே (691)

## திருஇடைக்குடிவேணு குன்றம்.

குறுப்பாக மில்லார் கொடைப்பாக மில்லா
ரிருப்பாகப் பொன்றேடி யியா—திருப்பா
ரிடையர் குடிவா ழிறைவாவிம் மூன்று
கடையரொடு சேராமற் கா (692)

## திருயிலந்தங்குடி தவளகிரி.

நடனபரி பூரணமி ஞரியொரு பாக
திடனரிய ஞானசிவ தேவா—தடஞ்சூ
ழிலந்தங் குடிப்பதிவா ழெந்தலே யெற்கு
நலந்தங்கு வாழ்வருளிந் நாள் (693)

## திருஇளையாலூர்வரபுரம்.

இந்திரன் றந்தசுதற் கேவருளி யேகாத்த
சந்திரன் வந்தசடைச் சங்கரனே—முந்து
திருவிளையா லூரரசே சிற்பரமே யென்னைக்
கருவி லுறாதருளிக் கா (694)

## திருயிஞ்சிகுடி மாதூர்.

எத்திசையும் போற்று மிறைவாமுன் கூடலிலே
சித்திசையச் செய்தபர தேவனே—முத்தியரு
ளிஞ்சிகுடி மாநகர்வா ழீசனே யோர்பாகம்
வஞ்சிகுடி கொண்டவா நா (695)

## திருஇனியனூர் கோட்டைக்குப்பம்.

ஒட்டுக்கு ளாகி யுழல்பறவை போற்கலியின்
மட்டுக்கு ளாகாது தானுள் வாய்—மட்டூருங்
கொந்துலவு சோலை குலவினிய னூரதனில்
வந்து நிதி தந்தருடே வா (696)

## திருஇறைவாஞ்சேறி வந்தவாசி,

கற்றமறை நால்வர் கழல்பணிந்து கேட்கவன்று
கொற்றமறை யின்பொருளைக் கூறியவா—வுற்றதிரு
மேவுமிறை வாஞ்சேறி வித்தகா நாயேனைக்
காவலவா நெற்றியம்பகா (697)

## திருஇலுப்பூரு மாரன்பாடி.

ஆழ்ந்த கயத்தி லழுந்துங் கயேந்திரன்போல்
வாழ்ந்தகுடும் பத்தின் மயங்காதா—டாழ்ந்த
சடையானே நீயிலுப்பூர்த் தற்பரனே சூலப்
படையானே சின்மயனே பார் (698)

## திருஇலுப்பாமூர் நெய்யாடிவர்க்கம்.

பூவுபுன லங்கி பொருந்துகா லாகாயம்
யாவுநீ யாகிவரு மத்தனே—மேவு
மிலுப்பாமூர் நாதா விரணியந்தந் தென்ற
னலுப்பாஞ் சலிப்பகற்றி யாள் (699)

## திருஇளங்காடு.

முத்தனே வேத முதலே முதற்கொழுந்தே
பித்தனே கொன்றையணி பெம்மானே—யத்த
விளங்காட்டூர்க் கோரரசே யேழையேற் கின்ப
வளங்காட்டு ஞானவர தா (700)

## திருஇராசாம்பேட்டை.

கல்லும் புவியுங் கடலுஞ் சராசரமு
மல்லும் பகலுமா யானவனே—சொல்லுந்
திருராச பேட்டையில்வாழ் சின்மயனே யெற்கின்
றொருராச வாழ்வருள்வந் து (701)

## திருவிசையபுரி.

சரதகுண சேகரத யாபரத யாளா
வரதகிரு பாகரசீ மானே—விரத
விசையபுர மாநகர்வாழ் வித்தகனே யென்னுள்
ளிசையவெளி யேகா திரு (702)

## திருஉத்தமயேசுரம்.

ஆதியா யந்தமா யண்டபுவ னங்கடந்த
சோதியாய் நின்ற சுடரொளியே—போதமரு
ளுத்த மயேசுரம்வா ழுத்தமனே முத்தொழில்செய்
சித்த மயேசுரதே வா (703)

## திருவெளிப்பாளையம்.

மாதங்க வைகும் வரோதயனே வெற்புதவு
மாதங்க னேகருணை வள்ளலே—நீத
வெளிப்பா ளையத்திலமர் வித்தகனே செல்வங்
களிப்பாக வைத்தெனையே கா (704)

## திருப்பவளேசுரம்.

தென்றலுக்கு மாங்குயிற்குந் திங்களுக்குஞ் சித்தநொந்து
மன்றலுக்கு நோக்குமட மானுளே—யின்றே
பவளே சுரத்திலமர் பண்ணவனே கூடி
ரவளே மகிழ வணை (705)

## திருச்சீரங்கபட்டணம்.

எற்குளத்திற் றோன்றுத யாவுமறி யும்படிநீ
சற்குருவாய் வந்துபதே சம்புரிவாய்—நற்குணனே
சீரங்க பட்டணம்வாழ் சிற்பரதே வாமேரு
சாரங்க மானவர தா (706)

## திருக்கச்சூராலக்கோயில்.

ஓர்நாகம் பூணுக வோர்நாகம் நாணுக
வோர்நாகம் வில்லா வுடையானே—சீராருங்
கச்சூரா லக்கோயில் கந்தெநனை வந்தேயா
ளச்சூறுங் கண்டகரு ணு (707)

## திருக்காமீசுரம்.

நித்தமுனை யேத்தி நிகழ்த்து மடியேனுக்
கந்தமுத விக்கா வரும்பொருளே—முத்தர்சூழ்
காமீ சரத்திலமர் கந்தனை தில்லையிலே
யாமீ சரவந் தருள் (708)

## திருவெள்ளூர்.

பூவாழு மன்னர் புகழும் படிசிறந்த
பாவாழு நாவீர் பதம்பரவி—யாவலுடன்
றெள்ளூதமிழ் வெள்ளூர்வாழ் தேவனை யேபாடித்
தள்ளுவீ ரூழ்வினையைத் தான் (709)

## திருமணைக்கறை.

வஞ்சமிடி யேயென்றும் வந்தென்னைத் தீண்டாதே
நெஞ்சமதி லேனு நினையாதே—கொஞ்சமேனுஞ்
செல்லாதே தென்றூர் திருமணைக் கறைக்கிறையா
யெல்லாமா னன்றெண்டா னென் (710)

## திருவிடைவாய்க்குடி.

எண்ணுதலைத் தந்தருள்செய் யேந்தலை மெய்ஞ்ஞானக்
கண்ணுதலை ஞானக் கடலமுதே—நண்ணி
விடைவாய்க் குடியரனை வேண்டுநெஞ்சே செல்வ
மடைவாய் குடிபெருகு மாறு (711)

## திருக்குருந்தங்குடி.

அத்தம் பெறவேண்டு மானாலோர் காரியங்கேள்
சத்தம் பெறவரக ராசம்பென்—றுந்த
குருந்தங் குடியானைக் கோதில்லா தெய்தி
யிருந்தங் குளமே யிறைஞ்சு (712)

## திருக்கடையக்குடி.

இன்னலற வென்று ளிறைஞ்சி யடிபணிந்து
நன்னலஞ்சே ரஞ்செழுத்தை நாட்டியே—யுன்னிக்
கடையக் குடியிலமர் கத்தனையர்ச் சித்தா
லடையத் திருவருளு வான் (713)

## திருச்செம்பங்குடி.

கற்றகவி வல்லீர் கசடர் களைப்பாடிப்
பெற்றபல னென்ன பிதற்றுகிறீ—ருற்றனுவுங்
கோதில்லாச் செம்பங் குடியானைப் போற்றினல்
வாதில்லாச் செம்பொன் வரும் (714)

## திருக்கொடுமுடி.

ஆலத்தை யுற்றவனே யம்புலிய ணிந்தவனே
தாலத்தைப் பெற்றவனே தற்பரனே—சீலக்
கொடுமுடி மாநகர் வாழ் கோவே வறுமைப்
படுமுடிய விழ்த்தெனைக்கண் பார் (715)

## திருப்பனங்காடு தனியீசுரம்.

பழியே னரியகொடும் பாதகனு ளனு
மிழியேனை யிச்சமைய மேயா—னழியாப்
பனங்காட்டூர் வாழும் பராபரனே செல்வக்
கனங்காட்டு வாழ்வருளிக் கா (716)

## திருத்தருக்காகுடி தெல்லையூர்.

வாலை யிரதியென மண்டுகுழ லொண்டொடிக்கு
மாலை யிரவினிலே வந்தருள்வாய்—கோலத்
தருக்காக் குடியிலமர் தற்பரனே செல்வம்
பெருக்காக் கொடுத்தாள்வாய் பின் (717)

## திருவயலூர்.

முக்கணிறை யேபூ முழுதுதவு வாள்பாகா
வக்கணிந்த வேதத் தரும்பொருளே—நக்கனே
மேல்வயலூ ராளவந்த வித்தகனே யென்றனக்குப்
பால்வளஞ்சேர் செல்வமுறப் பார் (718)

## திருநாகை பாப்புத்தூர்.

சுத்தொழிற்குந் தானு யிருந்தருள்செய் தானந்த
முத்தொழிற்குங் காரணமா மூர்த்தியே—யித்தரையில்
மானகை யம்பதிவாழ் வள்ளலே யெற்கருள்செய்
தானகை யானவர தா (719)

## திருக்கடக்கம் கயிலைபுரம்.

ஈசனே முத்தொழில்செய் யேந்தலே யன்பருள
வாசனே யாதி மறைப்பொருளே—நேசத்
திருக்கடக்க மான திருத்தலத்தோ யண்டார்
செருக்கடக்க வெகிருபை செய் (720)

## திருயிட்டேசுரம்.

கூடிமயில் வந்துதுதிக் குஞ்சாய லாளுளத்தில்
வாடிமயல் கொண்டுநின்பால் வந்தடைந்தா—ளடியே
யிட்டே சுரத்தில மரேந்தலே சேர்ந்தணைவா
§ யெட்டே சுறுமுக் காளே (721)

## திருஅன்னவாசல் அன்னபுரம்.

சிவமா சயிலமுறை தேவாமுன் யான்செய்
பவமா சகலவருள் பாதா—தவமிகுத்த
வன்னவா சப்பதிவா முத்தனே மெய்த்தமிழ்சேர்
தென்னவா சற்குணதே வா (722)

## திருக்கோடங்குடி கோவிலூர்.

சிந்தோதை யென்னச் செயமா மறைமுழங்கத்
தந்தோமென் றுநிற் தயாபரனே—நந்தாத
கோடங் குடியானே கூறமடி யேனுளமா
மாடங் குடியானே வா (723)

## திருமாயூரம் செம்பிசுரம்.

தாமயிலை நேருதிருச் சாயலணங் குன்மேற்கொண்
டாமயலைத் தீர்த்து மகிழ்வுறச்செய்—காமருவு
மாயூர மாநகர்வாழ் வள்ளலே நீள்பசிய
வேயூருந் தோளானை மேவு (724)

## திருமாயூரம் பூசமுடையாசிரமம்செயபுரி.

எவ்வெவ் விடங்களினின் றெண்ணுவையோ நெஞ்சமே
யவ்வவ் விடங்களில்வந் தாதரிப்பான்—செவ்விதஞ்சேர்
பொங்கமா யூரப் பூசமுடை யானென்னுஞ்
சங்கரச தாசிவமே தான் (725)

---

§ எட்டேசு—எட்டுமலரி னழகு

## திருமலைக்குடி மந்திரபுரம்.

மேதிதடம் பாய வெருக்கொண் டிளவாளைச்
சாதிவிண்மேற் பாயுந் தடஞ்சூழு—மாதர்
மலைக்குடியூர் வாழும் வரதனே செல்வ
நிலைக்கும் படியருள்செய் நீ (726)

## திருக்கிழியனூர் மதனபுரம்.

முந்து மணவரையின் முந்துதமிழ்ச் சுந்தரர்முன்
வந்துதடுத் தாட்கொண்ட வள்ளலே—யெந்தை
கிழியனூ ராதிபனே கேண்முகிலே நின்று
ளிழிவினேன் பாடவருளே (727)

## திருப்பாலீசுரம்.

வண்ணவிடை மீதேறு மாதேவா செல்வமிக
நண்ணவிடை பண்ணுகரு ணாகரனே—விண்ணுலகிற்
றேற்றுதிருப் பாலீ சுரதேவ தேவனே
யேற்றுதிருப் பாமாலைக் கே (728)

## திருக்கோடீசுரம்.

கோலமதி மேவுசடைக் கோபால வாரிதிசூழ்
தாலமதி லெற்குநிதி தந்தருள்வாய்—சீலமிகு
கோடீ சுரமெனப்பேர் கொண்டநக ருக்கரசே
நாடீ யெனக்கிந்த நாள் (729)

## திருவிளத்தோட்டி.

எட்டுத்திக் குக்கு ளிருக்குஞ் சராசரங்க
ளொட்டுக்குந் தான்வளர்ப்போ யோதுமெனை—மட்டுந்
திருவிளத் தோட்டியில்வாழ் சிற்பரனே செல்வப்
பொருளருளிக் காவாய் புகல் (730)

## திருஉருத்திரகோடி.

ஏற்பணியுந் தேவேநீ யெவ்வுயிரை யும்புரக்குந்
தற்பரனு மென்னைமட்டுந் தள்ளிவிட்டாற்—பொற்பா
ருருத்திரகோ டிக்கரசே யூழ்வினையைப் போக்கிக்
கருத்திரங்கிக் காப்பவர்யார் காண் (731)

## திருநரிக்குடி பிரமபுரி.

யாதி மதியும் படவரவு கொன்றை தும்பை
சோதிபறு கும்புனைந்த சுந்தரனே—போத
நரிக்குடிக் கண்வளரு நாதாசெல் வத்திற்
சரிக்கும் படிக்கருணி தா (732)

## திருப்பத்திரேசுரம் திருப்பத்தூர்.

எந்தாயிச் சென்மமெடுத்ததனு லென்னபலன்
றந்தாய்போ தும்போதுஞ் சங்கரனே—முந்தாய்
திருப்பத்தி ரேசுரம்வாழ் தேவாபின் னோர்தாய்
கருப்பத்தி ராமலெனைக் கா (733)

## திருத்தரங்கம் பாடிசயிலபுரி.

நாலம் புகழ்சுகுண சங்கரத யாநிதியே
சீலம் பெருவரத சின்மயனே—கோலத்
தரங்கம்பா டிக்கணமர் தற்பரனே யெற்கு
வரங்கனிவ தாயருள வா (734)

## திருமகிழேசுரம்.

விடமிட றுனசிவ வித்தகனே மன்று
ளடமிடவ லானந்த நாதா—தடவயல்சூழ்
தூயமகி ழேசுரம்வாழ் சுந்தரனே யெற்கருளி
நேயமகி ழீசுரநீ தா (735)

## திருஆய்ப்பாடிகணிகைபுரம்.

முப்புரத்தை யுந்தித்து மூவுலகத் துஞ்சிறந்த
வெப்புரத்தை யுங்காக்கு மேந்தலே—செப்பு
மலக்கணக லும்படியா ளாய்ப்பாடி யானே
யிலக்கணமாப் பாடவரு மீ (736)

## திருவரிச்சிகுடிஆதியூர்.

செந்தமிழ் பாடுகின்ற செல்வரைச் சித்தமதில்
வந்தடிமை கொண்டாளும் வள்ளலே—நந்தணியுங்
கொலா வரிச்சி குடிநகரை யாளுமானு
கூலா வெனையடிமை கொள் (737)

## திருப்பாற்குளம்.

அன்னப்புள் ளாறு மரியு மறி யானைமனத்
துன்னப் பலனுதவு முத்தமனே—மன்னுந்
திருப்பாற் குளத்தூர்வாழ் தேவனையே வாழ்த்தா
திருப்பார்க்குச் சேருமி டர் (738)

## திருக்குளம் சத்திரம்.

பட்டிகட்டுக் கோடாரி பாண்டியன்போர்க் கேய்ந்தபன்றிக்
குட்டிகட்குப் பால்கொடுத்த கொண்டலே—கட்டித்
திருக்குளமாச் சத்திரம்வாழ் தேவாநீ யெற்குத்
திருக்குளத்தை மாற்றியருள் செய் (739)

## திருவளைக்குளம்.

மடபதி கட்டியருண் மாணிகளை யென்றும்
வடபதியா ளுக்குஞ்சி மானே—தடஞ்சார்
திருவளைக்கு ளத்தூர்வாழ் தேவாபின் னோர்தாய்
கருவளைக்குண் மேவாது கா (740)

## திருக்கஞ்சாறு.

தேன்கூடஞ் சாருந் திகழ்தருமொவ் வோர்தருவும்
வான்கூடஞ் சார வளங்காட்டு—நான்கூர்
திருக்கஞ்சா றென்னுமயர் சீரராய் வெள்ச
மருக்கஞ்சா தேயிருக்க வை (741)

## திருவெள்ளாறு.

அந்தாமனமே யறிவில்லை யாவு னக்கே
யிந்தா நினைத்ததெலா மெய்துமே—தந்தா
விரிகாலம் போக்காமல் வெள்ளாரு ரானைத்
திரிகால முந்துதி செய் (742)

## திருத்தெள்ளாறு.

ஆறு முகத்தானே யைய்ந்து முகத்தானே
யாறுமுகத் தானையரு ளாதிபனே—கூறு
திருத்தெள்ளா ருக்கரசே செல்வத்தில் வைத்தே
¶ நிருத்தெள்ளா தென்னையருு ளீ (743)

---

¶ நிருத்த-நடனத்தையுடையவனே. நிருத்தன்ணு இனிமுதி அகரங்கெட்டது.

## திருநாலாறு.

மாதவரைக் காத்தானை மாதவறைத் தீர்த்தானை
மாதவரை மேருவா வைத்தானை—வேதத்
திருநாலா றூரானைச் சித்தமே வாழ்த்தி
யொருநாளு நீங்கா துரை (744)

## திருக்கோட்டுக்காடு.

காடென்று நாடென்றுங் கன்னியரென் றுங்கனத்த
மாடென்று மாடென்றும் வாடுநெஞ்சே—நீடு
திருக்கோட்டங் காட்டானைச் சிந்தையில்வைத் தேத்து
கருக்கோட்டா மற்காப்பன் காண் (745)

## திருயேனங்குடி.

நடக்குய்யா கத்திருந்த நண்பனுக்காக் கள்ளும்
விடக்குஞ் சுமந்துவந்த மேலாந்—திடக்கருணை
யேனங் குடியானுண் டென்றுதினம் போற்றினான்
வானங் குடியா வரும் (746)

## திருக்கருவூர்.

தொண்டன்பு செய்ததவத் தூயபரி சுத்தமிரு
கண்டன் மகனையன்று காத்தவனே—துண்டமதி
வாகா திருக்கருவூர் வந்தவா சோதிக்க
லாகா தினியெனவந் தாள் (747)

## திருவிளாகம்.

பஞ்சாக் கரஞ்செபிக்கும் பத்தர்பாற் பத்திசெய்த
யஞ்சாக் கரமுண்ட வண்ணலை—நெஞ்சாரச்
சேமத் திருந்துந் திருவிளா கத்தரனை
நேமத் திருந்துவாய் நீ (748)

## திருப்பிரய்பலூர் பேரையூர்.

பாதலமு மீதலமும் பைம்புயல்மே வுங்கடல்சூழ்
பூதலமும் போற்றும் புனிதனே—நீதப்
பிரம்பலூர் தன்னிலமர் பிஞ்ஞகனே யெற்கு
வரம்பலனா ருயிரந்தா வா (749)

## திருயாழ்ப்பாணவூர் சந்தையூர்.

அம்புவே யீன்ற வரனே யெனையாள்வாய்
சம்புவே ஞானத் தயாபரனே—சம்ப்ரமஞ்சேர்
யாழ்ப்பாண மென்னுநக ராதிபா நன்னடியார்க்
கூழ்ப்பா வினைத்தொலைக்க வுன். (750)

## திருத்தில்லையம்பூர் தேரூர்.

வாவா சிறியேன் மனக்கவலை தீர்த்தருள் செய்
தேவா சிவாகருணைத் தேசிகனே—பூவார்
திருத்தில்லை யம்பூர்வாழ் சிற்பரனே யென்மேற்
கருத்தில்லை யோவின்னங் கா. (751)

## திருநடுஊர் அவளியூர்.

நீறணிந்த மேனி நிமலா வரோதயனே
யாறணிந்த வேணி யமலனே—பேறணிந்த
சந்ததஞ்செய் சூழுநடார்த் தற்பரனே யென்கலியை
வந்ததஞ்செய் தென்றனையாள் வாய். (752)

## திருநல்லத்தகுடி.

நானோர்விண் ணப்ப நவிலுகிறேன் கேண்மனநீ
தானோ ருறுதியுடன் ழுனிருந்தால்—வானோர்
திருநல்லத் தங்குடிவாழ் தேவனே வந்து
தருநல்லத் தம்பெரிதுந் தான். (753)

## திருநல்லீசுரம்.

போதமறை யாவுமுணர் பூசுரர்கண் முப்போதும்
வேதமறை சத்த மிகமுழக்கு—நாதமிகு
நல்லீச் சுரத்திலமர் நாதனே யென்றனையாள்
வல்லீச் சுரதேவா வா. (754)

## திருநல்லாடை.

கமலன் சிரமரிந்த கண்ணுதலே வேத
விமலனே நாகமணி வேணி—யமலனே
நல்லாடை யம்பதிவாழ் நாதநா மகிழ்ந்தருள்செய்
வில்லாடை யாபரண மே. (755)

## திருநரிக்குடி வீரபுரம்.

இந்திரன்செய் வில்லினடி யேந்துமுடி யின்மீது
சந்திரனை யும்புனைந்த தற்பரனே—விந்தையுடன்
கொந்தாயுஞ் சோலை குலவு நரிக்குடிவா
ழெந்தா யுவந்தருள்வந் தே (756)

## திருநல்லூர்.

முந்தந் தகனேர் முனிமகன்மார்க் கண்டனுக்கா
வந்தந் தகனை வதைத்தவா—வந்தமறை
போற்றுதிரு நல்லூர்வாழ் புங்கவனே நாயேற்குச்
சாற்றுதிரு நல்வாழ்வு தா (757)

## திருநன்னிலக்குடி.

தண்ட தரனைவென்ற தற்பரா கூடலினிற்
குண்டோ தரனையாட் கொண்டவா—விண்டார்
திருநன் னிலக்குடிவாழ் தேவாநீ யெற்கே
யொருநன் னிலையருள்வந் து (758)

## திருநருவுளி.

சீதமதி சூடுஞ் செழுஞ்சுடரே நாயேற்குப்
போதமதி தந்தவர புண்ணியனே—நீத
நருவுளியெ னும்பதிவாழ் நக்கனே யோர்தாய்க்
கருவுளினி மேவாது கா (759)

## திருநல்சேறி.

பிச்சரவந் தானகலப் பேணும் பராபரனே
நச்சரவந் தானணிந்த நாதனே—பிச்சகஞ்சோ
னற்சேரி யென்னு நகரிலர சாண்முதலே
பொற்சே ரினிமை புகல் (760)

## திருநடலீசுரம்.

நின்மோகங் கொண்டுளத்தி னித்தம் வருந்துமினு
டன்மோகந் தீரவழி சாற்றுவாய்—நன்மா
நடலீ சுரத்திலமர் நாதாநட் டாற்றில்
† விடலீ வரங்கண் மிக (761)

† விடல்-விடாதே.

## திருத்திம் முசுடி.

வன்ன விடையானே மான்றோ லுடையானே
யென்னவிடை நாயேற் கியம்பிடினு—மன்னவிடை
செய்யனே கைக்கொள்வென் றிம்மு குடியிலம
ரையனே யென்னையுவந் தாள் (762)

## திருநரியூர் சிவகிரி.

நேசானு போகந் தெரியாத மூடனேற்கு
நேசானு பூதி நிலைமையரு—ளீசா
நரியனூ ராதிபனே நானுன்னைச் சேர்ந்தே
னரியயன்கா ணாத வரா (763)

## திருநடுக்காவேரி.

காவலனே ஞானக் கடலமுதே சங்கத்தோர்
பாவலனே யென்றனையாள் பண்ணவனே—பூவி
னடுக்காவே ரிக்கரசே நாதாசெவ் வேணி
யடுக்கா ரிதழியழ கா (764)

## திருக்காவேசுரம்.

இனியனே லோபிகளுக் கெட்டாம னின்ற
தனியனே யெற்கருடா யாளா—புனிதமிகு
காவே சுரத்திலமர் கத்தனே தில்லைவளர்
கோவே சுரர்குரு வே (765)

## திருநகரி.

கனமே பெறுவாய் கனகம் பெறுவாய்
தினமே மறவாதே சிந்தை—யினமே
நகரிமுத லைப்பரம நாதனையர்ச் சிப்பாய்
யகரமுத லைந்தெழுத்தா லே (766)

## திருநாங்குடி.

நாகரு மெய்யான நற்றவரு நன்குவிடா
யோகருங் கண்டறியா வுத்தமனைக்—காகமுட
னன்றமுத ணங்குடிவா முத்தனை யேநாடு
வொன்றமுத லைந்து மனமே யும் (767)

## திருநீடாமங்கலம் மங்கையூர்.

சோதியா தேகொடிய துன்மார்க்க ஞங்கலியன்
வாதியா தென்னைநீ வந்தாள்வா—யாதியே
மானீடா மங்கலம்வாழ் வள்ளலே நிற்கேழை
யானீடா மங்கலந்தந் தாள். (768)

## திருநீலக்குடி.

ஆதியா யந்தமா யாவுமாய் நின்றருள்செய்
சோதியா நின்ற சுடரொளியே—கோதிலா
நீலக் குடிநகர்வாழ் நிமலனே செல்வமருள்
சாலக் குடிவளரத் தான். (769)

## திருநீலவழி மந்திரகிரி.

மன்னர்க் கினியனிதி மாலழகை யம்பதிவாழ்
பொன்னர்க் கினியபரி பூரணனே—நன்னலஞ்சேர்
நீலவழி யென்னுநகர் நின்மலநி ராமயமே
§ சாலவழி யாதநிதி தா. (770)

## திருநெடுவாயல்.

விண்டங் கறியானே விள்ளற் கரியானே
கண்டங் கரியானே காரணனே—மண்டு
நெடுவாய லம்பதிவாழ் நீதா கலியாங்
கடுவாயைப் போக்கியெனைக் கா. (771)

## திருநெடும்பூர்.

இந்நாளி ஞன்படும்பா டித்தனையு நீதீர்த்தே
யென்னாளுஞ் செல்வம்வளர்ந் தேறவே—மின்னார்
திருநெடும்பூர் வாழ்ந்தருள்செய் சின்மயனே யென்பால்
வருநெடும்பூர் வவ்வினையை மாட்டு. (772)

## திருக்கணபதியக்கிராரம் சம்புரீசுரம்.

போற்றுமனத் துன்னைப் பொருத்தி யனுதினமுஞ்
சாற்று மடியேன் தமிழ்க்குகந்து—யேற்றுநிதி
காருலவுஞ் சோலைக் கணபதியக் ராரத்தோய்
சீரும் கனதனமுஞ் செய். (773)

§ சாலவென்பது தாவென்பதனோடு பொருந்தும்.

## திருக்கண்ட மங்கலம்.

பொருளுங் கனகமணி பூடணமற் றெல்லா
மருளுமென்று நின்று ளடுத்தே—னிருளகலக்
கண்டமங்க லத்திலமர் கத்தனே நாயடியேன்
விண்டமங்க லக்கவியா மே. (774)

## திருக்கண் ணூர்.

செல்வியருள் செம்பொற் றிரவியமு மென்மேலுங்
கல்வியருள் வாக்குங் களித்துதவு—சொல்விளங்கு
மம்புலிய ணிந்த வரனேகண் ணூர்க்கரசே
வெம்புலிய தாமிடியை வீழ்த்து. (775)

## திருக்கன் றூப்பூர்.

தண்சுமந்த வாயா டுகுவந்திக் காவாகி
மண்சுமந்த நற்கருணை வள்ளமே—பண்சுமந்த
கன்றூப்பூ ரானே கடையே னுனைக்காணல்
குன்றூப்பூர் வந்தின் குறை. (776)

## திருவிளை யான்குடி.

வெள்ளைவிடை யேறி விரைவாக வந்துகந்து
பிள்ளையெனை யாதரித்தாள் பெம்மானே—தள்ளாதே
யேதங் களைந்த விளையான் குடியுவந்த
வேதங் கடந்தசிவ மே. (777)

## திருவீசன் குடி.

போற்றுமுனை யல்லாற் புகழே ழொருவரையுஞ்
சாற்றுபல செல்வமதைத் தந்துவினை—மாற்றுசெக
தீசன் குடிவா ழிறைவனே நின்னன்பர்
தாசன் குடிவளரத் தான். (778)

## திருவீர்சங்குடி.

அருகி விருத்தி யரியவிலை மாத
ரிருமுலையா லொத்திபெனை யேய்த்துக்—கருவிழியாம்
பாசவலைக் குள்ளாகப் பண்ணுறுதீச் சன்குடிவா
ழீசனே வந்தாள்வா யே. (779)

## திருஉடையாலூர்.

தாழிக்குண் மத்திக்குந் தண்டயிர்போ லேகலங்கி
யாழிக் குடும்பமய லைத்தவிர்த்து—வாழி
யுடையாலூ ராதிபனே யுன்னருளா லின்ன
லடையா தெனைநிதம்வந் தாள். (780)

## திருக்கழுவங்குடி.

குலையிற் கலங்கிக் குரைவாரி வீசு
மலையிற் றுரும்பா யலையா—நிலைதாக
யேயகழு வங்குடிவா ழீசனே நின்னையல்லாற்
றாயகதிக் காருதவி சொல். (781)

## திருக்கருதா மங்கலம்.

வேடர் வலைக்குள்ளே வீழ்ந்துழலு மான்போல
மூடமிடிக் குள்ளாய் முடியாதா—ளேடிதழி
பூண்டவனே யன்பர் புகழ்கருதா மங்கலம்வாழ்
தாண்டவனே வந்துசுகந் தா. (782)

## திருமுலையீசுரம்.

முன்னீர்மை மால்கடைகான் முந்திவரு மாலமதைத்
தன்னீர்மை யாலுண்ட தற்பரனே—யென்னை
முலையீ சுரப்பதிவாழ் மூர்த்தியே வேணிக்
கலையீ சுரதேவா கா. (783)

## திருநல்லூர் நல்லீசுரம் முலையீசுரம்.

மந்தரநே ரம்புயத்து வள்ளலே மெய்ஞ்ஞான
சுந்தரனே ஞானச் சுடரொளியே—விந்தைமிகு
நல்லூர்நல் லீசுரத்தோய் நற்புயத்தின் மேருவாம்
வில்லூர்நல் லீசுரதே வே (784)

## திருமேலைப்பறியலூர் பொன்னூர்.

வாருலவுந் தில்லையிலே மாகாளி யம்மையுட
சீருலவு நன்னடஞ்செய் தேவனே—தாருலவு
மேலைப் பரியலூர் வித்தகனே யென்றனையாள்
காலைப் பரிதியழ கா (785)

## திருத்தரணீசுரம் சந்திரபுரம்.

மாப்பிட்டுக் காசைகொண்டு மண்சுமந்த வானாயேன்
கூப்பிட்டுச் சொல்வதையுட் கொள்வாய்மால் *பூப்பிட்டாய்
தக்கதர ணீச்சுரம்வாழ் சாமி தயைவைத்தாண்
மிக்கதர ணிக்கொருதே வே (786)

## திருப்புளியங்குடி.

வாசனே யன்புவிசு வாசனே பொன்மதிதன்
னேசனே நாயேனை நீயாள்வாய்—பேசுதிருப்
பொன்னுலவு தூவி புளியங் குடிக்கரசே
தென்னுலவு நன்னிதிதந் தே (787)

## திருப்புலவனூர்.

தேசில்லா லோபிகண்மேற் செந்தமிழைச் சொல்லாதாண்
மாசில்லா ஞான மயேசுரனே—நேசப்
புலவனூர் தன்னிலமர் புண்ணியனே வாசக்
கலவைசேர் சந்தபுயா கா (788)

## திருப்புத்தூர் நிலைக்கோட்டை.

பாடற் கரியானே பார்த்தற் கரியானே
நாடற் கரியானே நாதனே—நீடு
திருப்புத்தூ ருக்கரசே செல்வமிகத் தந்தாள்
கருப்புத்தூர் போலினிப்போய் கா (789)

## திருச்செம்முகுடி சூடியூர்.

தப்பா துணையேநான் றஞ்சமென வந்தடுத்தேன்
னப்பா வெனைக்கைவிட லாகாதே—யிப்பாரிற்
றேனின் பொழில்சூழுஞ் செம்முக் குடிக்கரசே
யானின் குடியருளை யா (790)

## திருச்சொத்தைகுடி சோமேசம்.

செப்ப முடியாத தெள்ளமுதம் போற்கனிந்தே
யப்ப வடியனையின் றுள்வாயே—யெப்போதுந்
சொன்னந் திகழ்மதில்சூழ் சொத்தைகுடி யாதிபனே
வன்னந்தி மீதினில்வா (791)

---

*பூப்பிட்டு—பூமியைப்பிளந்து

## திருமல்லேசுரம்.

சுந்தரனே காலன்பாற் றேலாச் செயாதிபனே
மந்தரபு யஞ்சேர் வரோதயனே—சந்ததமு
நாகைமல் லேசுரம்வாழ் நாதனே யென்னையருள்
வாகைமல் லீசுரதே வா (792)

## திருமாயூரகாசி பேசுரம்.

முன்னயனு மாலு முதுமறையுங் காணாத
நன்னயசொ ரூபபர நாயகனே—யென்னையரு
ளாடுரு மாயூர நற்காசி பேசுரம்வாழ்
மாடுருந் தேவபர மா (793)

## திருமாயூரகொருநாடு வன்னியூர்.

தேடும் படவரவந் திர்த்துமையை மாமணஞ்செய்
தாடும் படவரவத் தையணிந்து—நீடுபுகழ்க்
கோமான்மா யூரங் கொருநாட்டை யாளவந்த
சீமான் றுதியுளமே செய் (794)

## திருவள்ளியூர் கந்தபுரம்.

முந்தசுர ரைக்காய்ந்து முப்புரத்தைப் பார்த்துநகை
தந்தசுர ரைக்காய்ந்த தற்பரனைச்—சிந்தையே
தேனோர்பா கத்தனையுஞ் சேர்த்தமொழி வள்ளியூர்
மானோர்பா கத்தனையே வாழ்த்து (795)

## திருயிந்தூர் மதனபுரி.

உத்தமனைச் செஞ்சடையி லோர்மதியுள் ளோர்சிறிது
வைத்தமனை யெந்நாளும் வாழ்த்துநெஞ்சே—யித்தலத்தி
லிந்தூருக் கோர்திலக மென்னவந்தா னியறிவாய்
நந்தூரும் பொற்குழைநா தன் (796)

## திருச்சித்தக் காடுசித்தனூர்.

எள்ளளவுங் கள்ள மிருதயத்தில் வையாம
லுள்ளமே யானென் னுரைப்பக்கேள்—வள்ளலெங்கண்
மாசித்தக் காடென்னு மாதலத்துக் கோரரசைப்
பூசித்தக் கால்வருஞ்செம் பொன் (797)

## திருமுனீசுரம் யோகனூர்.

மூலப் பொருளே முதற்பொருளே முத்தொழிற்குஞ்
சீலப் பொருளே சிவாசிவா—ஞாலத்திற்
சீரார் முனீசுரம்வாழ் சிற்பரமே நாயேற்குத்
தாரார் பெருஞ்செல்வந் தா. (798)

## திருநாகை அயிலேசுரம்

புகைமிக வேயப் புரமெரித்த தேவா
பகைமிடியை யோட்டும் படிவா—சிகையுலவு
நாகையயி லேசுரம்வாழ் நாதாந்த மெய்ப்பொருளே
வாகையயி லேயுகந்த வா. (799)

## திருஆறை மேற்றளி.

தாயெனக்கு வேறுதவி தானில்லை யாதலினு
னீயெனக்கு வேண்டு நிதிகொடுப்பாய்—தூய
திருவாறை மேற்றளிவாழ் சிற்பரமே யானுந்
தருவாரைத் தேடாது தான் (800)

## திருமா தானம்.

சீரரவிந் தம்புனையுந் தேவன் சிரமறிந்தே
யாரரவிந் தம்புனையு மாதிபனே—யேரார்
திருமாதா னப்பதிவாழ் சிற்பரமே வெற்புத்
தருமாதா சேரும்வர தா. (801)

## திருயிடை தானம்.

சடையானே யென்னைச் சடையானே வெள்ளை
விடையானே மெய்ஞ்ஞான வித்தே—புடைசூழ்
திருவிடைத்தா னத்திறைவா சென்றினியா னோர்தாய்
கருவிடைத்தான் மேவாது கா (802)

## திருநாற்றுணம்.

நாளுமுயி ரெண்பத்து நான்கிலக்க மும்மகிழ
வாளுந் தயாளவர தாதிபனே—நீளுதிரு
மானுற்று னப்பதியில் வாழ்வோய் சொடியகலி
தானுற்ற தோடவரந் தா (803)

### திருகாறை மடல்தருமாபுரி.

சன்னிதியில் வந்துனையே நான்கண் டடிபணிந்தே
னன்னிதிதந் தென்றனையா ளுதனே—பொன்னிற்
கணியாதார் வாழுமுயர் காறைமட லானைப்
பணியாதார்க் கேது பலன். (804)

### திருப்பாலூர் பசுபதீசுரம்.

பூகமடல் கீறிவிண்ணிற் போய்வாளை மீன்றிரும்பி
யாகமகிழ் வாகவரு மம்பணைசூழ்—யோகத்
திருப்பாலூ ராயெற்குச் செல்வமிகத் தந்தாள்
தருப்பாலூ ரானைநிகர் தான் (805)

### திருவள்ளலாரகரம் வன்னியூர்.

பொற்குதிரைக் கெய்தும் புகழ்வாத வூரார்க்குச்
சற்குருவாய் வந்துபதே சம்புரிந்தோ—யெற்குத்
திருவள்ள லாரகரச் சீர்நகர்வாழ் தேவா
தருவள்ள லாகநிதி தா. (806)

### திருநயினார்தீவு நாதனார்.

கதியடியார்க் கீயுங் கருணையனே துய்ய
நதியணிந்த செய்யசடை நாதா—துதிசேர்
நயினார்தீ வுக்கிறைவா நாயேனைப் பைநேர்
$ குயினார் மயறவிர்த்தாட் கொள் (807)

மகதநாடு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகநாடு 7-க்கு ஸ்தம் 807 கவி 808.

## தொண்ட நாடு.

### திருவேகம்பம் காஞ்சிபுரம்.

மச்சர் முதலான மன்னரெலாம் போற்றிசெய
நச்சரவம் பூண்டகரு ணாகரனே—யிச்சையுடன்
சூலத்தைக் கொண்டவனே தூயதிருக் காஞ்சியப்பா
வாலத்தை யுண்டவனே யாள். (808)

---

$ குய்.அல்குல்.

## திருக்கச்சி மேற்றளி.

அன்பர்க் குறுவினைகள் யாவுமணு காதகற்றி
நன்பர்க் கருள்புரியு நக்கனே—துன்பகற்றி
விந்தை திருக்கச்சி மேற்றளியா மாநகர்வா
ழெந்தையே யெற்கருளீ (809)

## திருக்கச்சிவோன காந்தன்றளி.

காணாற் கரிதான கத்தனே கூடலிலே
பாணற் குதவிசெய்த பண்ணவனே—வானரைக்
காக்குந் திருவோண காந்தன் றளிக்கரசே
போக்குவாய் நாயேன் புரை (810)

## திருக்கச்சிய நேகதங்காவதம்.

சித்த னெனும்பெயர்கொ டேவாமெய் யாண்டவனே
பித்தனெனு ஞானப் பெருமானே—வித்தகஞ்சேர்
கர்த்தா வநேகதங் காவத மாநகர்வாழ்
நிர்த்தா வெனையாள்வாய் நீ. (811)

## திருக்கச்சி நெறிக்காறைக்காடு.

கும்பமுலை யாளுமைசேர் குன்றவில்லி யேநீயே
தம்பமுலை யாதருணீ தந்தாள்வாய்—கொம்பவிர்கா
னேயதிருக்கச்சி நெறிக்காறைக் காட்டரசே
யாயதிருக் கண்ணுதற்றே வா. (812)

## திருக்குரங்கணி முட்டம்.

நச்சணிந்த கண்டத்து நாதாபொற் பார்த்திலகு
கச்சணிந்த மாதுலையாள் காதலனே—யிச்சைக்
குரங்கணிமுட் டத்தமருங் கோமானே யென்பா
யிரங்குவா யன்புவைத் தே. (813)

## திருமாசறல்.

பூசிதனே ஞானப் புனிதனே வேதாந்த
தேசிகனே நின்மலசி காமணியே—பேசுந்
திருமா சறற்பதிவாழ் சின்மயனே யெற்கு
வருமா சறக்கிருபை வை. (814)

## திருவோத்தூர்.

பாலவர்க்க மானமொழிப் பண்மறையின் றன்பொருளை
நால்வர்க்குச் சொன்னசிவ நாயகனே—மேல்வாய்மை
யோங்குபுகழ் மேருதிரு வோத்தூர்ப் பரத்துவமே
யிங்குதிருச் செல்வமரு ளே. (815)

## திருப்பனங் காட்டூர்.

மெய்யா வரமெனக்கு வித்தையுட னேயருளித்
துய்யா திடமதியுஞ் சொல்லுவா—யையயா
பரிதிமதி தோயும் பனங்காட்டூர் வித்தே
அரியபர னேயென்னை யாள். (816)

## திருவல்லம்.

வில்லும் பணியுநநன் வீரமா காளியுட
னல்லும் பகலுநட மாடியவா—தொல்லுலகிற்
பாலந் தனிலொருகட் பண்ணவா பண்புடனித்
தாலந் தனிலென்னைவந் தாள். (817)

## திருமாற்பேறு.

பாம்பணிந்த நாதா பரனே பரம்பொருளே
தாம்பதுமத் தாளிணையைத் தந்தாள்வாய்—விம்பகற்று
வல்லம் புகழ்படைத்த மாற்பேர் நகருக்கோர்
செல்லம் புகழ்பெறவந் தே. (818)

## திருவூறல்.

செய்க்கரிய வந்தவனே தேசிகசி காமணியே
வாய்க்கினிய பாக்யமருள் வாயேநீ—மாய்க்கரிய
ஆறற் பதியமர்ந்த வுத்தமனே தற்பரனே
தேறற் கரியசிவ மே. (819)

## திருஇலம்பை யங்கோட்டூர்.

எத்திசையும் போற்று மிறையவா வென்றனக்குப்
பத்தியுட னேத்தும் படியருள்வாய்—நித்தந்
திருவிலம்பை யங்கோட்டூர்த் தேவா வரநா
வொருவிலன்பை வைத்தா ரேவாய். (820)

## திருவிற்கோலம்.

அஞ்சக் கரத்தானு மாரணனுந் தேடரிய
பஞ்சக் கரத்தாநின் பாலனையாள்—வஞ்சமிலா
மிக்கதிரு விற்கோல மெய்ப்பதிவா ழுந்தேவா
தக்கதிரு வாழ்வருளித் தான். (821)

## திருக்கள்ளம்.

ஆண்டவனே தொண்டர்க் கருண்ஞான னேதில்லைத்
தாண்டவனே யென்னையென்றுந் தாளுவா—னீண்டபுகழ்
மிக்கதிருக் கள்ளமெனு மெய்த்தலம்வாழ் தேவாவெண்
மைக்கதிரா ருஞ்சடையாய் வா. (822)

## திருவாலங்காடு.

நீற்றம் பொருந்துசிவ நின்மலநி ராமயனே
போற்றவருந் தொண்டர் புனிதனே—தேற்றவரு
மாலங்கா டுற்ற வரனே யருட்பரனே
சீலங்க ளீந்தருளச் செய் (823)

## திருப்பாசூர்.

ஆதியந்த மாகநின்ற வண்ணலே யம்புவியிற்
சோதியந்த மாகநின்று தோன்றலே—கோதின்
றிருப்பாசூ ரத்தனே தேவனே வந்தேன்
விருப்பான தின்றருள்வாய் மேல் (824)

## திருவெண் பாக்கம்.

நரியைப் பரியாக்கி நற்பாண் டியற்கி
பரியைநரி யாக்கும் பரமே—வுரிய
திருவெண்பாக் கத்திலுறை தேவனே செல்வந்
தருவெண்பாப் பாடவரந் தா (825)

## திருவலி தாயம்.

தன்னைநிக ரில்லாத தற்பரத யாபரனே
முன்னைமிரு கண்டனையாண் முக்கியம்போ—லென்னைத்
திருவலிதா யத்திலுறை தேவா கலியால்
வருவலிதா னீக்கியருள் வாய் (856)

## திருவடமுல்லை வாயல்.

கண்ணப்ப னெச்சிலுண்ட கத்தனே செஞ்சடைமேல்
விண்ணப்பங் கேறுசெய வித்தகனே—மண்ணதனின்
முந்தையே யானவட முல்லைவா யிற்கரசே
யெந்தையே வந்தா ளெனை (827)

## திருவேற்காடு.

விட்டா லெளியனுக்கு வேறுதவு வாறுண்டோ
கட்டாய மாகவுந்து காத்தருள்வாய்—மட்டாரும்
வேற்காடு மேவியருள் வித்தகனே மெய்ப்பொருளே
யேற்கா விடம்புசித் தாயே (828)

## திருவொற்றியூர்.

அன்றுசம ணர்செலுத்து மானைதனைக் கொன்றுளக்கித்
துன்றுதமிழ் மாரனுக்குத் துன்பகற்றி—வென்றதுபோற்
செஞ்சடையா மிக்கதிருவொற்றி யூராயுள்
ளஞ்சடையா தென்னையும்வந் தாள் (829)

## திருவான் மியூர்.

தக்கன் றனைவதைத்த சங்கரச தாசிவமே
செக்க மலப்பாத சேவையருண்—மிக்கமதி
வல்லபுகழ் சேருதிரு வான்மியூ ருக்கரசே
நல்லபெருஞ் செல்வமினி நல்கு (830)

## திருக்கச்சூராலக் கோயில்.

பார்மருவும் பாணனுக்காப் பாடு மிடரதனிற்
கார்மருவு செய்ய கடவுளே—சீரருள்வா
யான திருக்கச்சூ ராலக்கோ விற்பதிவாழ்
தீனதயா ளப்பரதே வா (831)

## திருமயிலை மைலாப்பூர்.

அன்பரையா ணின்னிருதா ளம்புயத்தை யான்பணிந்
தின்பமுறச் செய்தருண்ம கேச்சுரனே—முன்பாய்த்
திருமயிலாப் பூரில்வருந் தேவாநீ யென்மே
லொருமையிலார் செய்வினையை யோட்டு (832)

## திருஇடைச்சுரம்.

சேன்மோக மானவிழிச் சேயிழையார்க் குட்சிறந்த
மான்மோ கிஸிக்காசை வைத்தவா—தேன்போற்
திருவிடைச்சு ரப்பதிவாழ் தேவா வினியோர்
கருவிடைச்செ னிக்காது கா (833)

## திருக்கழுக் குன்றம்.

அம்பலவா ஞானத் ததிபதியே விண்ணவர்க்கா
வம்பலைவா யானநஞ்சை யன்றுண்ட—சம்புவே
கார்பெருகுஞ் சோலைக் கழுக்குன்றத் தாயருள்வாய்
சீர்பெருகும் வாழ்வுமர சே (834)

## திரு அச்சிரு பாக்கம்.

அன்பாகத் தொண்டர்கூ மாதிபனே யென்றனுளத்
தின்பாகச் செல்வமிருந் தேறவர—முன்பாக
வச்சிருபாக் கத்திலுறை யையனே தூய்யனே
§நச்சிருக்குங் கண்டனே நல்கு (835)

## திருவக்கரை.

சூலத்தைக் கொண்டவனே சுந்தரனே பாற்கடலி
லாலத்தை யுண்டவனே யாண்டவனே—கோலத்
திருவக் கரைப்பதிவாழ் தேவாகா வென்னை
மருவக் கரையோடு வா (836)

## திருஅரசிலி ஒழுந்தியார்பட்டி,

ஆதார நீயே யலாதொருவர் வேறிலையே
சீதார விந்தமலர்ச் சேவையருள்—போதா
வரசிலியில் வாழு மழகா குழகா
பரசிலினி தானவனே பார் (837)

## திருஇரும்பை மாகாளம்.

நக்கனே யன்னநடை நங்கைபங்கா வென்றுயரை
யிக்கணமே மாற்றியரு ளீச்சுரனே—முக்கட்
டிருவிரும்பை மாகாளச் சீர்நகரில் வாழுந்
தருவிரும் பைசுவர்யந் தா (838)

§நச்சு—நஞ்சு (விகாரமொழி)

## திருச்சீர்காளத்தி ஸ்ரீ-காளத்தி.

தாளத்தை யொத்த தனமு மிலகியகை
வாளத்தை நேர்விழியு மைபாகா—நாளுநல
விட்டானந் தம்பெருக வென்றுங்கா ளத்தியோய்
தட்டாமற் செல்வத்தைத் தா (839)

## திருப்புல்லூர் வட்டீசுரன்பேட்டை.

அங்கரா வேய்ந்தசடை யத்தனே யென்றனையாள்
சங்கரா கங்கா தரப்பொருளே—யிங்கருட்கண்
பார்த்தருள்செய் புல்லூர்வாழ் பண்ணவனே நாயேனைக்
காத்தருள் வதுன்றன் கடன். (840)

## திருப்பூண்டி வில்லிவாக்கம்.

பொற்பகமே யானமறைப் புண்ணியனே யன்பரையாள்
கற்பகமே யாதிக் கடவுளே—தற்பரமாம்
விண்மணிதோய் தண்டலைசூழ் மெய்ப்பூண்டி நன்னகர்வாழ்
கண்மணியே தொண்டனெனைக் கா. (841)

## திருப்பெருமிழை குளத்தூர்.

மாகல மேவு மதியின் மடநெஞ்சே
யோநமசி வாயவென யோதியே—ஞான
நலத்திற் பெருமிழை நாதனைப் போற்று
வலத்தி லிருந்தருளு வான் (842)

## திருப்பெருமாகுடி அயனவரம்.

என்னே ரமுமுன்னை யேத்தி யிருதாண்மேற்
பன்னே ரமுந்தமிழைப் பாடினேன்—றன்னேரில்
பெம்மானே செல்வப் பெருமா குடியிலம
ரெம்மானே யாள்வா யெனை (843)

## திருப்பாளையங் கோட்டைகோயம்பேடு.

ஆகாத கல்வி யகற்றிச் சிவசமய
மாகா வியங்களையே வாழ்த்துநெஞ்சே—யாகமங்கள்
கூறுதிருப் பாளையங் கோட்டைநக ரானருளா
லேறுதிருச் செல்வமிரு மே (844)

## திருக்கருவேலங்குளம் ஆதனூர்.

வேணியனே கூற்றனைமுன் வென்றவனே மேருவைநன்
கோணியவில் லாக்கியாட் கொண்டவனே—பாணிமழு
வையனே நற்கருவே லங்குளத்தில் வாழ்முதலே
செய்யகரு வேலமருள் செய். (845)

## திருவனசகிரிமழிசை மகிஷாசுரபுரம்.

இலைகந்த மூலமுண் டேங்கிநெடுங் கானி
லலைகின்ற யோகத் தவரே—மலையாதீர்
வண்டாருஞ் சோலை வனசகிரி யான்பதத்தைக்
கண்டாலுஞ் சேர்விர் கதி. (846)

## திருப்பட்டுக்கோட்டை பூவிருந்தவல்லி.

பொன்னாசை கொண்டு புலம்பு மடநெஞ்சே
யுன்னாசை தீரநிதி யுண்டாகு—மெந்நாளும்
பங்கே ருகத்தடஞ்சூழ் பட்டுக்கோட் டைக்கணம
ரெங்கோன் றிருவருளா லே. (947)

## திருக்குத்தங்குடி மாங்காடு.

பக்குவம தாகப் பலவுமித்நின் றுலொரவல்
சிக்குமென்று மேலோர்கள் செப்புதலை—யொக்குமே
குத்தங் குடியானைக் கோதில்லா தெஞ்ஞான்றுஞ்
சித்தங் குடியாச் செயல். (848)

## திருத்தேவன்குடி நின்றவூர்.

பொருண்மை யொடுகளவு பொய்யுங் கொலையு
முருமை லருள்வா யுயர்ந்த—நறுமலர்க்காத்
தேவன் குடியானைச் சிந்தமே நின்னுளத்தில்
மாவன் குடியாக வை. (849)

## திருக்கோவிந்தவாடி திருவூர்.

ஆறு யெழும்புகடை யானைமுத லெண்பானே
னாறு பிறப்பிரை நோக்கியருண—மாறு த
கோவிந்த வாடியில்வாழ் கொண்டலே யென்றனையா
டேவிந்த வேளையில்வந் தே. (850)

## திருப்பாடலிபுரம் திருவள்ளூர்.

தவமே புரியவகை தானறியா நாயேன்
பவமே யகலவருள் பாவி—சிவமேநற்
பாடலிலே தான்சிறந்த பாடலிபு ரத்தரசே
யாடலிலே மேலான வா. (851)

## திருக்கூரனூர் நப்பாக்கம்.

கற்றறிவி லாத கசடனே யானுனு
முற்றபிள்ளை யன்றோ வுவந்தாள்வாய்—நற்றவர்வாழ்
துய்யதிருக் கூரனூர்த் தோன்றலே நாயேனைச்
செய்யதிருக் கூடுமருள் செய். (852)

## திருத்தணி தணிகாசலம்.

வாதோ வலாது மரதியோ யான்செய்
கோதோ பராமுகங் கொண்டிருந்தா—யேதோ
திருத்தணிவாழ் தேவா சிறியேனை யாளுந்
கருத்தணிவார் யாரெனக்குக் காட்டு (853)

## திருக்கூந்தலூர் விரிஞ்சிபுரம்.

வில்லா லடித்தவற்கு மெய்ப்பிரம்பாற் றொட்டவற்குங்
கல்லா லடித்தவற்குங் காட்சிதந்தாய்—சொல்லாய்
திருக்குலவுங் கூந்தலூர்த் தேவாவென் றேத்தி
யிருக்குமெனை யாளாத தென் (854)

## திருக்கோவலூர் கருட்டேபல்லே.

ஓரவரும் வாற்குருவி யோங்குபதே சந்தன்னைச்
சேரமுத்தி பெற்ற சிறப்பறிவா—யாரவே
பஞ்சறிவு னக்கிருந்தும் பார்க்கோவ லூரானே
நெஞ்சறிவாற் காணுதென்னீ (855)

## திருக்கூளையூர் இராமகிரி.

நத்தியென்ப ணிந்தசிவ நாதனரு ளாலல்லான்
முத்தியென்ப தெல்லார்க்கு முற்றுமோ—சித்தித்
திருக்கூளை யூரிலமர் தேவனையேத் தாதார்
செருக்கோர் பொருளாமோ தேர் (856)

## திருப்பொதிகை புக்க அக்கிராகாரம்.

குழவியுந் தெய்வமுங் கொண்டாடு வாரை
நழுவியக லாதென்று நாட்டும்—பழமொழிபோற்
பூசைவைத்து நாளும் பொதிகைவளர் தேவனையே
யாசைவைத்துப் போற்றுவவன் தாள். (857)

## திரு அயனீச்சுரம் கரும்பேடு.

சந்தமுழ லந்தின்று கானகத்தி லேயிருந்தே
யந்தமுழ லத்தையுண்ணு மன்புடையீர்—வந்தெருநா
ளண்டர் பணியு மயனீச் சுரத்தானைக்
கண்டார் பெறலாங் கதி (858)

## திருக்கரியமாணிக்கம் சதாசிவக்கோன்

ஆள்வாயென் றன்ற னரவிந்த மானவிரு
தாள்வாய்வந் துற்றேன் றயாபரனே—நீள்பொன்
கரியமா ணிக்கநகர்க் கண்வளருந் தேவா
மரியமா ணிக்கமெனை யாள் (859)

## திருக்காளேசுரம் செம்புலபாளையம்.

ஆத்திமலர் சூடு மரனே யரும்பொருளே
நாத்தொழுது போற்றுசெக நாதனே—மாத்திரஞ்சேர்
காளே சுரத்திலமர் கத்தனே யென்றனக்குன்
றாளே புகலாஞ் சரண் (860)

## திரு அத்தீசுரம் ஜோகுலமல்லம்

முத்தர்சூழ் ஞான முதலே நினைத்துதிசெய்
பத்தரை யாளும் பரம்பொருளே—நித்தநித்த
மம்மயிலோர் பாகம்வைத்த வத்தீச் சுரத்தானே
யிம்மையிலே செல்வமருளே (861)

## திரு ஆடகேசுரம் யடவலம்.

ஆரு மிகழ்குலத்தோ ராணலு மேலான
தேருமதி யில்லாத் தீயர்† றெனும்—பாரிற்
பரந்தாட கேசரருள் பண்ணுவா ரேலா
யிரந்தண்டஞ் செய்குவேன் யான் (862)

---

† எனினுமென்பது,எனுமெனவிகாரமாயிற்று.

## திருக்கோவந்தபுத்தூர் திருமுகிலி.

வண்டுபடி யும்மிதழி மாலையாம் பூஞ்சோலை
விண்டுபடி யும்படியாய் மேலோங்கிக்—கொண்டுதிகழ்
கோவந்த புத்தூர்வாழ் கோவே யெனையாள்வாய்
மாவந்த செல்வம் வர (863)

## திருக்கொல்லியறைப் பள்ளிபுதுக்கோட்டை.

உன்னைவந்தித் தேத்தி யுனக்கடிமை யாயிருக்கு
மென்னைவந்திங் காள்மனத்$ மில்லாதென்—னன்னியனுப்
பண்ணாதே கொல்லியறைப் பள்ளியா வேறேது
மெண்ணாதே வந்தா ளெனை (864)

## திருஅகத்தீசுரம் யகத்தியாசலம்.

மூடனத்தை யித்தையெண்ணி முன்னேனு னுநீ
நீடனத்தைத் தந்தருள்வாய் நித்தனே—தேடவருஞ்
சீரகத்தி யீச்சுரம்வாழ் சின்மயனே நின்னருளாற்
பாரகத்தி லென்றனையே பார் (865)

## திருக்கோடீசுரம் வடதில்லை.

புலியால் வருந்துகின்ற புல்வாய்போ லடியேன்
கலியால் வருந்திக் கலங்கி—மெலியாமற்
கோடீ சுரத்திலமர் கோவே யெனையாள்வாய்
நீடிய னேனுமே நீ. (866)

## திருச்சாலைக்குடிமா தரபாக்கம்.

சம்பன்னு வென்று தமிழறியார் மேற்கவிக
ளும்பன்னு தென்னையா ளும்பரனே—தம்பநீ
சாலைக் குடியிலமர் தற்பரனே யூழ்வினையா
மாலைக் குடியோட்டு வாய். (867)

## திருச்சிவப்பள்ளிகுசீரேசுவரம்.

வேமலர்க்கா ளாகாமன் மேதகுநற் செங்கமல
மாமலர்த்தாள் போற்ற வரமருள்வாய்—நேம
சிவப்பள்ளிக் கண்வளருந் தேவனே தாதா
தவப்பண்பின் மேவுவா தா. (868)

$ இல்லாத துனன்பது,றல்லாதென்விகாரமாயிற்று

## திருத்திண்டீசுரம் சத்தியவேடு

ஆன வகரமுத லைம்பத்தோ ரக்கரத்துந்
தானவனாய் நின்ற தனிப்பொருளே—ஞானமிகு
திண்டீச் சுரத்திலமர் தேவாவந் தென்றனையாள்
தண்டீச் சுரர்க்கருணீ தா. (869)

## திருச்சக்கிரேசுரம் பெரியபாளையம்

வேட்டைநாய் வாய்ப்பட்ட வெண்கவரி மான்போலுஞ்
சேட்டையுறு வன்கலிப்பாற் சேராது—தேட்டையென்றுந்
தேடும் புகழ்சேர் திருச்சக்கி ரேசுரத்தோய்
நாடும் பொருளையினி நல்கு. (870)

## திருமணிக்கிராமம் ஆரியத்துறை.

பொருந்தா ரகத்திலன்பு பூணார்மலர்ந்த
குருந்தா ரடியார் குருவா—யிருந்தார்
மருந்தா ருறையு மணிக்கிரா மத்தில்
வருந்தார் வணங்குகின்ற வர். (871)

## திருமீஞ்சூடி பொன்னேரி.

சித்தமனே கத்துத் திரியா தெனையாள்வா
யுத்தமனே வேதத் தொருபொருளே—முத்தர்சூ
மூச்சனே செல்வமீ ஞ்சூடித்தே வானபரி
சுத்தனே நீயே துணை. (872)

## திருமணர்க்கால் திருக்களம்.

விடையா னிடையான் வெருவார்க்கு நீண்ட
சடையா னெனையாளுந் தன்மை—யுடையான்
மணக்கா லெனும்பதிவாழ் மாதேவ தேவன்
குணக்கால முண்டமுதற் கோன். (873)

## திருவேலூர் இரட்டைமலை.

மாகாந்தம் போலென் மனவிரும்பை வந்திர்ப்பா
யேகாந்த வல்லியுட னெய்தியே—வாகாகச்
சந்தநமு மூவலூர் தன்னிலமர் வேயாருளைத்
தந்தருள்வ னானவ ரதா (874)

## திருக்கண்டேசுரம் பாலைவனம்.

காசினியோர் போற்றுங் கருணைப் பெருங்கடலே
மாசில்லா ஞான மணிவிளக்கே—பூசிதஞ்சேர்
கண்டே சுரத்திலமர் கத்தனே நாயேன்செய்
பண்டே சுறக்கிருபை பண் (875)

## திருத்தாரணே சுரம்காட்டாலூர்.

தண்டமிழ்வா ணர்க்குதவு தற்பரனே மிக்ககறைக்
கண்ட மிலகுமருட் கண்ணுதலே—விண்டார்
திருத்தார ணேசுரம்வாழ் தேவனே யன்பாய்க்
கருத்தார வந்தெனையே கா (876)

## திருத்திலகேசுரம் மெதவாயல்.

செப்பனே வேதச் செழுஞ்சுடரே முத்தர்சூழ்
மெய்யனே ஞானமிகு வேணியனே—வையகத்திற்
பண்ணார் பொழில்கள் பரவுதில கேசுரத்தோய்
தண்ணார் பொருளருணீ தா (877)

## திருச்சித்திரேசுரம் பஞ்செட்டி.

காரணத்தை யெல்லாங் கடந்த பரம்பொருளே
வாரணத்தை யன்றுரித்த மாதேவா—பூரணமாய்
வந்துசித்தி ரேசுரத்தில் வாழ்முதலே செல்வமிகத்
தந்துசித்தி யேறவரந் தா (878)

## திருச்சங்கபாலேசுரம் கற்குளம்.

நந்துலவு செய்யகுன்மழ நாதா விதழிமலர்க்
கொந்துலவு வேணிக் குருபரனே—சந்துகமழ்
யெவ்வனஞ்சேர் சங்கபா லேசுரனே யென்றனையாள்
செவ்வனஞ்சேர் யோகாவந் தே (879)

## திருக்காஞ்சேசுரம் சிந்தாமணீச்சுரன்கோயில்

அங்கரிநான் மாமுகனு மாரணமுங் காணரிய
சங்கரியாள் பாக தயாபரனே—துங்கவிடை
யானேகாஞ் சேசுரம்வா ழத்தனே யெவ்வுயிருந்
தானேகா யோகவர தா (880)

## திருச்சங்கரேசுரம் மேலூர்

தாலம் புகழூந தனிமறையெ லாம்பரவு
சீலம்புனிதஞ்செய் தேவனே—யாலமதை
யுண்டவனே நாளு முயர்சங்க ரேசுரமேற்
கொண்டவனே யென்றனையாட் கொள் (881)

## திருநீலேசுரம் நாயிறுபாணு

படமாடு நாகப் பணியானே மன்றி
னடமாடு மெய்ஞ்ஞான நாதா—திடமாக
நீறணிந்த மேனியனே நீலே சுரத்திலம
ராறணிந்த வேணியழ கா (882)

## திருமந்திரேசுரம் திருப்புழலி

மகுடநீள் வேணி வரனே யுயிர்க்குட்
சகுடநீ ரென்னவுறை சம்பு—புகழ்சேர்
திருமந்தி ரேசுரம்வாழ் தேவாயா னுய்ய
வொருமந் திரஞ்சொ லுவந்து (883)

## திருச்சடேசுரம் வேபூர்

சூதில்லா தேத்திவருந் தூய வடியார்க்குத்
தீதில்லாச் செல்வமருள் சின்மயனே—மீதுடலிற்
தங்கமலை யானே சடேசுரத்தில் வாழ்முதலே
யங்கமலை யாமலெனை யாள் (884)

## திருஅமுதேசுரம் பிரயபுரம்

தோலுடையாய் மூன்று தொழிலுடையாய் மெய்ஞ்ஞானப்
பாலுடையா யன்பர் பணியுடையாய்—ஞாலமகிழ்
சீரமு தேசுரம்வாழ் சிற்பரனே நாயேற்கின்
னாரமுதம் போல்வரந்தந் தாள் (885)

## திருக்குரும்பலூர் சம்பவருயநல்லூர்

திட்டமுட னும்பர்தொழுந் தேவாமெய்ஞ் ஞானமிகு
மிட்டரை யாதரிக்கு மேந்தலே—சிட்டருடன்
துங்க முடையோர் தொழுகுரும்ப லூர்க்கரசே
யங்கமுடை யோயெனைவந் தாள் (886)

## திருவானைக்கோயில் வாலீசுரம்

வாதஞ்செய் வார்கொடிய வல்வினையா னல்லோர்க்குச்
சேதஞ்செய் வாரெல்லாஞ் செய்கவென்—னீதனெஞ்சே
பாதகஞ்செய் யாதே பதியானைக் கோவிலனை
யேதகவாய் வாழ்த்தி யிரு (887)

## திருவெரணுகுளம் கோவிந்தவாடி

இங்கயற்கண் ணீனுலகி லெவ்வுயிரை யும்பயந்த
வங்கயற்கண் ணுமைபங்கா கத்தனே—தங்கி
யெரணு குளத்திலம ரேந்தலே நாகா
பரணு கிருபைக்கண் பார் (888)

## திருஆடுதுறை சோளிங்கபுரம் கடிகாசலம்

அத்தி யுரித்த வரனே யருமறைசேர்
சித்தி யுரித்தான தேவனே முத்தர்கூ
றாடுதுறை தன்னிலம ரத்தனே நாயேனுண்
ணாடு துறையனைத்து நல்கு (889)

## திருத்தொண்ணுந் துறை புலிப்பாறை

முத்தியிடத் தார்ந்த முதலே படியுதவு
சத்தியிடப் பாகமுற்ற தற்பரனே—பித்தன்யான்
றொண்ணுந் துறையிலமர் சுந்தரனே மின்னார்பா
லண்ணுந் துறையா தருள் (890)

## திருமாந்துறை சீட்டணஞ்சேரி

மாமாது நாயகனு மாநிலமெ லாம்பரவு
பாமாது நாயகனும் பார்க்கவருங்—கோமானே
மாந்துறைவா ழேந்தலே மாமலரா னென்னுளத்திற்
சேந்துறைய வாழ்வருளிச் செய் (891)

## திருஅரியலூர் மணிமங்கலம்

திங்கள்வந்து காயவுயர் தென்றற் புலிபாய
மங்களமின் னுள்கலங்கி வாடினு—ளங்கவட்க்காய்
மித்திர வையரியல் வேணியர னல்லாமற்
¶சித்திரையாற் போமோ¶செலல் (892)

¶சித்திரை-ஆடு ¶செலல்-துன்பம்

## திருச்சி கண்டீசுவரம் மணிவாக்கம்

தாயன்றிச் சேயர் தமக்கா தரவுண்டோ
நீயன்றி யாள நினைப்பவர்யார்—பேயனேற்
கேறு திருச்சிகண் டீச்சுரத்தில் வாழ்முதலே
கூறுதிருச் செல்வங் கொடு. (893)

## திருமணியீசுரம் வரதூர் பணைமணியீசுரம்

அக்குவடம் பூண்டபர மானந்த தேவனே
யிக்குவலை யம்பரவு மேந்தலே—மிக்க
பணைமணி யீச்சுரம்வாழ் பண்ணவனே பூதி
வணைமணிதந் தெனையாள் வா. (894)

## திருபற்கீசுரம் திருமாத்தூர்

வேதாந்த மீது விளையாடுஞ் சோதியே
நாதாந்த மானசிவ நாயகனே—மீதாருந்
தாழுஞ் சடையானே சாற்றுபற் கீச்சுரத்தில்
வாழுஞ் சடையோனே வா. (895)

## திருப்பளனேசுரம் எச்சூர்

காமம் பெருகுங் கசடரைச் சேராது
சேமம் பெருகவருள் செய்குவாய்—நேமப்
பளனே சுரத்திலமர் பண்ணவனே மிக்க
வளனே மிகத்தந்தாள் வா (896)

## திருகடம்பர் கோயில் கடம்பனூர்

பொன்னுரு மின்னளகைப் பூபதியோ னடியே
னென்னுரு முன்னே யிணிமறவேன்—பன்னுருங்
காசினியி லோங்குங் கடம்பூர் வளர்முதலே
தேசினிய வர்க்கருளிச் செய் (897)

## திருஅருந்ததியேசுரம் பென்னகர்

உத்தமனே ஞானத் துருவே புருவெளியே
சித்தசனை யன்றெரித்த சின்மயனே—நித்த
மருந்ததி யீச்சுரம்வா ழத்தனே யாள்
அருந்ததி தென்றனையாள் வா (898)

## திருஆனைத்தாண்டவபுரம் மரக்காணம்

உம்பர் முனிவ ருயர்தவத்தோர் பூசுரரோ
டிம்பருளார் போற்று மிறையோனே—நம்பு
கரித்தாண் டவபுரம்வாள் கத்தா கரித்தோ
றரித்தாண்ட மோனவர தா (899)

## திருத்திரிச்சடேசுரம் செய்யூர்

சொற்றகலி சூழலகிற் சுந்தரனே நின்னருளா
லுற்ற கலியஞ்சி யோடியதே—கற்றார்
வருதிரிச டேசுரம்வாழ் மாதேவா வீமன்
பொருதிரிச டாசுரனைப் போல் (900)

## திருமயிண்டீசுரம் புலிவனம்

வேத னிதம்போற்றும் வித்தகனை யேவாழ்த்திப்
பாதகங்கள் போக்கிப் பதமுற்று—ராதலாற்
தாழ்த்தசடை யானைமயிண் டீச்சுரத்தா னைக்கண்டு
வாழ்த்தாதார் வாயென்ன வாய் (901)

## திருப்பெருமுக்கல் யெதுத்துறை

வையமிசை யாவரும் வாழ்த்தும் படியாக
வுய்யநினை வான தனக்கிருந்தான்—மையனைய
நஞ்சமே முன்னுண்ட நாத னெதுத்துறையை
நெஞ்சமே நாளு நினை (902)

## திருஆலந்துறை வாயலூர் செந்தலை

வன்கலியால் வாடி வருந்ாது செல்வமொடு
நின்கழலைப் போற்று நினைவருள்வாய்—பொன்கமழுஞ்
சொல்வளஞ்சே ராலந் துறையிலமர் தற்பரனே
பல்வரந் தந்தெனைக்கண் பார் (903)

## திருத்தில்லை விளாகம் கோட்டியூர்

ஆயுமறை தேடுங்கல் லாலைவிட் டீமத்திற்
பேயுடனே யாடும் பெருமானே—தாயுடனே
தில்லைவிளா கம்புகுந்தா தேவா வெனையாள்வா
யில்லையெனு மற்கொடுக்க வே (904)

## திருப்போரூர்

எப்போதும் போலே யினியெண்ணு தேமனமே
யப்போதி யானே யணைந்தேனுற்—றப்பாது
பூதஞ்ச மானதிருப் போரூர்நா தன்வருவான்
வாதஞ்செய் யாதோடு வாய் (905)

## திருவிருச்சபாத்திரி இளையனூர்வேலூர்

போதனே வேதப் புனிதனே மெய்ஞ்ஞான
நாதனே தில்லை நடேசனே—போதத்
திருவிருச்ச பாத்திரிவாழ் சின்மயனே யெற்குத்
தருவிருக்கம் போனிதிதந் தாள் (906)

## திருப்பாண்டுரங்கம் நெடியம்

துடியா ரிடையார்தஞ் சொல்வஞ் சனைக்கு
ளடியா ரிடையா தருள்வாய்—குடியாந்
திருப்பாண்டு ரங்கமெனுஞ் சீர்நகரா யெற்கு
விருப்பாண்டு தந்தபர மே (907)

## திருததோரேணேசுரம் ஆண்டார்குப்பம்

ஏகனைமெய் யானசெக தீசனைவி ளங்குநறும்
பாகனைப சொல்லுமையாள் பாகனையே—யூகத்
திருத்தோரே ணேசுரம்வாழ் தேவனையுள் ளத்தே
கருத்தே நினைத்திருந்து காண் (908)

## திருஇரதிதேசுரம் சங்கை மங்கை

முந்தரியாள் வேணி முதலே முதற்பொருளே
சுந்தரி யாள்யோகத் தோன்றலே—சந்தமு
மென்பரவம் பூண்ட விரதே சுரத்தரசே
யன்பரவந் தீர்த்தவனே யாள் (909)

## திருச்சவனேசுரம் நல்லக்கம்பம்

அப்பாரும் வேணி யரனைமன மேநிதமு
மிப்பாருள் ளோர்துதிசெய் யேந்தறனைத்—தப்பாமற்
செந்நெல் விளையுந் திருச்சவ னேசுரனை
யின்னலற வேதுதிப்பா யே (910)

## திருத்தூமகேசுரம் வெள்ளக்கம்பம்

கண் † டென்று மேவுவலக் கண்ணனை யன்பினித
முண்டென்று நாளு முறுதியா—விண்டு
திருத்தூம கேசுரம்வாழ் தேவனையே வாழ்த்து
வருத்தூமன் போலிருக்கா மல் (911)

## திருக்கசாசுரேசுரம் கள்ளக்கம்பம்

தன்னைநிக ரில்லாத தற்பரசி காமணியே
யுன்னையல்லால் வேறோ ருதவியுண்டோ—மின்னுஞ்
சுகசாசு ரேசுரம்வாழ் தோன்றலே யெற்குத்
தகவார்செல் வப்பெருக்குத் தா (912)

## திருக்கச்சி மயானம்

சாற்று $மடி யில்லாமற் றண்கமலத் தாளிணையைப்
போற்றுமடி யார்க்கருள்செய் புண்ணியனே—யேற்றமிகு
காரணனே மிக்கதிருக் கச்சிமயா னத்திலம
ராரணனே நாயேனை யாள் (193)

## திருயருணேசுரம் வாலீச்சுரம்

¶ இக்குமணி யார மிதழி மணியார
மக்குமணி யார மணிமுதலே—மிக்கதிரு
மாட்சியரு ணீசுரம்வாழ் மாதேவா நாயேற்குக்
காட்சியரு ணீவரசு கா (914)

## திருக்கதிப்பிரதேசுரம் கச்சபாலயம்

கும்பமுலை யார்மயலைக் கொண்டலையும் நாயேற்குன்
றம்பமுலை யாதருள்செய் தற்பரனே—வின்பக்
கதிப்பிர தேசுரம்வாழ் கத்தனே யன்பர்
மதிப்பதிக மானவர தா (915)

## திருமைசூரேசுரம் காரோணம்

எழிலார் மதிவேணி யென்றனையா ளம்பு
விழியா ளுடனமருவு மேலோ—யழியாத
பொன்னுரு மைசூர் புரக்கு மருட்கடலே
மின்னுருஞ் செல்வமுற வே (916)

---

† என்று-சூரியன். $ மடி-சோம்பல்.

¶ இச்கு-இந்தப்பூமியிலுள்ள.

## திருபல்லேசுரம் பணாதர்ச்சுரம்

கந்தருவர் சித்தர் கணநாதர் விஞ்சையர்விண்
ணந்தருமர் போற்று மருணையா—சந்தமிடு
பல்லே சுரத்திலமர் பண்ணவனே மெய்ஞ்ஞான
நல்லா யுனதருளே நல்கு (917)

## திருக்கச்சிமயானம் சுரகரீச்சுரம்

தேவர் முனிவர் திசைமுகனுங் காணாத
மூவர் முதலான மூர்த்தியே—பூவதனில்
வாவாநீ கச்சி மயானமமர் தற்பரமா
தேவா மிடியகலச் செய் (918)

## திருவிஜயநகரம் பராசரீசம்

அந்தவிபத் தோலணிந்த வையனே நாயேனைப்
பந்தவிபத் தாலழுந்தப் பண்ணாதே—சந்ததமும்
விண்ணவர்கள் போற்றும் விசையநக ரத்தனே
பண்ணவனே யென்றனைக்கண் பார் (919)

## திருவிராடபுரம் வீரட்டாகாசம்

வாயடியா ரன்பு வகையே தெரியாத
நாயடியே னுன்றனையே நம்பினேன்—மீயகம்போய்
விண்ணுலவுந் தூவி விராடபுரந் தன்னிலமர்
கண்ணுதலே யென்னையென்றுங் கா (920)

## திருமாணீசுரம்

பண்ணவர்கள் போற்றும் பரனே பரஞ்சுடரே
யெண்ணவர்க ளுக்கருள்செய் யேந்தலே—வண்ணவிடை
மீதேறி வந்தெல் விளங்குமா ணீச்சுரம்வாழ்
மாதேவ னேயாளு வாய் (921)

## திருத்தடாதகேசுரம உருத்திரகோடி

அம்பு வனக்கண்ணு ளம்பிகையா ளோர்பாகச்
சம்புவனற் கண்ணூர்ந்த சங்கரனே—யும்பரா
ரந்தடாதகே சு ரபுரத்தோ யன்பரோ
டெந்தனையுஞ் சேர்ப்பா யினி (922)

## திருமகாசாத்தன்றளி

சிந்தோ னந்திவண் ணன்பரமன்
சோதியழ லைந்திபுலித் தோலுடைய—மாதேவன்
சாத்தன் றளியிலமர் தற்பரன் றுனெஞ்சே
காத்தன் றளிபுரிவன் காண் (923)

## திருப்பெருநகர்

தாயகத்த ஞனபர தற்பரனே வாள்விசையன்
சாயகத்தா லேயடிகொள் சங்கரனே—தூய
பெருநக ருக்கரசே பெம்மானே யென்னை
யிருமையுங் காத்தருள்செய் யே (924)

## திருமலையனூர்

பாணிக் கபால பரம்பொருளே மன்மதனை
நாணிக் கவிழச்செய் நம்பநீர்—வேணியனே
பொங்குதிரு மாது புகழ்மலைய னூர்க்கரசே
தங்குதிரு வாழ்வெனக்குத் தா (925)

## திருக்கோளேசுரம்

அஞ்சக் கரத்தா னயன்றேடு தற்கரிய
வஞ்சக் கரத்தானே யாண்டவனே—மஞ்சமருங்
கொந்தலருஞ் சோலை குலவுகோ ளேச்சுரனே
சிந்தையில்வைத் தேனருணீ செய் (926)

## திருவையங்குளம்

கலையாவுந் தேர்ந்த கவிமகளென் னாவி
னிலையா யிருக்கவர நீசெய்—மலையரசே
வையங் குளத்தில் வளமாக வேவளரு
மையனே யென்னையுகந் தாள் (927)

## திருக்கூத்தனூர்

கூத்திசைய வேசெய்யுங் கொற்றவசெவ் வேணியனே
மாத்திசையெல் லாம்புரக்கும் வள்ளலே—நீத்தமணி
கண்ணியனே கூத்தனூர்க் கத்தனே யென்றனையாள்
புண்ணியனே சங்கரசம் பு (928)

## திருக்கச்சையூர்

மாம தலையணிந்த மாமறையோன் காணாத
காமதக னத்தனே காவென்பாய்—நீமனமே
யாண்டவனைக் கச்சையூ ராதிபனைத் தில்லையிற்செய்
தாண்டவனைத் தேடிநிதந் தான் (929)

## திருப்பனங்காட்டூர்

அரகரா ஞானத் ததிபதியே மால்சேர்
புரகரா வன்பரையாள் போதா—விரதனையாள்
சீரார் பொழில்சூழ் திருப்பனங்காட் டூர்க்கரசே
யேரார் பொருளுதவி யே (930)

## திருக்கூடலூர்

வந்திக் கமல மகற்றி வரனேயென்
புந்திக் கமலத்துட் புக்கிருப்பாய்—முந்தித்
திருக்கூரூ ரானசிவச் சீர்நகர்க்கோர் கோவே
மருக்கூர் மதலைபுனை வாய் (931)

## திருப்பேற்றூர்

ஈசனே யென்ற னிருதயத்தி னீங்காத
வாசனே ஞானத்தி வாகரனே—பேசுமெற்குப்
போதா திருப்பேற்றூர்ப் புண்ணியனே யன்பர்சூழ்
நீதானற் செல்வமரு ணீ (932)

## திருக்காற்றூர்

கன்னலொடு செந்நெல் கமுகு விளைவோங்கி
நன்னலஞ்சேர்ந் தோங்கு நறும்பணைசூழ்—மன்னுந்
திருக்காற்றூர் வாழ்முதலே தேவர்சூழ் தேவா
செருக்காற்று வாழ்வையருள் செய் (933)

## திருக்கறையூர்.

பங்கத்தில் வீழாமற் பண்ணுமடி யார்க்காகச்
சங்கத்தி னின்ற தனிப்பொருளே—யெங்குமொளிர்
சேணுலவு தூவித் திருக்கறையூர்க் கோரரசே
தாணுவெ யெற்கருணீதா. (934)

## திருப்பாட்டூர்.

பண்ணவனே செய்ய பரம்பொருளே யென்றனையா
ளண்ணலே ஞானத் தமர்ந்தவனே—பண்ணைகளி
லிக்கான தோங்கி யிலங்குதிருப் பாட்டூராய்
மிக்கான செல்வமுத வே (935)

## திருப்பேரனூர்

மண்ணவர்க்கும் பாதலத்து வாழ்பவர்க்கு மாதவர்க்கும்
விண்ணவர்க்குங் காணரிய வித்தகனே—வண்ணமிகு
சீரணிந்த செல்வத் திருப்பேர னூரரசே
யாரணிந்த வேணியழ கா (936)

## திருஅரணநல்லூர்

நீதத்துக் கோர்மறையாம் நேயத்துக் காலயமாம்
வேதத்துக் குட்பொருளாம் வித்தகனே—போதத்
திருவரண நல்லூர்வாழ் தேவனே யெற்குத்
தருவரமிப் போதேநீ தா (937)

## திருக்கொடுங்கோவலூர்

கொன்றைமதி யென்பறுகு கோலவர வம்புனைந்து
குன்றையொரு வில்லாகக் கொண்டவனே—நன்றுடையோர்
கூறு திருக்கொடுங் கோவலூர்த் தேவனே
யேறுதிருச் செல்வமரு ளே (938)

## திருச்சென்னை

கன்னல் கமுகரம்பை காசந் தனந்தேக்கு
வன்னமலர்ப் பூங்கா வனஞ்சூழ்—மன்னுதிருச்
சென்னையிலே வாழுஞ் சிவசிதம்ப ரப்பொருளே
யென்னையினி வந்தருள்வா யே (939)

## திருத்தண்டகாரணியம்

தண்ணீர்மண் விண்ணாதி தானாகி யெவ்வுயிர்க்குங்
கண்ணியமாய் நின்றருள்செய் கர்த்தனே—யெண்ணுங்காற்
தண்டகா ரண்யத் நல்த்தரசே யென்னிருகண்
கண்டவாத் திரவந்து கா (940)

## திருஅரன்வாயல்

அத்திமலர் சூடு மரனே யரும்பொருளே
யெத்திசையும் போற்ற வெனக்கின்றே—சித்தியொடு
முந்தரன்வா யற்பதிவாழ் முக்கணனே தக்கநிதி
சுந்தரம தாயருள்வந் து (941)

## திருக்குத்தாலம் கோமளூர்

நின்றவனத் தின்மலரா நின்பதமர்ச் சித்தறியேன்
யென் § றவலைத் தீர்த்தருள்செய் யேந்தலே—யென்றுமே
குற்றாலந் தன்னிற் குடிகொண்ட வாகொடிய
மற்றால முண்டவசி வா. (942)

## திருச்சங்கரனமர்ந்தல் சங்கையூர்.

ஆனந்த மாக வருள்வீர் புலவீர்கா
டானந்த மானசிவ தற்பரனே—ஞானத்
திருச்சங் கரனமர்ந்தத் தேவனையே போற்றி
யுருச்சங்க ராவெனநின் றோது. (943)

## திருப்புதுச்சேரிசாமலை

நாதனே ஞான நடேசனே செய்யமனு
நீதனே செல்வமிக நித்தமுந்தா—போதப்
புதுச்சேரி யென்னும் புனிதநக ரானு
மதுச்சேர் தருமொழித் தேவா (944)

## திருச்சிவாசல்ம்

சித்தியரு ளோடுதவஞ் செய்பவரும் நாரைக்கு
முத்தியருண் மெய்ஞ்ஞான மூர்த்தியே—நித்தஞ்
சிவாசல மாநகர்வாழ் தேவா வடியே
னவாசலன மாற்றி யருள். (945)

## திருமிரைக்காடு

நீதம்ப மென்றடியே னின்றிறைஞ்சி னேனெனையாள்
வேதம் புகழ்ஞான வித்தகனே—போத
மிரைக்கா டுவந்தருள்செய் வித்தகனே நீடு
நரைக்காவல் கொண்டவர நா (946)

§ தவல்-குறைறு.

## திருஇரைக்காடு

பத்தசனங் கட்குதவு பண்ணவனே விற்கரும்பாஞ்
சித்தசனங் கத்தையெரித் திட்டசெய—சத்தே
யிரைக்கா டெனும்பதிவா ழேந்தலே வந்தாள்
வரைக்காவ லாயிருந்த வா (947)

## திருத்தலையாலங்காடு

பண்டலத்தை யுற்றிடும்யாழ்ப் பாணனுக்கா மெய்வருந்த
மண்டலத்தி லிந்தனத்தை வந்துவிற்றாய்—வண்டதிருந்
தண்டலையா லங்காட்டுர்த் தற்பரனே யென்றனையாள்
மண்டலைவா முஞ்சடைத்தே வா (948)

## திருஞாழற்கோயில்

நூலவிடை யாளுமைம ஞேகரத யாபரசு
சீலவிடை மீதுவருஞ் சிற்பரனே—கோலமிகு
ஞாழற்கோ யிற்கரசே நற்றனத னுக்குநிகர்
வாழற்கு மாநிதிதா வா (949)

## திருமணிக்கோயில்

மன்னுகிரு பாகர வரோதய வசீகரனே
துன்னு சிவாசரத சுந்தரனே—யென்னு
மணிக்கோயின் மாநகர்வாழ் வள்ளலே யென்னுள்
ளணிக்கோயி லாகவிருந் தாள் (950)

## திருக்கச்சிப்பலதளி

§ ஏற்றுஞ் சிவக்ஷேத்திரமாலை யென்றடியேன்
சாற்றுமிசைச் செந்தமிட்குத் தந்தருள்வாய்—போற்றுதிருக்
கச்சிப் பலதளிவாழ் கத்தனே தற்பர [னே]
மெச்சிப் பலநிதிமென் மேல் (951)

## திருக்குரக்குத்தளி

புல்லறிவை யுள்ளவர்பாற் போகா தறிஞர்புகழ்
நல்லறிவை யீங்கெனக்கு நல்கியே—வல்லமறை
சாற்று குரக்குத் தளிநகர்வாழ் தேவாநீ
மாற்று குரக்கு மனம் (952)

---

§ ஏற்றும்-உயர்த்தும்.

## திருராமனதீசுரம்

§ ஆனை யுடையானை § யானை யுடையானை
மானை யுடையானை வாழ்த்துநெஞ்சே—ஞானமிதே
தேறுதிரு ராமனத் தீச்சுரத்தே வன்னருளாற்
சீறுதிருச் செல்வஞ்சே ரும் (953)

## திருவெள்ளியங்கிரி

ஓங்கி யலையுமுலை யொண்டொடியார்க் குள்ளாகித்
தேங்கி யலைந்து திரியாதே—யீங்குநெஞ்சே
வெள்ளி மலையானை மேல்வி மலையானை
யுள்ளி மலையா துணர் (954)

## திருஉத்தரமல்லூர்

நின்பாதந் தன்னை நெடுநாளா கப்பணிந்தே
னன்பாக வந்தென் னகமிகிழ—வின்பாய்த்
திருவுத் தரமல்லூர்த் தேவா வடியேற்
கொருவுத் தரஞ்சொ லுகந்து (955)

## திருச்சீகாளிபல்லேசுரம்

யோக்கியமு ஞானத் துயர்வுந் திருச்சகல
பாக்கியமுஞ் சேரும் படியருள்சி—லாக்கியனே
சீகாழி யென்னுமாச் சீர்நகருக் கோரரசே
மாகாளி யோடாடு வாய் (956)

## திருப்பத்திரகாணேசுரம்

ஆலடியின் மேவு மரனே யயன்முடியு
மாலடியுங் காணாத வள்ளலே—சீலவுமை
பாகா திருவுலவு பத்திரகா ணேச்சுரம்வாழ்
யேகா சரதவா னே (957)

தொண்டநாடு முற்றிற்று.

ஆகநாடு அ-க்கு ஸ்தலம் 957, கவி-958.

திருச்சிற் றம்பலம்.

---

§ ஆனை-இடபவாகனத்தை. §ஆனையுடை-ஆனைத்தோலாடை.

# வடநாடு.

## திருப்பருபதம் மல்லிகார்ச்சுனம் ஸ்ரீசைலம்

சங்கரகிர் பாகர தயாபரவ சீகரனே
மங்களகு ணாகரவ ரோதயனே—யிங்குவரங்
காட்டு திருமல்லி கார்ச்சுன நற்றலத்தி
னூட்டுதிருச் செல்வமிக நல்கு (958)

## திருமகேந்திரமலை

சம்பரா ரிச்சுடலைச் சாம்பராத் தான்செய்த
வம்பரா சங்கரா வாண்டவனே—யிம்பர்
மகேந்தி ரமலையாய் வெள்ளிலை யென்னைச்
சநேந்திரனாச் செய்யவரந் தா (959)

## திருஅத்தமனமலை

முன்னாளி லன்பர் முடிவணங்கி யீசனா
லெந்நாளு முத்திநக ரெய்தினார்—துன்னு
நிலையத் தமனமலை நித்தனையே சூழா
தலையக் கிடைத்ததென் சொல்லாய் (960)

## திருயேமகூடமலை

முந்த விசையன் முழுமுதலைக் கண்டுதொழு
தந்தவரம் பெற்ற தறிந்திருந்துஞ்—சிந்தையே
கோணா தருளேம கூடமலை யான்பதத்தைக்
காணாத கண்ணென்ன கண் (961)

## திருச்சந்திரகிரி

இரவுபக லாக விருதைமுடி யேற்றி
பரனைத் தொழுதுபதம் பெற்றார்—தெரிந்திருந்துந்
தண்டுலவும் பூந்தடஞ்சூழ் சந்தரகிரி யாதிபனைக்
கண்டுதொழாக் கைகளுலக் கை (962)

## திருஇராப்பட்டீசுரம்

சிவதலங்கள் சென்றுகண்டு சேவைசெய்தார் மிக்க
தவஞ்செய்தார் முத்திபெற்றார் தாமே—யவலநெஞ்சே
பண்டுரகம் பூணிராப் பட்டீச் சுரத்தானைக்
கண்டுதொழாக் கைகளென்ன கை (963)

## திருவாரணாசிமயிண்டீசுரம்

சீர்மதியைச் சூடியருள் சின்மயனே நாயடியே
னோர்மதியு மில்லா துழல்கின்றேன்—பேர்மதில்சூழ்
வாரணா சிக்கரசே வள்ளலே முத்தொழிற்குங்
காரணா சீக்கிரம்வா கா (964)

## திருகோசலம் அயோற்றி

தேசில்லா லோபிகள்பாற் சென்றவர்கண் மீதிலே
மாசில்லாச் செந்தமிழை வாழ்த்தாது—பேசுபுய
மந்தரத்தா னேகனக மாகோ சலம்பதிவா
ழந்தரத்தா னேயெனைவந் தாள் (965)

## திருநாராயணபுரம்

அவ்விடத்துக் கோரிருப்ப தாகியநற் கண்டனே
யெவ்விடத்து மேன்மையெனக் கெய்தவே—செவ்விதமாய்
நாரா யணபுரம்வாழ் நாதா சிவாகமங்கள்
பாரா யணம்புரியப் பண் (966)

## திருவீரபத்திரேசுரம் வீரனூர்

பந்தணியி லங்குமுலைப் பார்பதியோர் பாகமிசை
யிந்தணிச டாமகுடத் தேந்தலே—வதெனையே
வெற்புத் தவரானே வீரபத்தி ரேச்சுரம்வாழ்
கற்புத்த வருனே கா (967)

## திருத்தாம்பிரத்து வரேசுரம்

துன்றுவரை வில்லான சுந்தரனை நீமனமே
யின்றுவரை வாழ்த்தா திருந்துவிட்டாய்—நன்றிங்
கியரும் பிரத்துவ ரேச்சுரனை யேத்துஞ்
செயரும் பிறக்கமகிழ்ந் தே (968)

## திருச்சிந்து ரேசுரம்

திங்கள்புனை வேணிச் சிவனே பராபரனே
யெங்கள்பொன் னம்பலந டேசனே—யிங்குலகோ
ரேத்து திருச்சிந்து ரேசுரத்தில் வாழ்முதலே
காத்துதவி செய்தருள்வாய் காண். (969)

## திருப்பாவதேசுவரம்

மாதேவா வென்று வணங்குவோ ரைத்தள்ளி
மாதேவா வென்று வணங்கினே—னேதேவா
சொற்பரவ தேசுரம்வாழ் சுந்தரனே செல்வமருள்
பொற்பரவ ணிந்தபுனி தா (970)

## திருத்தனதனேசுவரம்

காமந் தருவானைக் காய்ந்தவா நற்றுணையாய்
மாமந் தரபுயனே வந்தெனையாள்—பூமுடியிற்
சூழச் சடையானே சொற்றனத னேச்சுரத்தோய்
வாழச் சடையாதாள் வா (971)

## திருமரீசேசுரம்

காமனையன் றேயெரித்த கண்ணுதலே நின்றுதிசெய்
நேமனையின் றுண்டருள்வாய் நின்மலனே—பூமருவு
மாவந்துறையு மரீசே சுரத்திலமர்
நீவந் துறையுளத்தி னில் (972)

## திருஅருணேசுவரம்

நாகத்தைப் பூண்டசிவ நாயகனே நாயடியேன்
சோகத்தை மாற்றிச் சுகந்தருவாய்—மாகத்
தருணே சுரத்திலம ரத்தனே செல்வப்
பொருணேச மாகப் புரி (973)

## திருஅரிகேசுவனேசுரம்

அங்கரட குஞ்சரத்தை யங்கா ளுரித்துடுத்துஞ்
சங்கரனே ஞானத் தயாபரனே—யிங்கெனது
நேயவரி கேசவ னேசுரத்தில் வாழ்முதலே
யாயவரி தாநிதிதந் தாள். (974)

## திருஇந்திரத்துவசேசுரம்

எந்தையே யாதி யிறையே பரம்பொருளே
சிந்தையே கூர்ந்தசிவ சின்மயமே—விந்தைமிகு
சுத்தனே யிந்த்ரத் துவசே சுரத்தில்வள
ரத்தனே யிந்துமுடி யா; (975)

## திருக்காமதேனேசுரம்.

உற்றமே லாதார முன்னையல்லால் வேறுமுண்டோ
குற்றமே லாகாதாட் கொண்டருள்வாய்—கொற்றமழைக்
காருலவுஞ் சோலைசூழ் காமதே னேச்சுரம்வாழ்ந்
தேருலவுஞ் செஞ்சடையா னே. (976)

## திருஇரவேசுவரம்.

கோளுஞ் சடையாது கூடுமதி யைப்புனைந்த
நீளுஞ் சடையானை நேர்மனமே நாளு
மினமே வுனக்கிங் கிரவே சுரனாற்
கனமே வுனக்குண்டாங் காண் (977)

## திரு அவிகேசுவரம்.

எத்திக்கும் போற்று மிமைய வரையீன்ற
சத்திக்கோர் பாகந் தருமுதலே—நித்தியமு
மந்தரனே மேலா மவிகே சுரத்திலமர்
சுந்தரனே வாழ்வருள்வந் து. (978)

## திரு அமரேசுவரம்.

பாசுரமுன் னோர்புலவன் பாடலுக்குத் தந்தருள்செய்
யீசரனே யென்றனை யிரக்ஷிப்பாய்—பூசுரர்சே
ரன்பாக நாளு மமரே சுரத்திலமர்
மின்பாக மானபர மே (979)

## திரு அரிப்பிரமேசுவரம்.

அக்கலியா மென்ன வருந்துயரை யுண்டாக்கு
மிக்கலியால் வாடி யிடையாது—தக்கபுக
ரத்தி புரியானே யரிபிர மேசுரத்தோய்
பத்திபுரி யானெனைக்கண் பார் (980)

## திருப்பிரமாண்டேசுவரம்.

முன்னைப் பணியணிந்த முத்தனே நாயடியே
னுன்னைப் பணியவரு ளுத்தமனே—துன்னு
வரதருவந் தேத்துபிர மாண்டே சுரத்தோய்
சரதருவந் தேத்துவிர தா (981)

## திருவைராக்கியேசுவரம்.

பொன்னுரு மேற்கருள்செய் பூசுரனே பொற்புலவு
மின்னுரு மோர்பாக மேவியவா—விந்நாளில்
வைராக்கி யேசுரம்வாழ் வள்ளலே நிற்றுதிசெய்
வைராக்கி யத்தையருள் வாய் (982)

## திரு ஆனந்தகேசுவரம்.

கடாக்களிறும் வாகனமாங் கந்தனென வந்த
சடாக்கரனை யீன்றகுரு சாமி—தடாதகையோ
டானந்த கேசுரம்வா ழுத்தமனே நாயேனுக்
கானந்த வாழ்வருளை யா (983)

## திருக்கலபகேசுவரம்.

காசாசை கொண்டு கலங்கு மடனெஞ்சே
தாசானு போகந் தழைக்கநீ—கூசாதே
கீர்த்திமிகச் சேர்கலப கேசுரத்தில் வாழ்முதலைச்
சீர்த்திமிக வேறுதுதி செய் (984)

## திரு ஆமகேசுவரம்.

சந்ததமும் போற்றுதல்செய் தன்னடியா ரின்னலெலாம்
வந்ததம தாக வரந்தருவான்—சிந்தையே
நீடாம கேசுரம்வாழ் நித்தனெற்கு நல்குமருள்
வாடாமலேயவனை வாழ்த்து (985)

## திருவிக்கியானேசுவரம்.

மதியருகு தும்பை மருவளருங் கொன்றை
நதியரவ மேபுனைந்த நாதா—புதிய
மனுவிக்யா னேசுரம்வாழ் வள்ளலேநீயென்
றனுவிக் கினத்தைத் தவிர் (986)

## திருச்சோதீசுவரம்.

வாசனே யீசனே மாரனே நீரனே
நேசனே ஞான நெறியானே—தாசனே
சுந்தரியா ளோடுதிருச் சோதீ சுரத்திலமர்
முந்தரிதா னுடுமுகலே (987)

## திருக்கோவர்த்தேசுவரம்.

சிலமுண்ட கத்தன் சிரத்திலொன்றைக் கிள்ளியெறி
யாலமுண்ட கத்தனெனு மத்தனே—சூலமொடு
கோவர்த்த னேசுரம்வாழ் கோவே யெனையாள்வாய்
பாவத்த னேனைக்கண் பார் (988)

## திருச்சுமித்திராவருணேசுவரம்.

வல்லானே யன்பர் மனத்தானே மாமேரு
வில்லானே வெள்ளை விடையானே—சொல்லார்
சுமித்ரா வருணே சுரத்தோய் தனதன்
சுமித்ரா வருணீ சுகம். (989)

## திருவியாசசேசுவரம்.

கண்பா ரடியேன்கருத்தி லிருந்தாள்வாய்
இண்பார் பணியுந் தியாகேசா—நண்பாகப்
பொங்கரா வேய்ந்த புனிதவியா சேசுரம்வாழ்
சங்கரா சோணு சலா (990)

## திருக்கோளகேசுவரம்.

ஆமித் துருவுனையே யல்லாம லில்லையென
$ நேமிகுத் துன்னை நினைக்கின்றேன்—சாமி
திருக்கோள கேசுரம்வாழ் தேவா கொடிய
தருக்கோடச் செய்வாய்நீ தான் (991)

## திருப்பாடபேஸ்வரம் மேருகிரி.

வெண்மதியைச் சூடியசெவ் வேணியனைத் தூயநறும்
பண்மொழியி னம்பிகையாள் பாகனை—விண்பரவு
நற்றவரா மேருகிரி நாதனையே யல்லாது
மற்றவரைப் பாடாதென் வாய் (992)

## திருஇமைய கிரி.

தருமமுடை யானே சசியுமுடை யானே
சருமமுடையானே சார்ந்து—விரைவா
யிமையமலை தன்னிலம ரீசாநா யேற்கிச்
சமையமலை யாதருணீ தா (993)

$ நே—அன்பு.

## திருக்காசிமயானம்.

எந்தையுனை யுண்டென் றிறைஞ்சுமடி யாருளத்தில்
விந்தையுடன் மேவிவளர் வித்தகனே—சந்ததமுங்
காந்தற் குரியானே காசிமயா னத்திறைவா
பாந்தற் குரியாய்கண் பார் (994)

## திருக்குருக்கேத்திரம்.

நந்துலவு செய்யகுழை நாதா திருக்கொன்றைக்
கொந்துலவு வேணியருள் கொண்டலே—வந்து
குருக்கேத் திரத்திலமர் கோவேநீ யெற்குத்
திருக்‖ கேள்வி தந்தருள் செய் (995)

## திருக்காசிமீரம்.

மோன தயாளசிவ முத்தனே சத்வகுண
தீன தயாபரவ சீகரனே—கானமிகு
கத்தனே மிக்கதிருக் காஸ்மீரந் தன்னிலம
ரத்தனே நித்தமெனை யாள் (996)

## திருச்சாவித்திரேசுவரம்.

முந்தை வினையோ முதல்வா வுனைக்கருதா
வந்த வினையோ வலைகின்றே—னெந்தவினை
தானோ வறிகிலேன் சாவித்தி ரேசுரத்தோய்
நானோ மகிழவரு ணல்கு (997)

## திருவிந்தமலை.

வேலையினு நீண்ட விழியார் மயறவிர்த்து
மாலையினுங் காலையினு மாமகிழ்வாய்—¶வாலையுறு
தந்தமலை யானையுரித் தற்பரனே விந்தமலை
வந்தமலை வில்லானை வாழ்த்து (998)

## திருரிசிகேசு.

நீதி மறையவனு நீடருமா லுஞ்சிறந்த
வாதிமறை யுந்தேடு மத்தனே—நீதிமிகு
மையரிசி கேசுரம்வா ழத்தனே யென்றனையாள்
செய்யவிசு வேசுரதே வா (999)

‖கேள்வி-கல்வி ¶வால்-வெண்மை

### திருஇலட்சுமணகேசு

திடனாக மேவுந் திரிபுரத்தைக் காய்ந்த
படனாகப் பூணு பரனு—யிடமா
விலக்குமண கேசுரம்வா ழீசாவென் றன்பம்
விலக்குமதி செல்வமுற வே (1000)

### திருச்செகநாதம்

†மாதவத்தி லெய்தாது வந்திதனை யின்பமுற
மாதவத்தி லேபொருந்த வைத்தவா—நீதச்
செகநாத மென்னவுயர் சீர்த்தலத்துத் தேவா
யுகநாத னேயாள்வந் து (1001)

### திருமன்மதேசுரம்

தங்கலிலா தெற்குத் தரித்திரமே செய்துவைக்கும்
வெங்கலியைத் தூர விரட்டியெனை—யிங்கா
டிருமன்ம தேசுரம்வாழ் தேவாமுன் போரி
லுருமன் மதனையெரித் தோய் (1002)

### திருவநேகதங்காவதம்

அம்பரநேர் கண்வள்ளி யம்மைகண வற்பயந்த
சம்பரமகோ லாகலத யாபரனே—கம்பமத
யானையுரித் தோனே யநேகதங் காவதத்தில்
மானைத் தரித்தவனே வா (1003)

### திருஇந்திரனீலப்பருபதம்

மிக்க சிவகாமி வேந்தனே நாயேனைச்
சிக்கனவே காத்தருளல் செய்வதற்குத்—தக்கதிரு
நேசத் திருவிந்தர நீலப் பருபதம்வாழ்
வாசத் திருமணியே வா (1004)

### திருக்கேதாரம்

ஆதார மான வரும்பொருளே யென்றனக்குப்
பாதார விந்தமருள் பாலிப்பாய்—சீதார
விந்தமென வோங்கி விளங்குதிருக் கேதாரம்
வந்தமர்ந்த நாயகசி வா (1005)

†மாது-அசை

## திருக்காசி

இறைசங் கரசம்பு வென்றுதின மேத்தி
யறைகின்ற தொண்டனெனை யாள்வாய்—நிறைசீர்த்
திருக்காசி யானதிருச் சீர்த்தலத்தில் மேலா
மிருக்காதி தேடுமிறை யே (1006)

## திருமகாநந்தி

வானரட்ச காபரமா வந்துநீ யென்னையா
டீனரட்ச காசிவசி தம்பரனே—ஞான
மகாநந்தி யூரிலமர் மங்கைபா கத்தோய்
சுகாநந்த வாழ்வருள்வந் து (1007)

## திருக்கைலாயம் வெள்ளியங்கிரி திருமலை

கண்டங் கரியவனே கண்மூன் றுடையவனே
யண்டரெலாம் போற்ற வரியவனே—சண்டனையுங்
காலா லுதைத்தவனே கைலைக் கதிபதியே
யாலால முண்டவனே யாள் (1008)

## வாழி

மாமாரி வாழிபயிர் வாழிமறைவாழி
கோமான் றுளசிநகர்க் கோன்வாழி—பூமாது
வாழி சிவாலயங்கள் வாழியிதைப் படிப்போர்
வாழியுல கோர்களும் வாழி

## திருவாழி விருத்தம்

காரும் வாழி கதிர்மதி வாழிபைங்
காவும் வாழி துளசி நகரெனு
மூரும் வாழியவ் வூரினில் வாழ்ந்தரு
ளோங்கு மால்விசு வேசரும் வாழிதஞ்
சீரும் வாழியிவ் வாயிரத் தெட்டெனும்
க்ஷேத்தி ரங்களும் வாழ திரைபெறும்
பாரும் வாழிசொற் பாவலர் வாழிநற்
பாவும் வாழி படிப்பவர் வாழியே.

ஆசுநாடு 9-க்கு, ஸ்தலம் 1008, கவி 1012.

**ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரமாலை முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# அட்டவணை.

## பாண்டிநாடு.

ஈழநாடு.



மலைநாடு.

## கொங்குநாடு.



## துளுவநாடு.



## சோளநாடு.

## மகதநாடு.

தோண்டநாடு.

ஆக நாடு 9-க்கு ஸ்தலம் 1,008. கவி: 1,012.

முற்றிற்று.

